# யூகி முனிவர் வாத வைத்திய உலா ஆயிரம்

## சித்த மருத்துவ நூல்

ந. சேதுரகுநாதன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை

# யூகி முனிவர் வாத வைத்திய உலா ஆயிரம்

## சித்த மருத்துவ நூல்

ந. சேதுரகுநாதன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

பதிப்பு எண் : 150

விலை : ரூபாய் 65/-

பதிப்பு விவரங்கள் :

1. ஆசிரியர் : பேராசிரியர் டாக்டர் ந. சேதுரகுநாதன்

2. தலைப்பு : யூகி முனிவர் வாத வைத்திய உலா ஆயிரம் சித்த மருத்துவ நுல்

3. பதிப்பு

அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 625 021.

ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 625 021.

இ) ஆண்டு : 1998

ஈ) பக்கங்கள் : 252+4

உ) பொருள் : சித்த மருத்துவம்

ஊ) படிகள் : 600

எ) அச்சும் அமைப்பும் : லிட்டில் ஸ்டார், மதுரை - 625 021.

# முகவுரை

யூகி முனிவர் வரலாற்றைப் பற்றிப் போகர் ஏழாயிரத்தில் நாலாவது காண்டத்தில் அறுநூற்று இருபத்திரண்டாம் பாடல் முதல் அறுநூற்று முப்பது மூன்றாம் பாடல் வரை கூறப்பெற்றுள்ள கருத்துக்களையும் பாடல்களையும் நோக்குவோம்.

யூகி என்ற முனிவர் சித்தர்களில் ஒருவர். இல்லற வாழ்க்கையில் பெருமிதத்துடன் நெடுங்காலம் இருந்தார். இவர் சமதக்கனி முனிவருக்கும் திரணாக்கினி முனிவருக்கும் குரு. இவரின் பெரும் புகழை என் குருவாகிய காலாங்கிநாதர் அடியேனுக்குச் சொன்னார். பண்பான யூகிமுனி என்பவர் உலகத்தில் தென்னாட்டு வளாகத்தில் மலைவளம் கண்டு சுற்றி வரும் பொழுது பன்றிமலைக்கு வந்து அதன் வளத்தைச் சுற்றிப் பார்த்து அதன் நடுக்காட்டிற்கு செல்லும் பொழுது வலிய குத்துக்கல் ஒன்று அங்கே நிற்கக் கண்டார். அந்த மலையோரம் அவர் ஒடுக்கம் அமைத்து மகிழ்வுடன் இருக்கும் காலத்தில் தன்னொடுக்கத்தின் பக்கத்தில் கிடுகிடென்ற பேரொளி கேட்டுத் திடுக்கிட்டு மெய்மறந்து நின்றார். அப்பொழுது அவர் முன் ஓர் அறிவுப் பேரொளி வந்து நின்றது. அந்தச் சித்தொளியைக் கண்டபோது அது கண்காணாப் பேரொளியாகவும் சொல்லிற்கு அடங்காததாகவும் தோன்றிற்று. அண்ட சராசரங்களெல்லாம் கிடுகிடுத்து நடுங்கின. அவ்வொலியைக் கண்டு யூகி முனிவர் மயங்கிப் போனார். வணங்கி விழுந்து கண்திறந்து பார்க்கும் பொழுது தெளிவான ஸ்ரீசம்பாரமுனிவரைக் கண்டார். அவருடைய ஒளி வண்ணத்திரு மேனியின் தோற்றம் காண முடிந்தது. கண்டவுடன் சித்து பாலராகிய யூகி முனிவர் ஸ்ரீசம்பார முனிவருடைய திருவடிகளைத் தொட்டுப் புகழ்ந்து அவரடிகளில் பணிந்து எனக்கு வேண்டிய வரங்கள் தருக என்று விருப்பத்துடன் கைகுவித்து வணங்கினார். அந்தச் சம்பார முனிவர் யூகி முனிவருக்குப் புகழோடு மெய்உணர்வுப் பயிற்சி பயிற்றுவித்தார். அப்பயிற்சி பெற்ற அவரைத் தமது சமாதிக்கு முன்னே சிலகாலம் இருக்க என்று ஏற்பாடுகள் செய்து தெளிவான முறைமையோடு மீண்டும் சமாதிக்குள் (ஒடுக்கத்திற்குள்) புகுந்தார். யூகிமுனிவர் அங்கே நெடுங்காலம் இருந்தார். பின்னர் தாமும் ஒடுக்கத்திற்குப் புக நினைத்து அதனுள் புகும்பொழுது தாம் வெளிவரும் காலத்தில் நிகழும் அடையாளங்களைக் கல்லின் மேல் வரைந்து வைத்தார்.

யான் வரும் போது. "பாருலகம் கருக்கலாய்ப் பகலிரவும் இரண்டொன்றாய் இருக்கும்" என்று எழுதினார். பின்னர் ஒடுக்கத்தினுள் புகுந்து பலகாலம் இருந்தார். திடீரென்று ஒருநாள் பேரோசை கேட்டது வெளியில் வந்தார்.

"பழுதுபடாத் தேகமது என்ன சொல்வேன் பாரினிலே வெகுகாலம் இருந்து மேதான்
விழுதுபோல் ரோமங்கள் மிக வளர்ந்து விருப்புடன் மேதினியில் வந்தார் கானோ"
"காணவே அதிசயங்கள் சொல்லியே தான் காசினியில் வெளிப்பட்டார் யூகி தாமும்".

காயகற்பம் உண்டார். புகழாக ஒடுக்கத்தில் இருந்து வந்தார். புகழோடு உலகில் கோடி காலம் இருந்தார். கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார். உடலுறுப்புக்கள் வேறுவேறாகத் தனித்தனியே கிடக்கும்படியாகத் தோற்றம் அளித்தார். கைவேறாய்க் கால்கள் வேறாய் உடல் வேறாய்த் தலையும் வேறாய் உலகத்திலிருந்தார். உலகத்தில் சிறப்பாக அவர் ஆடின கூத்துக்கள் மிகுதி. அவரைப் பார்த்தோரும் கேட்டோரும் பாரில் மிகுதி. இந்தக் குருபரனார் நூல்கள் முதலிய எல்லாம் தேர்ந்து யோகம் முதலிய எல்லா உளவுகளும் கற்று என் குருவாகிய காலாங்கி நாதர் மேல் பாசம் வைத்தார். இவர் மிகுந்த சித்து, சொரூப சித்து, வெளியான நாதவொளி அதீத சித்து, எல்லை கடந்த அதிசயங்கள் மிகவும் செய்து உலகில் இருந்தவர்.

போகலா மின்ன மொரு மார்க்கம் பாரு பூதலத்தில் அதிசயங்க ளின்னஞ் சொல்வேன்
வேகமுடன் சித்தர்களில் ஒருவ ரப்பா வுலகு தனி லிருந்தாரே யூகி தாமும்
சோகமுடன் சமுசார வாழ்க்கை தன்னில் செருக்குடனே வெகுகால மிருந்தாரப்பா
சாகமுடன் சமதக்கனி முனிவருக்கும் சார்பான திரணாக்கினி முனிவர் தாமே.

தாமான முனிவருக்குக் குருவேயாகும் தன்மையுள்ள குருவினது கீர்த்திதன்னைக்
கோமானாங் காலாங்கி நாதர் தாமும் கொட்பெனவே யடியேனுக்குரைத்த துண்டு
நாமான மாகவல்லோ வறிந்த மட்டும் நாதாக்கள் வரலாற்றை நாமுரைப் போம்
தீமான மில்லாமல் இடியேன்றானும் திறமுடனே சொல்லுகிறேன் பண்பாய்க் கேளே

பண்பான யூகி முனிவர் யென்போர் தாமும் பாருலகில் தட்சணப் பிரவே சத்தில்
மண்பான மலைவளம் சுற்றும் போது கண்டாரே வராககிரி யென்ற மேரு
திண்பான மலைவளத்தைச் சுற்றியே தான் தீரமுடன் நடுமத்திக் காட தன்னில்
வண்பான குத்துக்கல் கண்டாரங்கே வாகுடனே யதி சய மொன்றிருக்க லாச்சே

இருந்த தொரு அதிசயத்தைக் கண்டாரப்பா எழிலான யூகி முனிச்சித்தர் தாமும்
பொருந்தவே மலையோரம் சமாதி கண்டு பொங்கமுட றானிருக்கும்
காலந் தன்னில்
திருந்தமுடன் சமாதிபுறம் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு மெய்மறந்து
நிற்கும் போது
அருந்துதி போல் சோதியொன்று காண லாச்சு அப்போது சித்தொளி
வைக் கண்டார் பாரே.

கண்டாரே சித்தொளிவைக் கண்டபோது கண்காணாச் சோதிமய
மென்ன சொல்வோம்
அண்ட சார சரங்களெல்லாம் கிடுகிடுத்து அங்ஙனவே வொளிதனிலே
மயங்கிப்போனார்
தெண்டமுடன் கண்திறந்து பார்க்கும் போது தெளிவான ஸ்ரீசம்பாரனையுமப்பா
பண்டு மிகப் பிரகாய்ந்தான் பாரினிலே தோற்றமது காணலாச்சே.

காணவே யூகிமுனி சித்துபாலன் கண்டாரே ஸ்ரீசம்பாரனையர் தன்னைத்
தோணவே யவர்பாதந் தொட்டுமேதான் தொல்லுலகில் கீர்த்தியுடன் அடிபணிந்து
வேணதொரு வரமெனக்குத் தருகவென்று விருப்பமுட னஞ்சலிகள்
செய்து கொண்டார்
ஊணவே ரிஷியாரு முனியாருக்குப் புகழாக ஞானோபதேசஞ் செய்தார் பாரே.

பாரே தான் ஞானோபதே சம் பெற்றுப் பாலகனும் சமாதிக்கு முன்னதாக
கூரேதான் சிலகாலம் இருக்க வென்று கொற்றவனும் வுறுதியது மிகவுமாகித்
தேரேதான் லட்சணங்கள் விதியேற்பாடு தெளிவான முறையோடு சமாதிக்கேக
நேரே தான் யூகி முனி சித்துதாமும் நெடுங்கால சமாதிதனில் இருந்தார் தாமே.

இருக்கவே யூகி முனி சிலதுகாலம் யெண்ணமுற்றுச் சமாதிக்குப் போகும்போது
உருக்கலென்றகல்லின்மேல் வரைந்தரூபம் வுத்தமனே சொல்லுகிறேன்
மைந்தாகேளு

பொறுக்கவே சிலகாலம் சமாதிருந்து புவிமீதில் வரும்போது அடையாளந்தான்
கருக்கலாய்ப் பகலிரவு மிரண்டு மொன்றாய்ப் பாருலகமிருக்குமென்று
எழுதலாச்சே.

எழுதவே சீஷவர்க் கந்தன்னைக் கேட்டு ஏற்றமுடன் சமாதிதனில் அருகிருந்தார்
தொழுதுமே சில்காலம் இருந்தார் ஆங்கே தோற்றமுடன் சத்தமது கேட்கலாச்சு
பழுதுபடாத் தேகமது என்ன சொல்வேன் பாரினிலே வெகுகாலம்
இருந்துமே தான்
விழுதுபோல் ரோமங்கள் மிக வளர்ந்து விருப்பமுடன் மேதினியில்
வந்தார் காணே.

காணவே வதிசயங்கள் சொல்லியே தான் காசினியில் வெளிப்பட்டார்
யூகி தாமும்
பூணவே காயகற்பம் உண்டுமல்லோ புகழாகச் சமாதி தனில் இருந்து வந்தார்
வேணபடி யுபசாரம் அதிகமாகி மேதினியில் தாமிருந்தார் கோடி காலம்
தோணவே கூடுவிட்டுக் கூடுபாய்ந்தார் தோன்றுமல் தேகமது வேறாய்த்தானே.

வேறாகத் தானிருந்த வண்ணம் சொல்வேன் வேண்டியே கைவேறாய்க்
கால்கள் வேறாய்
நேறாக வுடல் வேறாய் தலையும் வேறாய் நேர்மையுடன் பூமிதனிலிருந்த சித்து
சீராக லோக மதில் அநேகங் கூத்துச் சிறப்புடனே யாடினது மெத்தவுண்டு
பாராமல் கேட்டவரும் பார்த்ததோருண்டு பாரினிலே அதியசங்கள் மெத்ததானே.

தானான வதிசயங்கள் சாற்றக் கேளும் தகமையுள்ள குருபரனார் வித்தை தேடி
தேனான நூல்கள் முதல்யாவுந் தேர்ந்து தெளிவுறவே யோகமுதலுளவு கற்றுக்
கோனானயெனதையர் காலாங்கி நாதர் குருபரனாரருளுடனே பாசங்கொண்டார்
வேனான வெகுசித்துச் சொரூப சித்து வெளியான நாதவொளி யதீதமாமே.

## யூகி முனிவர் பிறந்த மாதம் - நாண்மீன்

"சீரான யூகிமுனி பிறந்த வண்ணம் சிறப்புடனே சொல்லுகிறேன் திறமை மெத்த
நேரான ஆவணியாம் திங்கள் அப்பா நெடிதான பூசமது மூன்றாங்காலாம்.
(6 - ஆம் காண்டம் (944)

"தகைகையுள்ள தன்வந்திரிக்குற்ற பேரன், கோனான சிங்களவ குலத்துதித்த
**கொம்பனையாள் கானீனன்**
பெற்ற பிள்ளை, தேனான திராவிடத்திற்சொன்னாற்போல தீர்க்கமுடன்
**வடமொழி**யிற் சொல்லாச்சு.

இதுவரை யூகி முனிவர் வரலாறாகப் போகமுனிவர் கூறியவற்றை நோக்கினோம். இனி கருவூரார் வாதகாவியம் எழுநூற்றில் கூறுவது காண்போம்.

"தரமுள முனிவர் யூகி செய்தகா வியங்கள் ரத்தினம்
உரமுள கம்ப ளத்திலுற்றவரி வருந் தானும்
வரமுடன் தபசு செய்து வகாரத்தில் பேரும் பெற்றுத்
தரமதாய்ச் சித்தரோடு சார்ந்துமே வந்தார் நேரே".

என்பதில் இவர் செய்த காவியங்கள் ரத்தினம் என்று புகழ்ந்துள்ளார். கருவூரார் கம்பளத்திலுற்றவர் என்கிறார். போகர் தாய் சிங்கள குலப்பெண் என்றார். தன்வந்திரி பேரன் என்பது தன்வந்திரி வழி வந்த அசுவினிதேவரையாசிரியராகக் கொண்ட குறிப்பை உணர்த்துகிறது.

யூகியார் தாம் பொன் செய் நூலாகப் பத்தாயிரம் பாடல்கள் செய்தேன் என்று கூறுகிறார்.

## யூகி முனிவர் செய்த நூல்கள்

(1) யூகிமுனிவர் பிடிவாதம் 1000

(2) „ வாதகாவியம் முதற்காண்டம் 1000

„ „ 2 - ஆம் காண்டம் 1000

(3) „ வாதவைத்திய உலா (1000) (4250 வரி)

(4) „ (வாதகாவியம்) கும்மி 1000. (1021 பாடல்)

(5) „ பரிபூரணம் 200, (202 பாடல்)

(6) „ வாதாங்க தீட்சை 300 (302 பாடல்)

(7) „ வாதவைத்திய விளக்கம் 200.

(8) மதி வெண்பா 100.

இந்நூலில் வெண்பா 21 - பாடல்கள் மட்டும் உள. மொத்தம் பாடல்கள் 120. ஆகவே மதிவெண்பா 21 - ம் ஏனைய நூறு பாடலாக வேறொரு நூலாகவும் இருக்கலாம். வெண்பாமுதலாகத் தொடங்கிய காரணம் பற்றிப் பெயர் வந்தது என்றால் மதிவெண்பா 100 என்பதற்குப் பொருளில்லை. பாடலின் தொகை 120 விருத்தமும் கலி விருத்தமும் விரவி வந்துள்ளன.

(9) யூகி முனிவர் கரிசலை 36.

(10) யூகி முனிவர் வைத்திய சிந்தாமணி 800

(11) யூகி முனிவர் வைத்திய சாரசங்கிரகம்

(12) யூகி முனிவர் ஆநந்தக் களிப்பு 100 (கிடைக்கவில்லை)

(இந்நூலை ஆனந்தக் கலிப்பா என்பர்)

(13) யூகி முனிவர் மூதுரை (கிடைக்கவில்லை)

(14) சிங்கியிருப்பு 100

(15) வகுப்பு 34 (உலா 487ல் காண்க)

(16) யூகி முனிவர் பூரணம் 100.

ஆகிய நூல்கள் இருக்கின்றன. இராமகுருசாமிக்கோனார் தாம் வெளியிட்ட அகராதியில் யூகிமுனிவர் வெண்பா நாற்பதினாயிரமும் யூகி முனிவர் பன்னீராயிரமும் உண்டென்றும் அவை கிடைக்கவில்லை என்றும் எழுதியுள்ளனர்.

அகத்தியர் பன்னீராயிரம் வெண்பா நாற்பதினாயிரம் இருபத்தோராயிரம் பதினையாயிரம் இவைகளும் கிடைக்கவில்லை. பன்னீராயிரத்துக்கு சுருக்கவும். "பன்னிரு காண்டச்சுருக்கம்" என வெளிவந்தது. தமிழில் கலைக்கோட்டுத் தண்டு என்ற நிகண்டு நூல் இருந்தது என்பர். கலைக்கோட்டு முனிவர் எழுதிய ககனவித்தை பதினெண்ணாயிரத்து எட்டும், ரசாயனமும் சிற்பமும் பற்றி எழுதிய நூல் நூறாயிரம் பாடலும் எழுதினர் என்றும் அவற்றை யெல்லாம் போகர் அறிந்து நூலாக விரித்தனர் என்றும் கோரக்கர் சந்திரரேகை 189ஆம் பாடலில் கூறியிருக்கின்றனர். ஆகவே கலைக் கோட்டு முனிவரின் தாய்மொழி தமிழ் என்பது உறுதியாகின்றது.

தன்வந்திரி வாதகாவியம் ஆயிரம், தயிலம், வயித்தியம், கருக்கிடை முதலிய நூல்களெல்லாம் தமிழில் உள்ளன. ஆகவே இவருக்கும் தாய்மொழி தமிழ் என்பதும் உறுதியாகின்றது.

இவர் அகத்தியரொடு பழகி நூலாரய்ந்தார் என்று யோகர் எழுதியுள்ளார். போகர் ஏழாயிரம் நாலாம் காண்டம் 934ல்,

'என்னவே தன்வந்திரி என்ற சித்து ஏழிலான காயாதி கற்பம் கொண்டு
தென்பொதிகை தனிற் சென்று மேருதன்னில்
தேற்றமுடன் அகத்தியனார் தன்னைக் கண்டு
சொன்னமொழிதப்பாமல் நயங்கள் பேசிச்
சூழ்ச்சாதி சூழ்ச்சமெல்லாம் அறிந்தார் தாமே'.

அறியவே அகத்தியனார் செய்த நூலாம் அகண்டமெனும் பெருங்கடலுக்கொப்பதாகும்
முறியாமல் தன்வந்திரி செய்த நூலை மூன்று லட்சம் கிரந்தமென வகுக்கலாம்
சரியொத்த நூல்களுமே பாடி வைத்தார் சரியாக அகத்தியரும் அது போல் சொன்னார்
தெரியவேலோகாதி மாண்பருக்குத் தேற்றமுடன் பாடிவைத்தார் நூல்கள் தாமே.
(935)

என்ற பாடல்களால் தன்வந்திரி அகத்தியரோடு பழகித் தமிழாராய்ந்து நூல் செய்தமை புலனாகும். இவர் வடகிரந்தத்தில் பெயர்த்து எழுதினார். தமிழிலும் நூல்கள் எழுதினார். இக்காலம் ஆங்கில மொழியில் நூல்கள் எழுதுவது போல் அக்காலம் தமிழ் நூல்களைக் கிரந்தத்தில் பெயர்த்து எழுதினர். அவற்றையே வட நூலிலிருந்து எழுதியதாகச் சித்தர்கள் கூறுகின்றனர். எனவே அவையெல்லாம் தமிழர்களின் மருத்துவ முறைகளே என்பதனைத் தெற்றெனத் தெளிக.

ஆன்ந்த கந்தம் என்ற நூல் கிரந்தத்திலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப் பெற்ற அரிய நூல். அதன் முகவுரையில் இந்நூற்பொருள் தென்னாட்டுச் சித்தர்களின் பழக்கத்தில் கைகண்ட பொருளென்றும் அவை வடகிரந்தத்தில் பெயர்க்கப்பெற்று மீண்டும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்றும் கூறுதல் காண்க.

வடதுருவம் முதலாகக் குமரிக் கடல் வரையுள்ள இந்தியப் பெருநாடு முழுவதும் கி.பி. 3ஆம் நூற்றாண்டுக்குச் சிறிது முன்போ பின்போ தொடங்கி ஏறக்குறைய முந்நூற்றாண்டுக் காலம் அரசு புரிந்த கங்கர்களின் தாய்மொழி தமிழ் என்பதும் அவர் குலத்தோன்றலாகிய சீயகங்கனே நன்னூல் செய்வித்தவள்ளல் என்பதும் கங்கரே களபிரர் என்று பெயர் வைத்துக் கொண்டவர் என்பதும் (கஜபதி) யானைக் கொடியுடையவர் என்பதும் பொருள்) வரலாற்றுண்மை. ஆகவே தமிழே இந்தியப் பெருநாடு முழுதுவதும் அரசு புரிந்த பெருமொழி என்பதற்கு எவ்வகை ஐயப்பாடும் இல்லை (அது பற்றிய நூல் விரிவாக எழுதப் பெறுகிறது).

"சதுமறை யாரியம்வரும் முன் சகமுழுது நினதாயின்
முதுமொழி நீ அனாதியென மொழிகுவதும் வியப்பாமே"

என்பதும் காண்க. வடமொழியைத் தம்மொழி போல் போற்றுபவர்க்கும் அது தாய் மொழியன்று. அவர்கள் எல்லோரும் உண்மைத் தமிழர்களேயாவர்.

குழூஉக்குறியாகத் தமிழிலிருந்து படைக்கப்பட்ட வடமொழி உலகப்பேச்சு வழக்கில் என்றும் இருந்ததில்லை. இருப்பதும் இயல்பன்று. இந்தியப் பெருநாடு முழுவதிலும் அங்கங்கே ஒவ்வொரு பகுதியிலும் புதிய எழுத்துக்கள் படைத்துத் தமிழ் மொழியைப் பல்வேறு கூறாகப் பல்வேறு மொழியாக ஆக்கிவிட்டனர். தமிழ் நூல்கள் எல்லாவற்றிலும் புகழப்படுகின்ற வேதப்புகழ்ச்சியும் வேதம் என்று கூறப்பெறுகின்ற நூற்பொருள்களும் உண்மைத் திறத்துக்குப் புறம்பானவை என்பது அறிஞர்களின் ஆய்வினால் வெளியாகும் என்பது உண்மை.

தமிழ் நூல்களைக் குழூஉக்குறி மொழியாகிய வடமொழியிலும் கிரந்த மொழியிலும் பெயர்த்து எழுதிக் கொண்டு தமிழ் நூல்களை அழியவிடுத்தனர். அதனாலேதான் அகத்தியம் என்ற இலக்கண நூலும் அகத்தியர் நூறாயிரம் முதலிய பல கோடிக்கணக்கான நூல்கள் அழிந்தன.

யூகி முனிவர்,

"வடகிரந்தம் பார்த்து எழுதினேன்" என்பதெல்லாம் மேற்கூறிய வண்ணம் பெயர்க்கப்பட்டனவே.

சிவன் அம்மைக்குக் கூற, அம்மை நந்திக்குக் கூற நந்தி தன் மந்திரிக்குக் கூற, புலத்தியர் தேரருக்குக் கூற, தேரர் யூகியாகிய நான் உலகம் பிழைக்க ஓங்கு ரசவாதமும் மருத்துவமும் உண்மையாகக் கைபாக வரிசையொடு சொன்னேன் என்கிறார். தன்வந்திரியின் மாணவராகிய அசுவினி தேவரிடம் கற்றதாகவும் கூறுவர். இங்ஙனம் நாலாயிரம் பாடல்களிலும் இடைஇடையே பல இடங்களில் கூறப்பெறுவன ஆய்வுக்கு உரியன. அகத்தியர் தன்வந்திரியின் பால் கற்றார் என்பது போகர் கூற்றுக்கு முரண்படுவதோடு முருகன் தனக்கு ஆசிரியனென்றும் அவன்பால் தாம் நூற்பொருள் பெற்றதாகவும் அகத்தியர் கூறுவதுடன் தமக்கு ஆசிரியர் பிரம முனி என்றும் அவர் பிள்ளை தாம் என்று கூறுவதும் உற்று நோக்குக.

சித்தர் வரலாறு சிக்கல் வரலாறாகவேயுள்ளது. அது பற்றித் தனிநூல் எழுதுவது தகும்.

யூகி முனிவர் தேரரைத் தரையில் விழுந்து பணிந்து கைகட்டி வாய் பொத்தி நின்று நூற்பொருள் கேட்டதாகப் பாடுகின்றார்.

"எனையாண்ட தேரர் பாதம்" என்று கூறி வணங்குகின்றார். அகத்தியரிடம் நெடுங்காலம் தொண்டு செய்து கைபாகம் செய்பாகம் அறிந்ததாகவும் கூறுகின்றார். ஸ்ரீசம்பாரமுனிவரும் யூகி முனிவருக்கு மெய்ப்பொருள் உணர்த்தியவரே. யூகி முனிவர் இந்தியப் பெருநாடு முழுதும் கால்நடையாக நடந்து சென்று (பூமிவலம் வந்து) தன்வந்திரி முதலிய எல்லோரையும் பார்த்து அளவளாவியுள்ளனர். தன்வந்திரியையும் பாராட்டுவதுடன் "சாமியகத்தீசர்தாள் வாழி" என்கின்றார். அசுவினி விசுவனிகளையும் கூறுகின்றார். ஆனால் தமக்கு அகத்தியரையுங்கூட ஆசிரியராகச் சொல்லாமல் தேரரையே

முழுக்க முழுக்க ஆசிரியராகக் கொண்டு புகழ்வதனால் இவர்க்கு ஆசிரியர் தேரர் மட்டுமே என்பதுவும் தெற்றெனத் தெளிக.

மூதுரை எழுதிய பிற்காலத்து ஔவையாரை யூகி முனிவர் உலாவில் குறிப்பிடுவதனால் அவர் காலத்தில் அல்லது காலத்திற்குப் பின் இந்நூல் எழுதப்பட்டது என்க. வாதகாவியம் முதற்காண்டமும் இரண்டாம் காண்டமும் பிடிவாதம் ஆயிரமும் உலாவிற்கு முன்பு எழுதியிருக்கலாம்.

உலகம் வறுமை நீங்கிப் பிழைக்கவும் உண்மையுணரவும் யூகி முனிவர் கூறும் உறுதிப்பாடுகள்.

"வழத்தினார் வடகிரந்தந் தன்னைப் பார்த்து
வடிவாக வாதத்தின் மார்க்கமெல்லாம்
அழுத்தமாய் இருந்ததொரு கைபாகத்தை
ஆதிமுதல் அந்தம்வரைக் கேட்டுக் கேட்டுப்

பழுத்தகவி போலவே சொன்னா ரப்பா
பாரிலே மானிடர்கள் பார்த்துத் தேறிக்
கழுத்திலிட்ட ஆபரணம் போலே செய்தார்
கனிவாக ஆயிரத்தைக் கணிந்து பாரே" (4)

என்பதில் வடகிரந்தமென்பதும் தமிழ் மக்கள் வடமொழியிந் செய்த நூல்களேயாகும். எங்ஙனமெனில் இந்நூற்பொருள்களே மற்றெல்லோர் சொன்ன நூல்களிலும் சில சில மாறுபாட்டுடனே வழங்கிவருவதால் என்க.

"கனிந்துமே யாதியிலே யூகி தானும்
கனிவாக வைத்தியங்கள் கற்க (வேண்டிக்)
கனிந்துமே யகத்தியர் தம் பாதம் நோக்கி
நலமாக வெகுகோடி காலம் தொண்டால்

பணிந்துமே வேலை செய்து வருகு நாளில்
பதிவாக அகத்தியரும் மனம் கிழிந்து
வணிந்துமே கைபாக வரிசையெல்லாம்
வடிவாக யூகி முனிபார்த்திட்டேனே" (5)

என்பதனால் எவ்வளவு காலம் தொண்டு செய்து கற்றுணர்ந்து நூல் செய்திருப்பார் என்பது உய்த்துணர்ந்து போற்றுக.

சித்தர்கள் பதங்கள் நூல்களில் பொன்செய்யும் முறைமையும் மருத்துவமுறைமையும் மெய்யுணர்வுப் பயிற்சி முறைமையும் (வாத வைத்திய யோகஞானம்) விரவிக் கூறுவதே பெரும்பாலும் தங்கள் வழக்கமாகக் கொண்டனர். இவர் நூற்களும் மருத்துவத்திற்கு மிக இன்றியமையாதன. அகத்தியர் குழம்பு என்ற அருமையான மருந்தின் செய்பாகமும் கைபாகமும் கொடுக்கும் முறைமையும் இவர் வாதகாவியக் கும்மியிலும் வாத காண்டம் முதலாயிரத்திலும் உலாவிலும் கூறியருளினார். அது மிக்க பயனுடையதாகும்.

மாற்றுக்கலை பொய்யென்று வாய்க்கு வந்தவண்ணம் வசை கூறுவோரை யூகி முனிவர் தாக்குகின்றார்.

"ஆமேதான் உலகத்தில் வாதம் பொய்யோ அடுத்துமே
ஞானமது பொய்யோ அல்ல
காமேதான் யோகசித்தி காயசித்தி
கனிவாகப் பொய்யென்று சொன்ன வாதி
நாமேதான் நரகமென்ற பாதா ளத்தில்
நாடியே விழுந்திடுவார் நாடிக் கேளு
தாமேதான் வங்கி சங்கள் எல்லாம் பாழாம்
சரியாகச் சொல்லிவிட்டேன் பார்த்துத் தேறே.

என்றும் (பிடிவாதம் 624)

கொள்ளவே நவகன்டந் தன்னிலே தான்
கூறிரிய ரசவாதம் பொய்யோ என்றல்
துள்ளவே வங்கிசங்கள் எல்லாம் பொய்யாம்
சூதாடு வார் போலச் சொல்ல வேண்டாம்
கள்ளமாய்க் கைபாகம் கண்டு பாரு
காதலுடன் பொய்மறந்து கணக்குப் பாரு
துள்ளவே எல்லாமும் சித்தி யாகும்
துடியான ராசயோ கத்தைப் பாரே.

என்றும்

சித்தியாம் உலகத்தோர் பிழைக்க வென்று
சிறப்பாகப் பிடிவாதந் தன்னிலே தான்
புத்தியாய்ச் சொல்லிவிட்டேன் உற்றுக் கேளு
புனிதமாய் யோகத்தைப் புரண்டு பாரு
நத்தியாய்ப் பார்த்தாலே எல்லாம் சித்தி
நலமாகக் காப்போடு கடையும் பாரு

பத்தியே மூதுரையில் நேர்மை பாரு
பதிவாகச் சரியாகும் பண்புள் ளோரே

என்றும் கூறுவன காண்க. (718)

வாதம் பொய்யென்போரைச் செருப்பாலடி என்று கடினமாகவும் கூறுகின்றார். யூகிமுனிவர் இயற்றிய நூல்களைப் படிப்போர்க்குக் கூறியது கூறலாகவும் திரும்பத் திரும்பவும் ஏன் கூறுகின்றாரென்றும் நினைக்கத் தோன்றும், அவைகளெல்லாம் வெவ்வேறு நுட்பங்களை விளக்குவன.

யூகிமுனிவர் நூல்களை 8.3.1950–ல் திரு. குரு. இராமசாமிக்கோன் அவர்களிடம் யான் வாங்கும்போது அந்நூற்பொருள் உண்மைப் பயனுள்ளனவா? என்று ஐயுற்று வினவினேன். அவர்கள் ஆணித்தரமான உறுதியுடன் அதன்திறத்தினை நவின்றார்கள். பின்னர் சித்தயோகி சுவாமி சுந்தரமகாலிங்கம் அவர்களும் எடுத்துக்கூற அதன் பின் நூலாய்ந்து பார்த்தபோது உண்மை உண்மையே என்பது புலனாயிற்று. அகத்தியர் இயற்றிய பத்து நூறாயிரம் பயின்ற இவர் செய்த நூல்களின் மதிப்புக்கு விண்ணுலகும் மண்ணுலகும் ஈடாகாது என்பது முற்றும் உண்மை. என் வாழ்வின் கண் யான் யாரிடமும் சென்று பொருள் கேளாத வண்ணம் பொருள் வழங்கித் துனை செய்த வள்ளல்களாக இலங்கிய நூல்கள் சித்தர் நூல்களே. உலகமும் இப்பயனை அடைவதாக.

## உரை எழுதிய முறை

(நூ)ல்களில் பற்பல இடங்களில் உலகியலை அறிவும் வரலாற்றுக்

குறிப்பும் மற்றும் பிற செய்திகளும் பற்றிக் கூறிய பாடல்களுக்குப் பொருள் எழுத வேண்டிய இன்றியமையாமை இன்மையால் வேண்டிய இடங்களுக்கு மட்டும் பொருள் முடிபு கருதித் தொகுத்து உரை எழுதியிருக்கின்றேன். உரையினை விரிப்பில் பெருகுமாதலின் சுருக்கமாகவே எழுதினேன். யூகிமுனிவர் பிடிவாதம் 1000 தனிநூல். வாதகாவியம் முதற்காண்டம் 1000, 2ஆம் காண்டம் 1000 இவ்விரண்டும் தனி நூல். இவற்றின் கண்ணும் அரிய பெரிய முறைகளைக் கற்கவேண்டிய முறைகள் அடங்கியுள்ளன. எடுத்துக்காட்டாக ஒன்று. பொன் செய்யும் முன்பு திரிமூர்த்தி பற்பம் செய்து பணங்களைத் தேடிப்பின்வாதம் பார் என்கின்றார்.

## திரிமூர்த்திபற்பம் செய்து பொருள் உண்டாக்கல்

செய்திடவே திரிமூர்த்தி பற்பம் தன்னைச் சிறப்பாகவுலகத்தில் மானிடர்க்கு
எய்திட்ட நோயெல்லாம் ஓடிப் போக எனையாண்ட மூர்த்தியுமே
இயம்பினார் பார்
கைத்திட்ட வாதங்கள் செய்யுமுன்னே கடிதாக இதை வைத்து
வைத்தியம் செய்து
பைத்திட்ட பணங்களைத்தான் சம்பாதித்துப் பரிவாக வாதத்தைப்
பார்த்திடாயே (105)

## வீரரசம் இலிங்கரசம்

பார்த்திடவே வீரமது பலமோ பத்து
பதிவாகத் தண்டவாளம் பலமும் ரெண்டு
சேர்த்திடவே இவைரண்டும் நேக அரைத்துச்
சிறப்பாகப் பார்த்திடவே ரசமு மாகும்
நாத்திடவே ரசமெடுத்து அப்பால் வைத்த
நலமாக இலிங்கமது பலமும் பத்து
ஏத்திடவே திராவகத்தை விட்டு ரொம்ப
இழுத்துரைத்துக் கல்வத்திலிதமா யாட்டே (106)

ஆட்டுநீ பீங்கானில் விட்டு மெள்ள அன்பாக வுமி நெருப்பில் வறுத்துப்போடு
நாட்டிடுநீ கிடமதிலே போட்டு மூடு நலமாக ஏழுமன் சீலை செய்து
ஓட்டிடு நீ அடுப்பேற்றிச் சாமம் நாலு விதமாக எரித்திடவே ரசமு மேறி
காட்டிடுநீ மயிர்க்குச்சி தன்னா லேதான் கனிவாக வழித்துநீ எடுத்துக் கொள்ளே.

கொள்ளவே வீரரசம் பலமும் ஐந்து கொடியாக லிங்கரசம் பலமுமைந்து
மெள்ளவே பூரமது பலமு மைந்து மிடுக்காகத் திரிரசமுமாச்சுதப்பா

கள்ளமாய் இவைமூன்றும் சேர்த்தரைத்துக் கனிவாக இருசாமம்
பொடியாய்ப்பண்ணு
துள்ள வேயிருசட்டி உராஞ்சிச் சேரு துடியாக வொருசட்டி நிறையவுப்பே

உப்பெல்லாம் வறுத்துமே சட்டி யிட்டு உண்மையாய் நடுவதனில் ரசத்தை விட்டு
நப்பாக மேற்சட்டி கவிழ்த்து மூடி நலமாக ஏழுமண்தான் சீலைசெய்து
கப்பாக வடுப்பதனில் ஏற்றி நீயும் கனிவாகக் கணபதியைப் பூசைபண்ணி
மெய்ப்பாகக் கடிகைதான் நூறுளிப்பு மேன்மையாய் எரிந்திடவே பதங்கம் அதே
(109)

## திரிமூர்த்தி பதங்கத்தால் தீரும் நோய்கள்

பதங்கத்தை மயிர்க்குச்சி தன்னாற்கிண்டி பதிவாக எடுத்துமே வைத்துக்
கொள்ளு
நிதம்பிதமாய்ச் சித்தர்களைப் பூசை செய்து நிர்ணயமாய்ப் பணவெடைதான்
வெல்லத் திட்டால்
கதம்பமாய் மண்டலத்தில் சித்தியாகும் காரியமாய்ச் சிவனாணை எல்லாம் தீரும்
விதம்பமாய் பதினெட்டுக் குட்டம் தீரும் விருப்பமாய் அம்மையின்மேல்
ஆணையாமே. (110)

ஆணையாம் குன்மங்கள் எல்லாம் தீரும் அடைவாக நந்தியின் மேல்
ஆணையாகும்
காணலாம் வாதமென்பதுவும் தீரும் கடிதாக அசுவனி மேல ஆணையாகும்
பாணலாம் பித்தமெல்லாம் தீர்ந்து போகும் பதிவாகத் தன்மந்திரி
யாணையாகும்
வாணலாம் காசமெல்லாம் தீர்ந்து போகும் வடிவான அகத்தியர்
மேலாணையாமே. (111)

ஆமேதான் விசபாண்டு அனைத்தும் தீரும் ஆதியாம் புலத்தியர் மேல்
ஆணையாகும்
காமேதான் விசபேதி கிராணி தீரும் கனிவானதேரர் மேலாணையாகும்

வாமேதான் நோய்களெல்லாம் தீரும் தீரும் வகையாக யூகிமேலாணையாகும்
தாமேதான் முப்பத்து முக்கோடி தேவர் தற்பரமேல் ஆணையுண்டு
மருந்துசெய்யே (112)

"செய்யவே கைபாகமாக வைத்துச் சிறப்பாக வைத்தியங்கள் மிகவும் பாரு வையகத்திலுனைப் போலே செய்வாருண்டோ **வடிவாக வைத்தியங்கள் பலிக்கும் பாரு மெய்யாகச் சொல்லிவிட்டேன் வைத்தியம் பாரு**"

என்றெல்லாம் ஆணையிட்டுச் சொல்லிய யூகிமுனிவரின் நன்னோக்கினை ஓர்க. மருந்து செய்க வெற்றி பெறுக.

இத்தகைய நூலை உலகுக்கு வழங்கிய அருள்மிகு யூகிமுனிவர் திருவடிகளை மனத்தால் நினைத்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

முன்னாள் தி.மு.க. வின் தமிழக நல்வாழ்வுத்துறையமைச்சர் பேராசிரியர் மாண்புமிகு. க. அன்பழகன் அவர்கள் என்னை அழைத்து நூல் வெளியிட்டுத் துறையில் ஊக்கப்படுத்தி என் ஆசிரியர் அருள்மிகு. சிவயோகி. மா. இரத்தினசபாபதிப் பிள்ளையவர்களிடம் நூல்களை வாங்கி வரக் கட்டளையிட்டார்கள். அவர்கள் உவந்து தந்து வாழ்த்தினார்கள். சூதமுனி சூத்திரவுரையும் ஏழுநூற்றொகுதி (கோரக்கர் 6 - போகர் 1) யுரையும்' அவர்கள் அரசு நிகழும் போதே எழுதிவெளிவிட்டேன். பின்னர் அரசு மாற்றத்தால் திகைக்க நேர்ந்தபோது நூல்கள் வெளிவரவாய்ப்பில்லை. அமைச்சர் அன்பழகனவர்கள் மதுரைப் பல்கலைக்கழகத்தில் சித்தமருத்துவத் துறை நிறுவவும் யான் அங்கிருந்து பணிபுரியவும் வேண்டுமென்று கூறி அதற்காகப் பெருந்தொகைவைப்பு ஏற்படுத்தவும் முயலும்போது அரசு மாறுபாடு ஏற்பட்டது. எனவே அவர்களின் அருமைத்தம்பி வி.இ.நா.செ.நா. கல்லூரித்தமிழ்ப் பேராசிரியர் க. திருமாறன் அவர்கள் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் முத்துச் சண்முகனாரைத் தூண்டி இத்துறைக்குப் புதுவழிவகுத்தார்கள். பேராசிரியர் முயற்சிக்கும் அன்புக்கும் துணைக்கும் எல்லையில்லை. இம்மூவருக்கும்

என் நன்றி என்றும் உரியன. இதற்காகப் பல முறை நேரில் வந்து அழைத்து என்னை இத்துறையில் நீந்த நிற்பவனைத் தள்ளிவிட்டது போல் துணைபுரிந்த டாக்டர் தே. ஆண்டியப்பிள்ளையவர்களுக்கு மிக்க நன்றி.

சென்னை மாநிலச் சட்ட மொழி பெயர்ப்புத்துறை ஆணையர் ஜஸ்டிஸ் எஸ். மகராசனவர்கள் பன்னெடுங்காலமாக ஆற்றி வரும்பேருதவிக்கு அளவேயில்லை. அவர்கள் தங்கள் உந்து வண்டியில் என்னையுடனழைத்துக் கொண்டு வந்து சிவயோகி மா. இரத்தினசபாபதிப் பிள்ளையவர்களிடம் அறிமுகப்படுத்திய பெருமையினாலேதான் இந்நூல்கள் கிடைத்தன.* இன்றேல் ஒப்பற்ற நூலாகிய இது வெளிவரவாய்ப்பு ஏற்பட்டிருக்காது. மேலும் 37 ஆண்டுகள் தாங்கள் பயின்று உணர்ந்த அருந்தமிழைச் செவிவழியாகப் பருக எனக்கு ஊட்டி அருகிருந்து அமுதூட்டி மெய்நெறியும் புகட்டிய மேதகைய அண்ணல் இவர்கள்.

இச்சுவடிகளைப்பிழையில்லா உருவமாக்க முயன்று எழுதும்போது பட்ட வருத்தமும் கடினவுழைப்பும் சேர்ந்து சோர்ந்தபோது முன்பு சுவடிகளை எழுதி வைத்த ஆசிரியப் பெருந்தகையவர்களின் வருத்தத்தை நினைத்துக் கண்ணீர் சிந்தினேன். அவர்களை என்றும் திருவடி வணங்கி வாழ்த்துவ்துடன் நன்றியும் எழுதி வணங்குகின்றேன். வெள்ளியம்பலவாணரின் கால் நடனம் ஆடிவருந்துமே என்று பாண்டியன் வருந்தியது போல் யானும் குருவை நினைத்து வருந்தினேன். நூல் வெளிவரும் இப்போது அவர்களின் இன்மை கருதிக் கண்ணீர் சிதறுகிறேன்.

---

| | | |
|---|---|---|
| * யூகிமுனிவர் பிடிவாதம் | | 1000 |
| ,, | வாத காவியம் முதற்காண்டம் | 1000 |
| ,, ,, | 2-ஆம் காண்டம் | 1000 |
| ,, | வாத வைத்திய உலா | 1000 |

முக்காலமும் உணர்ந்த யூகி முனிவர் தம் நூல்கள் வருங்காலத்தில், திருமிகு. மகராசனவர்களால் வெளிவரல் வேண்டுமென்று கண்டார்கள் போலும்.

"யோக மகராசன் யோக குருநாதன்"

என்ற தொடரை நூலில் அமைத்திருக்கின்றார்கள்.

அத்தகைய யோக மகராசனை யோக குருநாதனைத் திருவடிகள் வணங்கி நன்றி கூறி வாழ்த்துகின்றேன். அவர்கள் அருள்மிகு கண்ணபசுவாமிகளையும் சிவயோகிகளையும் எனக்கு அறிமுகம் செய்து வைத்து மெய்ப்பொருளுயர்த்தச் செய்தாலும் பின்னர் தாமே குருவாக இருந்து எல்லாவிளக்கமும் கூறிச் சிவயோகியவர்கள் காலத்திற்குப் பின்னும் அவர்கள் எனக்குச் சொல்லாமல் விட்ட அமுதமழைபெறும் வழியையும் கற்பித்தார்கள். இந்நூற்கு ஒரு நல்ல அணிந்துரையும் வழங்கினார்கள்.

அவர்களின் உரையைக் குருவின் வாழ்த்தாக உலகினை வணங்கி ஏற்றுக் கொள்கின்றேன். இந்நூலுக்கும் மற்றொரு அணிந்துரை வழங்கியவரும் சித்த மருத்துவப் பெருவள்ளலும், இனாமாகச் சித்த மருத்துவம் செய்து ஏழைகளைக் காப்பவரும். மத்திய சித்த மருத்துவத்துறை இயக்குநராக இருந்து (ஊதியம் வேண்டாமென்று விலக்கி) பெரும்பணி புரிகின்ற வருமாகிய டாக்டர். ஏ. ஆனந்தக்குமார் அவர்களுக்கு என் நன்றியும் உரித்து. உலகமும் அவர்களுக்கு உறுதியாய் நன்றி செய்யும். செந்தில் குமார் கல்லூரியில் எல்லோருக்குமே செய்யும் வழக்கம்போல் 58-வது ஆண்டில் அக்கல்லூரித் தாளாளர் திரு. அ. கணேசனவர்கள் ஓய்வுக் கட்டளையை எனக்கும் உய்த்தார்கள். அது தெரிந்த அந்நாற் துணைவேந்தர் திரு. சை. வே. சிட்டிபாபு அவர்கள் கணேசனிடம் சொல்லி மீண்டும் வேலையில் அமர்த்துவதாகப் பரிவுடன் கூறயான் வேண்டாமென்று மறுக்க அவர்கள் உள்ளத்தில் தனியான ஒரு பரிவு கொண்டு பல முறை மானியக் குழுவுக்கு எழுதி

என்னையிப்பணியில் சேர்த்து என் நூல்களையெல்லாம் வெளியிடுவதாகவுரைத்து ஊக்கப் படுத்தினார்கள். அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியென்றும் உரியது. யூகிமுனிவர் வாதகாவிய முதற்காண்டம் 1000, 2-ம் காண்டம் 1000, உலா 1000 ஆகிய நூல்களை ஒப்பு நோக்கத் தந்துதவிய தாவரவியல் பேராசிரியர் திரு. குமாரசுவாமி யவர்களுக்குப் பெரு நன்றி.

செந்திக்குமரர் கல்லூரி அந்நாள் முதல்வர் திரு எஸ். சிவசாமியவர்கள் இந்த முயற்சியிலீடுபட்டுச் செய்த முயற்சி பெரிது. கட்டளை விருதுநகர்க் கல்லூரிக்கே வந்தது. அவர்களின் ஆர்வத்துக்கு நன்றி. அருள்மிகு. வே.வ. இராமசாமியவர்கள் நீங்கள் பல்கலைக் கழகத்திலிருந்து பணிபுரிய வேண்டுமென்று கூறியதுடன் அவர்கள் உரைத்த ஆக்கமும் ஊக்கமுமே பெருந்துணையாயிற்று. நூல் வெளிவரும்போது ஐயா இல்லாத குறை என்னைக் கலங்கச் செய்கிறது. இப்பெரியார் இருவருக்கும் பெருநன்றி. திருமிகு. சித்தலிங்கையா அவர்களும் அருள்மிகு பதிவாளர். ப. முருகன் அவர்களும் அன்புமிகு திரு. அழகிய சொக்கலிங்கம் அவர்களும் என்னைத் துறவறத்திற்குப் போகவிடாமல் தடுத்துப் பல்கலைக்கழகத்துக்கு ஈர்த்துப் பணிபுரிய வைத்தார்கள். அவர்களுக்கு என்றும் நன்றி.

துணைவேந்தர் டாக்டர் வீ.ச. குழந்தைச் சாமியவர்கள் அழைத்து நூலின் தரம் கண்டு வெளியிட உதவுவதுடன் பல்கலைக்கழகத்திலிருந்து எனக்கு ஊதியவுயர்வு தருவதாகவும் கூறிய நற்சொற்களுக்கு நன்றி கூறினால் அது சொல்லிலடங்காது. அவர்களுக்கும் எனது நன்றி மிக்கதாகும்.

அதனைப் பின்பற்றி பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினரும் பொறுப்புத் துணைவேந்தருமாக இருந்த திரு. பி.டி.ஆர். பழனிவேல் ராசனவர்களும், திரு. சக்திவேல், திரு. கனகசபாபதி, திரு. செல்வராசு, திரு. அ. சங்கரநாராயணன். திருச்செல்வி சகுந்தலா முதலிய ஆட்சிக்குழு

உறுப்பினர்களும் நூலை வெளியிட ஒப்புதல் வழங்கி ஊக்கப்படுத்தி ஊதியஉயர்வும் தந்தார்கள். மேருமலையளவிலும் பெருமதிப்புமிக்க யூகிமுனிவர் நூலுக்கு இவர்கள் செய்த உதவிக்கு மேருமலையனைய நன்றியைக் கூறுகிறேன். விருதுநகரிலிருந்து யான் பணியாற்றும்படி வந்திருந்த கட்டளையைப் பல்கலைக்கழகத்துக்கு மாற்றுவதற்கு தில்லிக்குச் சென்று சொற்றுணை புரிந்து ஒரு வாரத்துக்குள் மாற்றித்தந்த பெருந்தகை உயர் கல்வித்துறை இயக்குநர். திரு. கே.வி. சுப்பிரமணியம் அவர்களுக்கு மிக்க நன்றியும் வாழ்த்தும் உரியன. என்னெடு இருந்து ஏடுகளைப் படித்தும் ஒப்பு நோக்கியும் துணைபுரிந்த, திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ந. கலியாணசுந்தரம் அவர்களுக்கும் என்றும் எனது நன்றி.

இவ்வளவு பெருமுயற்சி செய்தபின்னரும் வெளிவராமல் இருந்த இந்நூல் வெளிவருவதற்கு என்னைப் பலமுறையழைத்துத் தூண்டியும் விரைவு செய்தும் வெளிவரச் செய்கின்ற அருட் பெருந்தகை துணைவேந்தர் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்களுக்கு நன்றி மட்டும் சொன்னாற் போதுமா? அவர்களுக்கு நன்றிக்கடன் செலுத்தற்பொருட்டு மிகச் சிறந்ததொரு சித்த மருத்துவநூலை என்பொறுப்பில் வெளியிட்டு அவர்களுக்கு உரிமையாக்கி உலகு உறுபயன் பெறச் செய்து எனது நன்றியை நிலை நாட்டுவேன்.

கடவுள் போல் பெருந்துணை செய்து எனக்கு இப்பணிக்குக் கட்டளையருளிய பல்கலைக்கழக மானியக் குழுத்தலைவர் திருமிகு கோல் அவர்களுக்கு என்றும் நீங்கா நன்றி நிலைக்கக் கூறுகின்றேன். உலகுக்கெல்லாம் எல்லாமொழியாளருக்கும் பயன்தரும் இந்நூலினால் அவர்களது புகழும் உலகமெல்லாம் பரவுவதாகுக.

இங்ஙனம்,

*அன்பன் ந. சேதுரகுநாதன்.*

# யூகிமுனிவர் அருளிய வாத வைத்திய உலா

## முகவுரை

இந்நூல் வெண்டளையும் பிறதளையும் விரவி வந்த வெண்கலிப்பா வாலாகிய நூல். நாலாயிரத்து இருநூற்றைம்பது வரிகள் உள்ள ஒரு பாடலால் ஆகிய இந்த நூலை யூகிமுனிவர் வாத வைத்திய உலா (1000) ஆயிரம் என்று வழங்கினர். நாலுவரியை ஒரு பாடலாகக் கணக்கிட்டுப் பாடல் எண் குறித்து உலா ஆயிரம் என்று கூறினாலும் இருநூற்றைம்பது வரிகள் மிகுதியாகவேயுள்ளன. அறுபத்தைந்தாண்டுகளுக்கு முன்பு மயிலை அழகப்ப முதலியாரவர்களால் யூகிமுனிவர் வாத காவியம் முதற்காண்டம் 1000, 2ஆம் காண்டம் ஆயிரம், வாதவைத்திய உலா முதலிய நூல்கள் வெளியிடப்பெற்றன, அவைகள் தொட்டால் நொறுங்கும் அளவிற்குப் பழமையாய் விட்டன. உலாவில் கடைசியில் முந்நூறு வரியளவுக்கு நொறுங்கிக் கிழிந்தும் இருந்தன. பாளையங்கோட்டைச் சித்த மருத்துவக்கல்லூரித் தாவரஇயல் பேராசிரியர் திரு. குமாரசாமியவர்கள் அம்மூன்று நூல்களையும் ஒப்பு நோக்கிப் பார்ப்பதற்குத் தந்து உதவினார்கள். பிழைமலிந்த பதிப்புத்தான். உலாவினையும் வாதகாவியம் முதற் காண்டத்தையும் சிவயோகி, மா. இரத்தினசபாபதிபிள்ளையவர்களாகிய என் ஆசிரியர் அந்நூல் நொறுங்கும முன்பு பெயர்த்து எழுதி வைத்துவிட்டார்கள். இரண்டாம் காண்டம் ஏட்டுச்சுவடியிலிருந்து எழுதப்பட்டது போலும். அச்சுநூலில் இல்லாத வரிகள் மிகப்பல கிடைத்தன. நூலைத்திருத்தவும் அது உதவியது. எதுகைப்பிழை மோனைப்பிழை சொற்பிழை பொருட் பிழையாக ஒவ்வொரு நூல்களிலும் பல்லாயிரம் பிழைகள் திருத்தப்பெற்றன. நூற்பொருள் முதலிய எவற்றையேனும் என்மனம்போல் திருத்தவில்லை. இருந்ததனை இருந்தபடி காட்டி எழுத்துப்பிழைகளையே திருத்தினேன்.

என்றுமுள தென்றமிழ் இலக்கியவளத்தோடு, சாவாத மூவாத நன்மருந்தும் பொன்மருந்தும் தந்து உலகத்தையெல்லாம் உய்விக்கும் உயர்தனிச் செம்மொழியாக உயர் பேரொழுக்கம் பூண்டது என்று சொல்வது நூற்றுக்கு நூறு உண்மையே என்க.

## இந்நூலைப் பற்றி யூகிமுனிவர் கூறுவன

யூகிமுனி, உலகம்பிழைக்க ஓங்குரச வாதம்
கலகமில் லாமலே காட்டினார்"

**பா,எண்3**

27-29 "காயசித்தி யாகும் கடிதான யூகிமுனி
தாயகமாய்ச் சொன்னார் தயவாகத் - தோய
வாதி ரசவாதி வடிவான செந்தூரம்
பேதிக்கச் செய்து பெலப்படுத்தி - சேதியே

உங்கள்குலம் ஈடேற வுண்மை யிதுபாரும்
நங்கள்கை பாகமெல்லாம் நாட்டியே - திங்கள்
தங்கமிலாச் செந்தூரம் தாக்கவே மாத்து
அங்கமிலாச் சேவகன்போ லாகுமே- யுங்கள்

மனதுதனி லெண்ணி வகையான செந்தூரம்
கனகமது ஆகக் கருத்தா - யினமாகச்
சத்தியமாய்ச் சொன்னேன் தயவாக நம்புமினி
முத்திபெறத் தங்கம் முடியும் - சித்தியாம்.

தங்கம் சேராமல் செய்த செந்தூரம் உறுப்பில்லாத வேலையாள் வேலைசெய்யாதது போல வேலை செய்யாது என்பதும் சத்தியம் செய்து **கூறுவதும்**. கண்டு உழைத்து பயன் பெறுக.

36 ஓங்கு புகழ் செல்வம் ஓதவரும் உன்றனக்கு
நாங்களென்ன செய்வமென்று நாடாதே - வாங்க
சுட்டுத்திரியாதே தொல்புவியி லுள்ளோர்கள்
மட்டுப் படாவுன்னை வைகுவார்.

40 பொன்சேர்த்து ஊது பேரான பொன்னாகும்
நன் சேர்த்துஊத நலமாகும் - இன்பமாம்

பொன்னிட்டால் பொன்னாகும் போத ரசவாதி
பின்னிட்டால் ஒன்றுமில்லை பேசக்கேள்.

101 உங்கள்குலம் ஈடேறும் உங்கள் தவம் பலிக்கும்
துங்கரச வாதம் சொலிக்குமே

137 நம்பினால் பொன்னுண்டு நம்பாதே போனால்
தம்பிவெகு பாட்டால் தவிப்பான் - எம்பிரான்

போலாகும் தின்றால் ஏத்துவாருலகம்
பாலாகும் பாக்கியங்கள் பார்.

பொன்சேர்த்து ஊதுபொன்னாகும். நம்பு. நம்பாவிட்டால் உலகில் மிகுபாடுபட்டுத் தவிக்கநேரிடும் என்பது காண்க.

164 யோக மகராசன் யோக குருநாதன்
பாகமாய்ச் செய்து பதமாக - நீதியாய்ச்
செய்தால் ரசவாதம் செயலாகும் இப்போது
வைதா லுனக்கென்ன வந்திடுமோ

ரசவாதம் பொய்யென்று வைத்தால் உனக்கு என்னவரும்? (சித்தர் சாபத்தால் நரகம் வரும்)

528 யோகமக ராசனைப்போல் ஒக்க இருந்து
பாகமாய்ச் செய்து பதம்பார்.

177-180 உங்கள் குலம் ஈடேற வுங்கள் ரசவாதம்
திங்கள்போல் வாழ்ந்து சிறப்பாகும் - மங்கலமாய்
இருக்கவல்லோ சொன்னேன் ஏந்திழையார் சொன்ன
பருக்கநல்ல வேதை பருகுவேன் - வருக்காய்ப்

பதிந்தேன் பெருநூலில் பாக்கியங்கள் உண்டாம்
வதிந்தேன் இனியென்ன வாடாதே - கதிந்த
குறுக்குவகைச் செந்தூரம் கோடான கோடி
நிறுக்குவா ராமலே செய்து - பெருக்கச்

செந்தூலம் செய்து செயமாக வுங்கள் குலம்
நந்தூரம் ஈடேற நாடியே - சந்தோடம்
மாக இருந்து மயக்கமில்லா மல்தானும்
ஆகப்பொரு ளெல்லாம் அடைவாகச் - சோகமாய்ச்

சோதித்துப் பாரு சுகமாகத் தங்கமாம்
ஆதித்த னுள்ளளவும் ஆடுவீர் - சேதிகேள்
வேதை மிகவாக விரும்பியிதில் சொல்லுகிறேன்
பாதிமதி யணிந்த பரமனார் - நீதியாய்ச்
சொன்னதொரு செந்தூரம்"

இப்பகுதியில் "இனியென்ன வாடாதே", "ஆதித்தன் உள்ளளவும் ஆடுவீர்" என்ற வுறுதி காண்க. யூகிமுனிவரின் அருள்மிகு உள்ளங் காண்க.

468 - 470 "நாகரசந் தான்குருவை நாடியொளித் தார்முனிவர்
பாகமாய்ச் சொன்னேன் பதிவாக - யோகமாய்ச்
சித்தர்சொன்ன நூலைத் திரட்டி யுலாதனிலே
பத்தியாய்க் கைபாகம் பாடினேன் - முத்தியாய்

ஓங்கும் பெருஞ்செல்வம் ஓதரிய பாகமாய்ப்
பாங்கு பெறவுலகம் பதிவாகத் - தாங்கியே
நாகத்தைச் சொல்லி நாட்டினேன் - பாகமாய்த்
தாகமாய்க் கண்டு தடையறவே - பாகமாய்ச்

செய்து முடித்துத் திறமாகத் தங்கத்தைப்
பைது முடித்துப் பதம்பாரு - வையம்
வேண்டுமே உண்ண விருப்பமாய்க் கண்டு
தூண்டுமே உன்னைத் தொட்ருமே"

என்பன காண்க. உறுதி கொள்க. இன்ன பகுதியைச் செய் என்று அறிவுறுத்தினார்.

485 - 488 "யூகிமுனி சொல்லை யுற்றுக்கேள் நெஞ்சே
பாகிமுனி யென்று பலம்படைத்து - ஏகிமுனி
அண்ணா மலையில் அடுத்தகரு நெல்லிதனில்
பண்ணார் தபசுஉடன் பாவித்து - நண்ணாய்

மரத்தடியில் வீற்றிருந்து வல்லமையாய்ப் பாடிக்
கரத்தட்டில் சொன்ன கருத்துக்கேள் - வரதாகச்
சொன்னேன் பெருநூலும் சோதி பெற வாதம்
நன்னயமாய் அந்நூறு - நல்கினேன் - பன்னகமாய்ச்

சிங்கிருப்புச் சொன்னேன் சிறப்பாக மன்னூறு
அங்கமாய்ப் பாடி யரங்கேற்றித் - துங்க
வகுப்புமுப்பத்திரெண்டு வகையாகப் பாடித்
தகுப்பாகக் கைபாகம் தாக்க - நகுப்பாக

வுலாவினிலே சொன்னேன் உண்மைரச வாதம்
பலாபலங்கள் எல்லாம் பகர்ந்தேன் - நலமாகக்
கைபாக மெல்லாம் காதலாய்ப் பாடி
மெய்பாகம் நல்ல விபரமாய்ச் - செய்பாகம்.

இவை வரலாற்றுக் குறிப்பு. ஊரும் நூலும் பற்றிய குறிப்புக் காண்க.

அகத்தியனார் கேட்டு ஆனதொரு நன்னூலைத்
தகத்துடனே கேட்டுத் தடுமாறா - வகுத்துக்
கேட்டுக் கிருபைசெய்து கேள்விகள் தான்செய்து
பாட்டுக் கொருபாகம் பரிந்தார் - நாட்டு

உலகத்தெல் லோரும் உண்மையாய்த் தான்பிழைக்கக்
கலகப் படாமல் கருணையாய் - நலமாகத்
தேரையரைக் கண்டு தெளிந்தேன் தெரிவையர்போல்
ஆராரு என்றார் அவரைநான் - பேராகப்

பாதம் பணிந்தேன் பரிவாக யூகிமுனி
பேதமிலா யூகிமுனி பேர்பெறவே - போதம்
உருவாவாய் என்றார் உண்மை யவருரைப்பச்
சுருதிபோ லேநின்றேன் உண்மையாம் - பருதி
சித்தரெல்லாம் வந்து சிறப்பாக வாதத்தை
அத்துடனே கேட்டார் அறிவாகப்- பித்தாய்
சொன்ன மொழியெல்லாம் சொற்பெரிய தேனாகும்
கன்னல் மொழிகரும்பு கண்டேகாண் - நன்னயமாய்"

கண்டு - கற்கண்டு. தமிழை இவர் நறுந்தமிழ் என்பர்.

524 தன்வந் திரிநூலில் தாழ்ச்சியாய்ச் சொன்னார்
வன்மமுள்ள கைபாகம் மறைத்து - உன்னிதமாய்ச்
சொன்னார் அடியேற்குச் சோதிச்சு யான்சொன்னேன்
முன்னமே நூலில் முகித்தேன்.

மறைப்பினை வெளியிட்டது காண்க.

702,703 இல் ஔவையாரைப் பற்றிக் கூறுவதனால் காலம் தெளிக.

721 இல் காசிபர் வண்ணப்பாடல் பாடினார் என்பதனால்
காசிபமுனிவரின் தாய்மொழி தமிழ் என்பதுவும்
"பதஞ்சலியும் காண்டம் பக்தியுடன் சொன்னார்"

என்பதனால் அவரது தாய்மொழி தமிழ் என்பதுவும் தெற்றெனத் தெளிக. இங்ஙனம் தமிழரே வடமொழியையும் குழூஉக்குறி மொழியாகப் படைத்தனர் என்பதுவும் இந்தியப் பெருநாட்டு மொழிகளில் தமிழ்ச் சொல்லை வேர்ச்சொல்லாகக் கொண்ட மொழிகள் பல என்பதுவும் பின்னர் ஆய்ந்து வெளியிடும் நூல்களால் புலனாகும்.

765, 818, 837, 842 இல் போகரைப் பற்றிய குறிப்பும், அவர் வாழ்த்தும் காண்க.

873 இல் தெற்கணாமூர்த்தி தேரர் பற்றிய குறிப்புக் காண்க. 903-904 இல் புலத்தியரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

பன்னெடுங்காலம் தவம்புரிந்து அருள்கூர்ந்து உலகு வாழ அருள்மிகு. யூகிமுனிவர் செய்த இந்நூலைக் கற்று பொன்மருந்தும் நன்மருந்தும் செய்து நீடுழி வாழ்க என்று வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,

*ந. சேதுரகுநாதன்.*

## அணிந்துரை

திருமந்திரத்துக்கு உண்மைப்பொருளைச் சொன்னவரும், சிவயோகத்திலே நின்று திளைத்தவரும், உரையாசிரியர் வித்துவான். ந.சேதுரகுநாதன் அவர்களுக்கும் எனக்கும் இன்னும் பல அன்பர்களுக்கும் ஞான குருவாக இருந்தவரும் சமீபத்தில் அமரரானவருமான சிவயோகி. மா. இரத்தின சபாபதிபிள்ளையவர்கள் ஞானத்துறையில் மாத்திரமில்லாமல், சித்த மருத்துவத்துறையிலும் அனுபவ அறிவு பெற்றிருந்தார்கள்.

உலகத்துக்குக் கிடைக்காத அரிய நூல்கள் பலவற்றை சிவயோகி எழுதி வைத்திருந்தார்கள். அவர்கள் தம் சீடரான சேதுரகுநாதன் அவர்களுக்கு நான்கு நூல்களைக் கொடுத்து பிழைத்திருத்தம் செய்து அச்சிட வேண்டுமென்று பணித்தார்கள். அப்பணியைச் சிரமேற்கொண்டு நண்பர் சேதுரகுநாதன் அவர்கள் வெளியிடுகிற மூன்று நூல்களாவன :-

(1) யூகி முனிவர் எழுதிய பிடிவாதம் என்ற 1000 பாடல்களைக் கொண்ட நூல்.

(2) யூகிமுனிவர் எழுதிய வாதகாவியம் என்ற 2000 பாடல்கள் கொண்ட நூல் (முதற்காண்டமும், இரண்டாம் காண்டமும்)

(3) யூகிமுனிவர் எழுதிய 1000 பாடல்களைக் கொண்ட (4250 வரிகளுடைய) வாதவைத்திய உலா.

யூகிமுனிவர் ஒரு சித்தர். ஆகவே, வைத்தியத்தையும், ரஸவாதத்தையும் யோக ஞானநெறிகளையும் கலந்தே பாடியிருக்கிறார். பாடல்களுக்குள்ளே பல முடிச்சுகளும், புதிர்களும் இருக்கின்றன. இவற்றை அவிழ்ப்பதற்குச் சித்த வைத்தியம், யோகம், ஞானம் ஆகிய துறைகளில் நல்ல பழக்கமும், ஆழ்ந்த பயிற்சியும் உடைய வல்லுநர்களாலேயே முடியும். அத்தகைய வல்லுநர் இந்நூல்களுக்கு

உரையெழுதிய வித்வான் சேதுரகுநாதன் அவர்கள். அவர்களை நான் சென்ற 40 ஆண்டுகளாக அறிவேன். தமிழில் பலதிறப்பட்ட துறைகளில் ஆழ்ந்து விரிந்த கல்வி கற்றவர்கள் அவர்கள். பிரமிக்கத்தக்க படிப்பும், நினைவாற்றலும் இவர்களைப் போலுடைய புலவர் எவரும் தமிழ் நாட்டில் இல்லை.

ஆகவே, இந்நூல்களுக்கு அவர்கள் எழுதிய உரை முழு அதிகாரத்துடன் எழுதப்பட்டது என்று கொள்ளலாம். மருத்துவத்துறையில் எனக்குப் பயிற்சியில்லையென்றாலும், பதம்பார்ப்பதற்காக உரைப்பகுதிகள் சிலவற்றைப் படித்துப்பார்த்தேன். மூலத்துக்கு நல்ல விளக்கம் கொடுக்கிறது இந்த உரை என்று நான் கருதுகிறேன்.

தமிழர்கள் எல்லாத்துறைகளிலுமே தம் மரபு என்ன என்பதை அறியாது மயங்கிநிற்கும் காலம் இது. இன்றையத் தமிழ் மருத்துவமும், தன் மூலத்தை அறியாது மயங்கி நிற்கிறது. இந்த உரையின் துணைகொண்டு, தமிழர்கள் யூகிமுனிவர் சொல்லும் செய்பாகம், கைபாகம் முதலியவற்றை அறியலாம் என்று நம்புகிறேன். அவர்கள் அறியாவிட்டாலும் அமெரிக்கர்களோ, ரஷ்யர்களோ, ஜெர்மானியர்களோ இந்நூலை மொழிபெயர்த்து உரிய மருந்துகளை உரிய விஞ்ஞான முறையில் செய்து மாந்தர் நோய்களைத் தீர்ப்பார்கள் என்று நம்புகிறேன்.

இந்த நூலை வெளியிடுவதற்குக் கட்டளை வழங்கிய பல்கலைக்கழக மானியக் குழுவின் செயலாளர் திரு. கோல் அவர்களையும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தையும் பொதுமக்கள் சார்பிலே உளமாறப் பாராட்டுகிறேன்.

***எஸ். மகராஜன்,***

முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதி,

சென்னை மாநிலச் சட்டமொழி பெயர்ப்புத்துறையாணையர்,

சென்னை.

## அணிந்துரை

சித்த மருத்துவத்துறையில், பழைய இலக்கியங்களில் உள்ள செய்யுட்களுக்குச் சரியான உரை எழுதக் கூடிய ஆற்றல் படைத்தவர்கள் தற்போது தமிழகத்தில் மிகச் சிலரே. அவர்களில் பேராசிரியர் சேதுரகுநாதன் அவர்கள் ஒருவராவார். அவர் உரை எழுதியுள்ள "யூகிமுனிவர் பிடிவாதம் 1000 வாதகாவிய முதற்காண்டம் 1000, 2ஆம் காண்டம் 1000, வாத வைத்திய உலா 1000 எனும் நூல்களுக்கு அணிந்துரை எழுதித்தர வேண்டுமென என்னைக் கேட்டுக் கொண்டார். பேராசிரியர் சேதுரகுநாதன் அவர்களுடைய உரை நூலுக்கு அணிந்துரை எழுதும் தகுதி எனக்கில்லை எனினும் எனது அணிந்துரை வேண்டுமென அவர் பிடிவாதமாக இருப்பதால் இதனை எழுதுகின்றேன்.

தமிழ்மொழி இலக்கியங்கள் ஓரளவு காப்பாற்றப்பட்டுவிட்டன.

சித்த மருத்துவ இலக்கியங்கள் பன்னெடுங்கால உழைப்பின் பயனாய் உருவானவை. அவைகள் அழிந்து போமேயானால் ஏற்படுகின்ற இழப்பு ஈடுசெய்ய முடியாத ஒன்று. தமிழ் மக்கள் எல்லா வகையாலும் நாள்தோறும் உரம் குன்றிக் கொண்டே போகின்ற காரணத்தால், சித்த மருத்துவ விஞ்ஞான இலக்கியங்கள் அழிவதால் எத்தகைய பெரும் இழப்பு நேரிடுகின்றது என்பதை உணரும் ஆற்றல் இல்லாதவராயுள்ளனர். தமிழக அரசும், தமிழகத்திலுள்ள பல்கலைக்கழகங்களும், பேராசிரியர் சேதுரகுநாதன் போன்றவர்களை உடனடியாகத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ள முன்வருவதற்கு, இந்த உரைநூல் நினைவூட்டுவதாக அமைந்துள்ளது.

பேராசிரியர் சேதுரகுநாதன் அவர்கள் இத்தகு பணியைச் செய்யக் கட்டளையிட்ட மானியக் குழுத்தலைவர் கோல் அவர்கள் நம் அல்லோருடைய பாராட்டுதலுக்கும், நன்றியறிதலுக்கும் உரியவராகின்றார்.

*ஆ. ஆனந்தக்குமார்,*

மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சித்துறை இயக்குநர்,

சென்னை

# பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| *97 - 106* | பித்தளைச் செம்பு | ஏழரைமாற்று |
| *107 - 116* | பித்தளைச் செம்போடு அயம் சேர்க்க | செம்பு சிவப்பாகும். ஏழு மாற்று |
| *120 - 121* | காரீயச் செம்பு | தங்கமாகும். |
| *122 - 129* | கல்லுப்புக்கட்டு | வெற்றியாம், மாற்றாகும் |
| *130 - 133* | சங்கத் திராவகம் | இலிங்கரசம் வரும் |
| *134 - 137* | இலிங்கரச பதங்கம் | தங்கமாம், உடல் பொன்னம்பலவர் போலாகும். |
| *138 - 142* | கட்டுவகைத் திராவகம் | உலோங்கட்டும் பழுக்கும். |
| *143 - 151* | சாரக்கட்டு | சாரம் கட்டும், நீறும் எட்டரை மாற்று. |
| *152 - 153* | கல்லுப்புத் திராவகம் | |
| *154 - 155* | பொன்மாற்று உயர | |
| *156 - 167* | நீற்றினத்திற்கு சங்கத் திராவகம் | பொன்னாகும் |
| *168* | தாளகச் சுத்தி | |
| *169 - 192* | வீரசெந்தூரம் | தங்கமாகும், சயம் காசம் ஈழை குன்மம் பீலி முயல்வலிப்பு எல்லா வாய்வும் நீங்கும். அரவுகடி நஞ்சு பதறியோடும் பத்தரைக்கு மேல் ஓடும். |
| *193 - 201* | மடக்குரசச் செந்தூலம், செவ்வலறிப்பூ நிறம் | நல்ல தங்கம் |
| *202 - 206* | உலகவாதிகள் புரட்டு | |

| | | |
|---|---|---|
| *207 - 214* | இலிங்கரசர் செந்தூலம், செவ்வல்லி நியம் | |
| *215* | இலிங்கரச வேதை | செம்பொன் |
| *216 - 228* | வீரரச செந்தூரம் உண்மை உபதேசம் | பத்துமாற்று |
| *229 - 240* | ரசிதக் களங்கு | நல்ல தங்கமாம் |
| *241 - 257* | தங்கக் களங்கு | பத்துமாற்று உங்கள் குலம் ஈடேறும். |
| *258 - 259* | வாதை யோகத்துக்கு சபாநாதர் தியானம் | |
| *260 - 272* | செம்புக் களங்கு | |
| *273 - 275* | தங்கச் செம்பு நொறுக்கு வெள்ளியில் கொடுக்க | தங்கமாம் |
| *276 - 291* | சரக்கில் உப்புப்புளி அறிந்து சேர்க்க | |
| *292 - 294* | உப்புப்புளியின் செய்கை | |
| *295 - 299* | நீற்றினம் | |
| *300 - 308* | அண்டச் சுண்ணம், வெள்ளி வித்தை | நல்ல வெள்ளி |
| *309 - 317* | ரசவெள்ளி | கொக்கு நிற வெள்ளி |
| *318 - 333* | துரிசுச்சுண்ணம். உலகத்திற்கு மறைத்த வழலை இதுவேதான். தந்தைபோல் சொன்னேன். மலைகளும் பழுக்கும் | |
| *334 - 355* | வழலைக்குரு சுக்கான் | மாற்றாகும். தாழ்வு வராது. |

| | | |
|---|---|---|
| *356 - 373* | செம்மை வெட்டு செய்து கொடுக்க ரசத்தைக் கட்டிச் சேர்க்க வேண்டும். முன்புபெரு நூலில் துரிசுச் செந்தூரம் சொன்னேன். அதில் திராவகம் ஊற்றி உலர்த்தி எரித்தால் மிகுந்த சிவப்பாகும். உலாவில் உண்மை உரைத்தேன். | ஒன்பதும் செம்பொன்னாம். |
| *374 - 393* | அப்பிரகச் செந்தூரம் | செம்பில் நுழைந்து செம்பொன்னாக்கும் |
| *394 - 402* | தங்கக்குரு | ஏழு மாற்று |
| *403 - 412* | செம்புச்சுண்ணம் | மாற்றுக்கலை ஏவல் கேட்கும் |
| *413 - 423* | தாமிரச் சுண்ணம் | தூய தங்கமாம் குன்மம் முதலிய நோயெல்லாம் ஓடும். இருந்த நோயெல்லாம் இருப்பிடத்தை விட்டு அருந்தவே போகும். |
| *424 - 428* | வாதிகள் செய்கை | |
| *429 - 438* | வங்கச் சுண்ணம் | வாதம் உறுதியாகும். |
| *439 - 444* | நாகச்சுண்ணம் | சண்பேதி, பண பேதி, சத்த போதி (பேதி -மாற்று) |
| *445 - 452* | வாதிகள் புரட்டும் அறிவுரையும் | |
| *453 - 462* | வெடியுப்புச் சுண்ணம் | துரிசுக்குரு புடமிறங்கும். |
| *463 - 488* | நாக ரசக்குரு | மாற்றாகும் |

| | | |
|---|---|---|
| 489 - 493 | யூகி முனிவர் அகத்தியர் தேரையர் முதலிய சித்தர்களைக் கண்டது. | |
| 494 - 510 | ரசங் கட்டது, சுக்குரு. அகத்தியர் முறை | எப்படியும் ரசங் கட்டும். |
| 511 - 534 | துருசுக்குரு தன்வந்திரி முறை, தன்வந்திரி தனது நூலில் மறைத்தார். எனக்குக் குறிப்பாகச் சொன்னார். நான் வெளிப்படையாகச் சொன்னேன். | பத்தரை மாத்து. உடல் வலுக்கும். |
| 535 - 545 | துருசுக்குரு தேரையர் முறை | ரசங்கட்டும். உருகியாடும் தங்கமாம். |
| 546 - 561 | நாகச் செயநீா சரக்குகள் கட்ட | குருவாகும். ரசம் தாளகம் வீரம் இலிங்கம் பூரம் முதலியன கட்டாகும் மாற்றாகும். |
| 562 - 572 | வெள்ளி வித்தை | நல்ல வெள்ளி |
| 573 - 586 | கெந்தி நீறு | தங்கமாகும். நோய் நீங்கும் தாது வலுக்கும். |
| 587 - 596 | தாமிர பற்பம், நம்புதலால் இவ்வேதை நாடு செய்து முடித்தால் செயமாகும் பட்ட பாடெல்லாம் பலிக்கும். | அட்ட குன்மமும் உடல்எரிவும் நீங்கும் ரசங்கட்டும் தங்கமாம் தங்கமும் நீறும். |
| 597 - 609 | யூகி முனிவர் சிவயோகம் செய்து சிவபெருமாள் அருள் பெற்று செந்தகத் துயிலிம் முறை பெற்றதும் அதன் வேதையும். | குட்டம் பதினெட்டும் போகும் ரசங்கட்டும். வீரம் காரம் இலிங்கம் தாளகம் முதலிய எல்லாம் மெழுகாம். செம்பொன்னாகும். |

| | | |
|---|---|---|
| | | கதையாய் - நினையாதே மலைத்துத் திரியாதே. |
| 610 - 616 | பஞ்சபூதச் செந்தூலம் | செம்பொன்னாம். |
| 617 - 632 | அயச்செம்பு | நிறம் வரும். |
| 633 - 638 | மாமேருச் செந்தூலம், அய்ந்துப்பு | சங்கு இதில் கரையும் திராவகமும் பயனும் பாடாண்களும் உப்புக்களும் நீறும். ரசங்கட்டும். |
| 639 - 658 | காளமேக நாராயணச் செந்தூரம் | செம்பொன்னாம் |
| 659 - 671 | துருசுச் செந்தூரம் செய்யும் முறைமை | உயர்பொன்னாகும். |
| 672 - 681 | சரக்குக் கட்ட | பொன்னாம் கல்லுப்புக் கட்டும். |
| 682 - 688 | நாகச் செயநீர் | |
| 689 - 694 | உப்புக்கட்ட | ரசங்கட்டும். வெற்றி தரும். |
| 695 - 707 | நவச்சார வேதை | நவச்சாரம் கட்டும். தங்கமாம் தனியே மாற்றாகும். எல்லாம் உண்மை. |
| 708 - 726 | வெள்ளி வித்தை | பத்து மாற்று |
| 727 - 738 | நாகச்சுண்ண செயநீர் | பத்து மாற்று |
| 739 - 758 | ரசநாகச் செந்தூரம் | தங்கமாம், தவம் வளரும் உண்மை. |
| 759 - 770 | துருசுக்குரு | |
| 771 - 774 | வீரமெழுகு | வலுத்தத்தங்கம் |

| | | |
|---|---|---|
| 775 - 781 | தாளக வேதை | எட்டு மாற்று, அரி தாரப் பொன்னுக் ஆணியில்லை. |
| 782 - 788 | துரிசு வேதை | ரசங்கட்டும் பொன்னாம் கவச குண்டலம் செய்து அணி. தவம் உண்டாம். |
| 789 - 794 | வங்க வேதை | மாற்றாகும் |
| 795 - 823 | தங்க நீற்றினம் | செம்பொன்னாம். ரசம் மணியாகும். கோத்து தலையிலணிந்து ஒது எண் செயலாகும். |
| 824 - 842 | துரிசுச் சுண்ணம் ரச மணி | எல்லா அண்டத்திலும் பறத்தல் |
| 843 - 847 | ஐந்து சுண்ணம் | |
| 848 - 881 | போகர் தாளகச் சுண்ணம் | இந்த மணத்துக்குச் செம்பு பழுக்கும். |
| 882 - 887 | புலத்தியர் அயச்செம்பு வெள்ளியில் சேர்க்க | |
| 888 - 892 | மட்டப்பொன் மாற்றுயிர | தங்கமாகும் |
| 893 - 897 | செம்பு வெள்ளி செய்பாகம் | தங்கமாகும் |
| 898 - 906 | அயச்செம்பும் வெள்ளியும் சேர்க்கும்முறை | வெற்றியாகும் |
| 907 - 912 | தங்கக்குரு | தங்கமாம் |
| 913 - 921 | அயச்செம்பை காரீயச் செம்பில் செய்து வெள்ளியில் கொடுக்க | ஏழு மாற்று |
| 922 - 932 | அயச்செம்பை வெள்ளியில் கொடுக்கும் பாகம் | தங்கமாம். |

# நூல்

அண்ணா மலையில் அரனும் உமையாளும்
பண்ணா ரசவாதம் பாலித்தார் - கண்ணாய்
வட கிரந்தந்தன்னைவடி வாந்தமிழ் செய்தார்
திடமுடனே யூகிமுனி செப்ப - (நடங்கொள்)

சிவனு முரைசெய்தார், தேவிக்குத் தானும்
அவளுமந் நந்திக்குச் சொல்ல - அவனும்
தன்மந் திரிக்கவனும் தப்பா அசுவிணிக்கு
வன்மமுள்ள விச்வனிக்கு வாழ்த்தியதன் - தன்மை

அகத்தியருக்குச் சொல்ல ஆதி புலத்தியரும்
தகத்துடனே கேட்டுத் தான்மகிழ்ந்தார் - சகத்தில்
தேரருக்குச் சொன்னார் தேரருமே யூகிமுனி
பாரி லதிகம் பரத்தினார் - சீராய் 2

உலகம் பிழைக்க வோங்கு ரசவாதம்
கலகமில் லாமலே காட்டினார் - நிலையாக
சித்தர்சொன்ன நூலைத் திரட்டியதில் கைபாகம்
முத்திபெறச் செந்தூர முன்னிலையில் - சித்தி 3

தயிலவகை சொல்லித் தாகமுடன் சுண்ணம்
பயிலாக் களங்குவகை பாடினேன் - ஒயிலாக
கைபின் வரிசை காதலாச் செய்யும் வகை
பைய புடம்பாகம் புகட்டியே - செய்ய 4

கருவான வாதங் கடைவிட்டால் ஞானம்
தருவாக இல்லை தடைப்பட்டுத் - திருபாகம்
பிச்சை யெடுத்துண்டு பிரட்டுக்கு வுள்ளாகி
நிச்சயமாய்ப் போக நிலைபாரு - தற்செயலாய் 5

வாட்டு மிகுந்தால் வரிசையது வாராது
தேட்டுப் புடமீறில் செப்பக் கேள் - மூட்டினால்
மண்ணாகும் பொன்னுமில்லை வாதிபடிப்பு
கண்ணாளர் கண்டால் கருதுவார் - புண்ணாளர் 6

உழைத்தவர்க்குத் தோணும் உண்மை ரசவாதம்
தழைத்தவர்க்குக் காணும் தலைப்பட்டால் - புழைக்கை
ஓங்கு கணபதியை உள்ளபடி சேவித்து
தாங்கு ரசசிந்தூரஞ் சாற்றக் கேள் - பாங்காய் 7

## இரச செந்தூரம்

ரசசுத்தி பண்ணி நாடிபலம் நாலு
திசசுத்தி கெந்தி அரைப் பலம்நிறுத்து விசையாக
அரிதாரங் கால்பலமும் ஆட்டியே மூன்றும்
பரிகார மாய்ப் பொடித்துப் பாச்சியே - வரிசையாய் 8

குப்பி தனிலிட்டு குமரப் பனிரெண்டு
தப்பித மில்லாமலே தாக்கியே - மெய்ப்படியும்
யேறியே மேலே யிருக்குமே இம்மூன்றும்
ஆறியே பார்த்தா லறிவுள்ளோர் - மீறி 9

செக்கச் சிவப்பாகும் சேர்ந்து இருக்கும்
பக்கமுள்ள குப்பி உடைத்து - மிக்க
கலுவ மதிலிட்டுக் கடிய திராவகத்தின்
சலமதனைச் சொல்லுகிறேன் தாக்க - உலகர்களே 10

### 8 - 10 உரை

தூய்மை செய்த ர.சம் நாலு பலம் பத்து முறை தூய்மை செய்த கெந்தகம் அரைப்பலம் (கொந்தியை நெய்விட்டுருக்கிப் பத்து முறை பாலில் சாய்த்துக் கொள்) தூய சுரிதாரம் காற்பலம் (தாரத்தைச்

சுண்ணத்துக்குள் வைத்து நீர் விட்டுப் பத்து முறை நீற்றிக் கழுவுக) மூன்றும் பொடித்துக் குப்பியிலிட்டுப் பன்னிரண்டு யாமம் எரி. மேலே ஏறியிருக்கும், சிவப்பு நிறம். குப்பியை யுடைத்து எடுத்துக் கல்வத்தில் போடு. ஊற்றியரைக்கத் திராவகம் கூறுவேன் கேள்.

## வெடியுப்புத் திராவகம்

பொட்டலையும் பத்துப்பொடி செய்து சீனம்
கட்டளையாய் மூவெட்டுக் காட்டினார் - திட்டமாய்
இடித்துப் பொடித்து யினிவாலை தன்னில்
அடைத்துத் திராவகத்தை வாங்கியே - வடைக்க 11

அரக்கென் றகுப்பிக் கடைத்து யினிச் சொல்லுகிறேன்
பரக்கென சிந்தூரம் பாய்ச்சித் - துரக்க
அரைத்து உமிநெருப்பி லாட்டி வறுத்துத்
தரையத்துடனே மேரு தானடைத்து - உரக்க 12

எரிக்க செந்தூரமாம் யின்மாய்ச் கேளு
தரிக்க யெடுத்துஇனி தான்கேளு - பரிசிக்கில்
எட்டுக்குத் தங்கமொன்று வினிய தொருநாகம்
பட்டுக்கு முன்னிடைக்கிப் பாச்ச - பிட்டாகும் 13

செந்தூரஞ் சேர்த்துச் சிறப்பாய்த் திராவகத்தால்
மந்தூரம் ரொம்பவிட்டுமாட்டியே - பந்தனமாய்
வறுத்துக் கடமதினில் வைத்திடவே குப்பி
யெரித்து யெட்டுசாமம் எடுக்கப் - பொறுத்துமே 14

யெடுக்கச் செந்தூரமாம் இனியதொரு தங்கம்
அடுத்துரவி தன்னி லடவாகக் - கொடுக்க
நூறுக்கு ஒன்று நுழைத்துமே பூந்தாக்கால்
தேறுமோ யெட்டரை செய் மாத்துப் - பாரிலுள்ள 15

பாருக்குள் ஞானம் பலித்துமே வாசி
தாருக்குள் யோகமெனச் சாருமே - வாருமென
வாதிகளே யிந்த வகையான செந்தூரம்
பேதிக்க யூகி புகன்றேன் - வாதி செய்ய 16

மங்களஞ்செய் வாதி மௌனமுடன் தானிருந்து
தங்க ளபிமானத்தைக் காரு - உங்கள்
மனத்தை யிறுக்கி வழிபட வேநில்லு
சினத்தொரு கோபஞ்செய வேண்டாம் - அனத்தம் 17

வருமென்று தானினைந்து வல்லமையைத் தள்ளி
யிருமென்று வுன்மனத்தை யிருத்தியே - குருவென்று
வயித்தியத்தை நாடு வறுமைக்கும் போகும்
தயித்தியர் போலிருந்து தாக்கு - பயித்தியமாய் 18

## 11 - 18 உரை

வெடியுப்பு பத்துப் பலம் சீனம் இருபத்து நாலு பலம் இடித்துப் பொடித்து வாலையில் போட்டுத் தீநீர் இறக்கிக் குப்பியில் அடை. முன்பு குப்பியில் வைத்த எரித்துக் கல்வத்தில் போட்டு வைத்துள்ள செந்தூரத்தில் விட்டு அரைத்து உலர்த்தி உமி நெருப்பின் மேல் சட்டியில் போட்டு வறுத்துக் குப்பிக்கேற்றி நன்முய் எரி. செந்தூரமாகும். இச் செந்தூரத்தில் எட்டுக்கு ஒன்று தங்கம் எடுத்து அதனெடை நாகம் (தூய்மை செய்தது) சேர்த்து உருக்கிப் பிட்டாக்கி அதனொடு சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வறுத்துக் குப்பியில் ஏற்றி எரிந்து (8 - சாமம் எரி) எடு செந்தூரம். செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. எட்டரை மாற்று.

### வீர செந்தூரம்

சொல்லாத பேருக்குச் சொல்லவே வேண்டாங்கான்
நல்லவே யோகம் நாடுவீர் - நல்லாய்

வீர செந்தூரத்துள் வேதை யினி பாகம்
பாரமிலையென்று செய பத்தியே - காரமாய் 19

தங்க மயமாகத் தாக்கவே சொல்லுகிறேன்
உங்கள்குல மீடேற ஒடியே - சிங்கம்
வீர மகராசன் வீர சயராசன்
பாரமிகு வேதைகளும் பாலிப்பேன் - காரமாய்ச் 20

செந்தூரஞ் செய்யச் செப்புகிறேன் கேளும்
பந்தூர வீரம் பலமெட்டு - சிந்து
கெந்தி பலமொன்று கிருபையுள்ள தாகனமும்
நந்திபல மோரரையாம் நாட்டியே - சிந்தாமல் 21

பொடி செய்து குப்பிதனில் போட்டுமே கல்மூடி
படி செய்து மேரு வினிலடைத்துப் - படியாகக்
காடாக்கினி யெரித்துக் கட்டமுட னேநிறுத்தி
பாடாகக் குப்பி பதமாகச் - சோடா 22

யெடுத்து உடைத்து யினியவே தான்பார்க்க
அடுத்துமே வீரம் அருணநிறம் - தடுத்துத்
தீநீரை விட்டுச் சிறக்கவே ரொம்பப்
பாநீருமி நெருப்பில் பாகமாய்த் - தேனேகேள் 23

வறுத்து அடைத்து வளமாக வெண்சாமம்
எரித்து எடுக்க யினிக்கேளு - நிறுத்து
முருக்கினுட் பூப்போல முன்னே யிருக்கும்
தருக்குமிகச் செந்தூரம் தானே - திருத்தமாய் 24

ஏமமொன்று சேர்த்து யினியதொரு நாகம்
ஆமொன்று யுருக்கி அடவாக - சாமம்

அரைக்க திராவகமும் ஆட்டி வறுத்து
நிரைக்கவே மேருவினில் நிச்சயமாய் - உரைக்க 25

அடைத்து யெரித்து ஆனரவிநூறில்
தடைத்துக் கொடுக்கத் தங்கமாம் - படைக்க
ரசவாத மாம்பெரிய நாடியே வுண்டால்
முசவாத மெல்லாம் முழுங்குமே - நிசவாதம் 26

காய சித்தியாகும் கடிதான யூகிமுனி
தாயகமாய்ச் சொன்னூர் தயவாகத் - தோய
வாதி ரசவாதி வடிவான சிந்தூரம்
பேதிக்கச் செய்து பெலப்படுத்தி - சேதியே 27

உங்கள்குல மீடேற வுண்மை யிதுபாரும்
நங்கள்கை பாகமெல்லாம் நாட்டியே - திங்கள்
தங்கமிலாச் செந்தூரம் தாக்கவே மாத்து
அங்கமிலாச் சேவகண்போ லாகுமே - யுங்கள் 28

மனதுதனி லெண்ணி வகையான செந்தூரம்
கனகமது ஆகக் கருத்தா - யினமாகச்
சத்தியமாய்ச் சொன்னேன் தயவாக நம்புமினி
முத்திபெறத் தங்க முடியும் - சித்தியாம் 29

## 19 - 29 உரை

வீரசெந்தூரம். வீரம் எட்டு பலம். கெந்தி ஒரு பலம் தாளகம் ஒன்றரைப் பலம் பொடி செய்து குப்பியில் போட்டு எரித்துச் செந்தூரமாக்கு. கல்பத்தில் போடு. திராவகம் விடு. அரை வறு. எடு. குப்பியிடு. எரி தங்கம் ஒன்று தூய நாகம் ஒன்று சேர்த்து உருக்கு அதனொடு சேர்த்துத் திராவகம் ஊற்றி அரைத்துக் குப்பிக்கு ஏற்றி எரித்துச் செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு தங்கமாம். துணை மருந்தோடு உண். முசல் வலிப்புப் போகும். உடல் வலுக்கும்.

## ரசகற்பூரச் செந்தூரம்

பூரச் செந்தூரம் புகலக் கேள் வாதிகளே
தாரம அரையுந் தகர்த்துப் பார் - சேரவே
கெந்தகந்தா னொன்று கெடியான பூரமது
அந்தப் பலம்நா லடவாகச் - சிந்தாமல் 30

பொடி செய்து குப்பியிட்டுப் போட்டுப்பனிரெண்டு
அடியா யெரித்து அளக்கப் - படியாக
முருக்கம்பூப் போலே முக்கியமா யிருக்கும்
தருக்கத் திராவகத்தை தாக்கியே - வறுத்து 31

மேருவினி லிட்டு மேன்மைபெறத் தானிருக்கக்
காருமெனச் செந்தூரம் காதலாம் - பாரும்
தங்கமொன்று நாகமொன்று தாக்கி யுருக்கியிடு
திங்களைப்போ லேயிருக்கும் சீக்கிரமாய் - பங்காய் 32

### 30 - 32 உரை

பூரம் நாலு பலம் கெந்தியொரு பலம் தாளகம் அரைப்பம் பொடித்துக் குப்பியிலிட்டுப் பன்னிரண்டு யாமம் எரிக்கச் செந்தூரமாம். தங்கம் ஒன்றும் நாகம் ஒன்றும் சேர்த்து உருக்கு.

அரைத்து அடைத்து அன்பாகத் தானெரிக்க
பரைத்த முருக்கம்பூப் பாரும் - நிரைத்த
செம்பு தனில் நூறுதிட்டமாகக் கொடுக்க
ஒன்பது மாற்று வுறுதியாம் தென்பாக 33

### 33 - உரை

செந்தூரத்துடன் நாக தங்கத்தைச் சேர்த்து அரைத்துக் குப்பியிலிட்டு எரித்துச் செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. ஒன்பது மாற்று.

எட்டரையும் காணு மினியதாம் காயசித்தாம்
முட்டவே வாசிமுடியும் - திட்டமாய்
தாரங் கெந்தியில்லா தகுந்ததோர் செந்தூரம்
பாரமது இல்லை பலியாது - நேரமாய் 34

**34 - உரை**

சில வேளை எட்டரையாகவும் இருக்கும். உடல் உறுதியாம். வளி நிலைக்கும். தாரமும் கெந்தியும் சேராத செந்தூரத்திற்கு நலமில்லை.

செந்தூர மெல்லாம் சிவப்பாக விப்படியே
நந்தூர மாய்ச்சிவக்கும் நாடியே - பிந்தாமல்
கையகமாய்ச் செய்தால் கனகமது வுண்டாகும்
பைய்யவே நிர்ணயமாய்ப் பாரு - வையகத்தில் 35

ஓங்குபுகழ் செல்வம் ஓதவரு முன்றனுக்கு
நாங்க ளென்ன செய்வமென்று நாடாதே - வாங்க
சுட்டுத் திரியாதே தொல்புவியி லுள்ளோர்கள்
மட்டுப்படா வுன்னை வைகுவார் - செட்டாக 36

இருமெனவே யென்று மிருக்கக் கணிதரிடம்
தருமெனவே சாதகத்தைத் தான்காட்ட - வருமெனவே
என்றிப் படியே யியம்பினார் யூகிமுனி
அண்டிப் படித்தார் அநேகபுத்தி - நன்றி 37

35 - 37 அறிவுரை

**குடவன் செம்பு**

குடவனைத் தான் தட்டித் தகடு திராவகத்தி
லடகாக யேழுதிதிவைத்து வைத்துத் திடமாக

வுருக்கச்செம் பாகும் வுண்மையாய்க் கேளு
நருக்கு வுருக்கிநீ நாலிலொன்று - உருக்கு 38

### 38 - உரை

பித்தளையைத் தகடு தட்டித் திராவகத்துள் ஏழுநாள் போட்டுவைத்து எடுத்து உருக்கு. செம்பாகும். அதனொடு இரும்பு சேர்த்து உருக்கு.

## அயச் செம்பு

சேர்த்து வுருக்கச் சேராமை போலிருக்கும்
பார்த்து மெள்ளத் தானெடுத்துப் பத்தியே - சாத்தி
நொறுக்கு மதிதன்னில் நோகாமல் சேர்த்தூத
நறுக்கும் பசுமை நாடியே - யிருக்கும் 39

### 39 உரை

உருக்கச் சேராதது போல இருக்கும். எடுத்து நொறுக்கு வெள்ளியில் சேர்த்து ஊது. பசுமையாக இருக்கும்.

பொன்சேர்த்து ஊது பேரான பொன்னாகும்
நன் சேர்த்து ஊத நலமாகும் - இன்பமாகும்
பொன்னிட்டால் பொன்னாகும் போத ரசவாதி
பின்னிட்டால் ஒன்றுமில்லை பேசக்கேள் - நன்னிட்டால் 40

### 40 - உரை

அந்தப் பசுமையொடு தங்கம் சேர்த்து உருக்கு நலமாகும். பொன்னிட்டால் தான் பொன். பின்வாங்கினால் பிழை.

## அயம் உருக்க

கலங்கமெல்லா மிந்தக் கருத்தாகச் செய்தாக்கால்
உளங்கொள்ளும் வேதை யுசருமே - பளங்கமாம்

அயத்தில் வெகுவேதை ஆண்மையாய்ப் பொன்னாகும்
நயத்தி லுருக்குமென நாடுமே - பயப்படா 41

கெந்தகமும் பத்துக்கெட்டி அயம் ஒன்று
பந்தமா அஞ்சுதரம் பாச்சியே - சொந்தமா
ஆட்டி அரைத்து அன்பாக அஞ்சுதரம்
பூட்டி யுருக்கு புகழகத் - தாட்டிகமாய் 42

எடுக்கக் கருக்கும் யினிய வெங்காயம்
அடுத்துப் பொரித்து அதிலீட்டுத் - தடுத்து
அரைத்து உருக்க ஆனமணியாகும்
தரைத்துருகச் சட்டைத்தான் தட்டும் - உரைத்து 43

## 41- 43 உரை

களங்கமெல்லாம் இங்ஙனம் செய். இரும்பில் மாற்று உண்டாகும். கெந்தகமும் அயமும் சேர்த்து அரைத்து உருக்கு. ஐந்து முறை செய். கருப்பாகும் வெங்காரம் பொரித்துப் போட்டு அரைத்து உருக்கு. மணியாகும் திரை சிறிது இருக்கும் (வீரம் சேர்த்து உருக்க வெட்டையாகும்)

### துரிசுக்களாங்கு

அயச்சுவடு போக்கு ஆனவெள் வீரத்தால்
நயத்து உடைக்க நல்லெட்டை - சயமா
வெட்டை ஒருபலமும் வேண்டிநீல கண்டன்
தட்டையே பத்துத்தான் சேர்த்து - நிட்டை 44

அரைத்துப் புடமிடநீ ஆனதொரு திராவகத்தால்
நரைத்துமே அஞ்சுபுடம் நாட்டியே - யரைத்து
யெடுக்க குருவாகு மின்பு ரசவாதம்
அடுத்து எடுத்து வதின்பிறகு - தொடுத்து 45

நொறுக்கு வெள்ளி ஊதி நுட்பமாம்பத்து
நறுக்குரவி ஒன்று நாட்டியே - யெடுக்க
யேழாகு மாத்து மினியாதொரு சிந்தூரம்
பாழாகப் போகமால் பத்தியே - தாழாகப் 46

பத்தியே செய்து பதிவா யிருந்தாக்கால்
முத்தியது மாற்று முதன்மையாம் - சித்தர்களா
யிருக்க ரசவாத மின்ப சுகமாக
பருக்க இருக்கப் பதம்பாரு - பொருக்க 47

## 44 - 47 உரை

அயவெட்டை யொரு பலம் - துரிசு பத்துப் பலம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துப்புடமிடு. இங்ஙனம் ஐந்து புடமிடக் குருவாகும். எடுத்து நொறுக்கு வெள்ளியில் எட்டுக்கு ஒன்று கொடு. ஏழு மாற்று.

## பேதி மாத்திரை

பேதிக்கித் தானுரைக்க பிரபலமாய்ச் சொல்லுகிறேன்
ஆதியாய் நேர்வளம் ஐம்பதுதான் - சேதி
யெடுத்துக் கருக்கி யின்பமாய்த்தான் கொட்டி
அடுத்துஇன்னம் வாளம் அதிற்பாதி - தடுத்து 48

பச்சையாய்க் கொட்டி பதிலா யரைவாசி
யிச்சையாய்ப் பச்சை யிளங்கருக்காய் - நிச்சயமாய்
வேர்க்கொம்பு ஒன்று விருப்பமாய்த் திப்பிலியும்
ஆர்க்க மிளரும் அடவாக - யேற்கவே 49

## வேர்க்கொம்பு - சுக்கு

இந்துப்பு ஒன்று இன்பமாய் ரோகணியும்
சிந்தனையாய்க் கடுக்காய் செயமாக - பந்தனமாம்

வகைக்கு ஒன்று சேர்த்து வலுவாய்க் கலுவமதில்
தொகைபார்த் திடைசமனாய் சேர்வான் வகையாகும் 50

நிம்பப் பழச்சாத்தில் நேரா யரைத்துஎடு
நம்பா யிலந்தைவிதை நாட்டியே - யின்பமாய்
வென்னீரிற் கொண்டால் விருப்பமுள்ள ஈளைசுரம்
தன்னிலே யோடித் தவிக்கும் - சொன்னேன் 51

அகத்தியரும் பச்சை அடைவாகத் தான்மறைக்கத்
தகத்துடனே வயித்தியர்கள் தான்கேட்டு - தகையாய்
துருவதுதான் பச்சை துகையா யரைத்தோரும்
மருத்துதான் கேட்டு பதைத்தோம் - உருசை 52

பச்சையிது பச்சை பகையாகக் பின்வென்றை
நிச்சயமாய்ச் சேர்த்து நினைவாக - வெச்சை
கொடுக்கவே வாந்தி கொடூரமாயத் தான்பண்ணி
அடுக்கவே பாகம் அலைந்தோரும் - நடுக்க 53

செய்யாது செய்து சிக்குத் திரியாமல்
பய்யவே பச்சையதைப் பாகமாய்ச் - செய்து
வயித்தியத்தைப் பார்த்து வகையாகச் சிவனமும்
நலத்துடனே பேசி நலமாக்கு - பயத்தில் 54

## 48 - 54 உரை

நேர்வாளம் தூய்மை செய்க. ஐம்பது விதையைக் கருக்குக. இருபத்தைந்து விதையைப் பச்சையாய்ச் சேர்க்க. இரண்டையும் அரை. சுக்கு திப்பிலி மிளகு இந்துப்பு கடுக்காய் கடுகு ரோகணி வகைக்கு ஒரு பலம் சேர்த்துத் தூள் செய்து அதனுடனே வேப்பம் பழச்சாறு விட்டரைத்து இலந்தை விதையளவாக உருட்டுக. வெந்நீரில் உரைத்துக் கொடு. ஈளைக் காய்ச்சல் போகும். துணைமருந்துக்கு ஏற்ப மிகப் பல நோய்

போகும். யூகி முனிவர் கும்மியில் காண்க. பச்சையை அகத்தியர் மறைத்தார் என்று இந்நூல் கூறும். கோரக்கர் முட்டைக் கருவிட்டரைத்தால் வேண்டும். அது பச்சை என்பர்.

## இலிங்க ரகச் செந்தூரம்

லிங்கச் செந்தூரம் நிலவரமாய்ச் சொல்லுகிறேன்
அங்கமது வன்னிரசம் ஆறு - தங்கமாம்
உப்பி லெரித்து உபாயமாய்த் தானெடுக்க
தப்பிதமில்லாம லப்பூதானொக்கும் - இப்புவியில் 55

நாலுக்கு ஒன்று நாட்டியே கெந்தகமும்
காலுக்குத் தாளகமும் காட்டியே - சேலாய்
அரைத்து எரி குப்பியினில் ஆட்சியாயத் தான்சிவக்கும்
பரைத்து எடுத்துப் பலிதம்பார் - நிரைத்துத் 56

திராவகத்தை ஊற்று தப்பாமல் ரொம்ப
பராமுகமாய் வறுத்துப் பாகமாய் - நுராபோகம்
குப்பியிட்டுக் காய்ச்சிக் குரூரமாய்த் தானெரிக்க
தப்பிதமில்லாம லெடு தாட்டிகமா - யிப்புவியில் 57

பத்துக்கு ஒன்று பான்மையாய்த் தங்கம்
சித்துக்கு நாகம் சிறப்பாக - முத்தி
சேர்த்துருக்கப் பிட்டு செயமான செந்தூரம்
பார்த்து மெல்லக் கூட்டுபதமாக - சேர்த்து 58

அரைத்து வறுத்துளரி ஆமெனவே செந்தூரம்
புரைத்து ரவியினிலே புக்கியே - நிறுத்து
நூத்துக்கு ஒன்று நேரான தங்கமாம்
பார்த்துஇது சத்தியமாய்ப் பண்ணு - நேர்த்தியாம் 59

**55 - 59 உரை**

ஆறுபலம் இலிங்கரசம் வேண்டும். இலிங்கத்தை உப்பில் வைத்து எரி. மேலே ஏறிப் பூப்போல் இருக்கும். 6 பலம் எடு. கெந்தகம் ஒன்றரைப் பலம். இதில் நாலில் ஒரு பங்கு தாளகம். சேர்த்துத் திராவகம் ஊற்றி அரைத்துக் குப்பியில் போட்டு சீ.ம.செ. வாலுகையடுப்பில் வைத்து எரி. சிவக்கும். திராவகம் ஊற்றி உமி நெருப்பில் வறு. எடு. பத்திலொரு பங்கு தங்கமும் அதனெடை நாகமும் சேர்த்து உருக்கிப் பிட்டாக்கி அதனொடு சேர்த்துத் திராவகம் விட்டு அரைத்துக் குப்பிக்கு ஏற்றி எரி. செம்பில் நூற்றுக்கு ஒன்று சேர். தங்கம். இலிங்கரசத்தால் செய்த தங்கத்துக்கு ஒப்பான தங்கம் இல்லை.

## வீரச் செந்தூரம்

லிங்கரசம் போல நேரான தங்கமில்லை
துங்கமாம் வீரரசம் சொல்லக்கேள் - உங்கள்
ரசவாதம் செய்து நல்லாக ஞானம்
பிசகு வாராமலே பெற்று - நிசவாதம் 60

வீரரசம் பண்ணி விரும்பிப்பலம் எட்டு
தாரமதி லரையும் தாக்கி - பாரமாய்க்
கெந்திபலம் ஒன்றுகேட்டு நிறுத்து
அந்தி பகல் பொழுது ஆட்டியே - முந்தி 61

குப்பி தனிலிட்டுக்குமுற பெரித்திடவே
தப்பியே யெரிக்கத் தான் சிவக்கும் - இப்புவியில்
திராவகத்தை விட்டுத் தப்பாமலே வறுத்து
பராமுகமாய்ப் பாரமல் பக்குவமாய் - வராமுகமாய் 62

எரித்து எடுக்க இனிய சிவப்பாகும்
அரித்துமே பத்து அன்பாக - நிறுத்து

தங்கமொன்று நாகமென்று தப்பாமல் சேர்த்து
திங்களைப்போ லுருக்கிச் சேர்த்துமே - தங்காமல் 63

அரைத்து எரிக்க அன்பாய் முருக்கினுடன்
பரைத்துச் செந்தூரம் பாகம் - நிரைத்து
செம்புதனில் நூறுதிட்டமாகக் கொடுக்க
நம்புகினித் தங்கமாம் நாட்டியே -தெம்பு 64

எடுத்துச் செலவழித்து இனியதோர் ஞானம்
அடுத்துமே பார்த்து அன்பாகத் - தொடுத்து
ஞானமிகப் பார்க்க நல்கினோம் கேளும்
ஏனமிரும் பாகமாய் ஏற்று - மோனமிகும் 65

பத்தியாய்ப் பாரு பரம னுரையாகும்
முத்தியாய் பாரு முழுமுதலாம் - சித்தியாம்
என்றிப் படிதான் இயம்பினார் யூகிமுனி
அன்றிப் படிதான் அநேகமாம் - நன்றி 66

தருஞ் செல்வம் வாதம் தடையறவேயில்லை
பெருஞ்செல்வம் யோகம் விளையும் - பெருஞ்செல்வம்
ஆனதொரு பாகம் அடவாகத் தான் பார்க்க
ஞான மிருந்து நலமதாம் - மோனமாம் 67

வீரபூரஞ் சொன்னேன் விரும்பு ரசஞ்சொன்னேன்
பாரமில்லை சிந்தூரம் பத்தினேன் - காரமாய்
சுந்த ரசவாதி சுகமாகத் தானறிவான்
பத்த வெடு தங்கம் பாக்கியமாம் - நித்தம் 68

கெந்தகத்தின் தன்பெருமை கேட்டபேர்க் கெல்லாம்
பந்தனமாகும் பகரா - சிந்தனையா
வாதசுத்தி பண்ண வகையறியாமல்தானும்
சேதிமிகக் கேட்டுத் திரிகுவார் - பாதி 69

பொன்னே யெனக்குவரும் பேராசையாய்ச் சொல்லி
யென்னேர மேய்க்க யெழுந்திருந்து - முன்னே
நன்னயமாய்ப் பேசி நாடித் திரிவார்கள்
பின்னே பிறளி பேசுவார் - நன்னயமாய் 70

வாதக் கரிச்சுட்டு வகையாக இப்படியே
சோதிக்கக் கேட்டுத் திரிவோரும் - மாதர்தங்கள்
நாதத்தை வாங்கி நன்மையாய்ப் பொன்னாக்கப்
பேதமையாய்க் கேட்டுப் பிதற்றியே - காதமாய் 71

வாதம் சொலவேணு மருவியவன் பின்னே
சேதப் படப்பொன் செலவழித்துப் - பேதமாய்
நாகத்தைக் கட்டி நலமான செம்புதனில்
பேதப் படக் கொடுத்துப் பொன்னைப்போ - லாக 72

எடுத்துத் திரிந்து ஏங்கி முகம்வாடி
அடுத்துக் கடையி லலைவோரும் - படுத்து
கிடக்கயிலே யோசனைகள் கேட்டு எழுந்திருந்து
படுக்கையிலே பூசைபண்ணப் பார்ப்போம் - நடுக்கம் 73

சாராயங் கள்குடித்து சாப்பாடு நின்றும்
பாராயண வாதம் பகர்வோரும் - நீரா
குகையிலே வைத்துக் குனிந்தூதி வாதப்
புகையிலே கண்கெட்டுப்போ வோரும் - நகையாய் 74

கெந்தியைத் தான் காணாமல் கேடுகெட்டவாதி
அந்தி பகலாய்த் திரிந்தலைவோரும் - சிந்தனையாய்
சவுக்காரங் கெட்டு சவுங்கலாக வலைந்து
நவக்காரம் எண்ணெயிட்டு நாடியே - தவக்கமாய் 75

## 60 - 75 உரை : வீரரச செந்தூரம்

முன்னைய வாத காவியத்தில் கூறியவாறு வீர ரசம் எடுத்து எட்டுப் பலம் நிறுத்துத் தூய அரிதாரம் அரைப் பலமும் தூய தாக்கிய கெந்தியொரு பலமும் சேர்த்து அரைத்துக் குப்பியிலிட்டு எரித்துப் பார்க்கச் சிவந்திருக்கும். பின்பு அதில் திராவகம் ஊற்றி (ப்பீங்கனில் போட்டு) உமி நெருப்பில் வைத்து வறுத்துக் குப்பியிலிட்டு எரி. நல்ல சிவப்பாகும். இச் செந்தூரம் பத்துக்கு ஒரு கூறு நாகமும், பத்துக்கு ஒரு கூறு தங்கமும் சேர்த்து உருக்கிப் பின்பு அதனுடன் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து உலர்த்திக் குப்பியிலிட்டு எரிக்க முருக்கம் பூவினும் மேலான நிறமுள்ள செந்தூரமாம். செம்பினைத் தூய்மை செய்து நூற்றுக்கு ஒன்று கொடு. தங்கமாம். செலவு செய்து ஞானவழியெடுத்துத் தெளிவு பெறு. 66 - 70 அறிவுரை.

### கெந்தக சுத்தி

நல்லாகக் கெந்திசுத்தி நாட்டியே சொல்லுகிறேன்
புல்லாப் பலமும் பதினெட்டு - சல்லாபம்
மஞ்சள் தயிலம் வாங்கியே விட்டரைத்துத்
தஞ்சமுடனே பொடித்து சாத்தக் கேள் - மிஞ்சாமல் 76

பன்னடையச் சுத்தி மேல் பதிய வேகட்டி
நன்னயமாம்ச் சட்டியிடு நற்கெந்தி - சின்னச்
சட்டியரை வாசி தானுடைத்து மேல்கழுத்து
வட்டியது சட்டிமேல் வைத்திடுநீ - திட்டி 77

மேலே புடம் வைக்க விருப்பமுள்ள கெந்தகமும்
காலே மணியிறங்கும் காரமாய்ப் - ப்ால்விட்டு
அடிச்சட்டி தனிலிறங்கும் ஆன மணியெடுநீ
பொடித்து எடுத்துப் பிறகு - தடுத்து 78

**76 - 78 உரை**

கெந்தகம் பதினெட்டுப் பலத்தில் மஞ்சள் தயிலம் விட்டரைத்து எடுத்துக்கொள். ஒரு சட்டியில் பாலூற்று. அதன் மேல் பன்னாடை பரப்பிக்கட்டிக் கந்தகத்தைப் பரப்பி மேற்சட்டி மூடி மேலே மணலிட்டு மேலே புடமிடு. உருகிப் பாலில் விழும். இங்ஙனம் ஐந்து முறை செய்ய நல்ல தூய கெந்தகமாம்.

## கெந்தகத் தயிலம்

அரைத்துமே அஞ்சு அடைவாதத் தானெரிக்கப்
பரைத்தநல்ல சுத்தி பண்பாகும் - திரைத்து
எடுத்து அரைத்து இனியமஞ்சள் தயிலத்தில்
அடுத்துக் குழப்பி அரைச்சூடாய் - வடிக்கத் 79

தயிலமாம் கெந்தி தனி நாத்த மில்லாமல்
அயில மாந் தங்க மதனொப்போ - பயிலாக
ஆடுஞ் சரக்கு அறுபத்துநால் பாழான
கூடுஞ் சரக்கு குணமாக - நாடும் 80

கட்டும் உருகிவிடும் கரியில் நின்று வேதைத்
திட்டமுட னாகும் திடமாக - முட்டெனவே
தங்கமாம் வேதை தாய்சொல்ல யான்கண்டேன்
பங்கமில் லாமலே பாரு - உங்கள் 81

தவப்பேறு மாகும் தனியான வாதம்
கலப்பேறு மானகடல் துலக்கம் - உவப்பாய்
தருகுமே பொன்னுந் தவமாய் கருவாகும்
பருகுமே பாக்யம் பலிக்கும் - நிருபாதம் 82

இல்லாமல் போனால் நேராக வாராது
எல்லாம் பணம் வேணும் இன்பமாய் - நல்லா
இருக்க வல்லோ சொன்னேன் ஏனழமதி போகாமல்
முருக்கநிறஞ் செந்தூரமெத்தத் திருத்தமாய் 83

மாத்தாகுந் தங்கம் வல்லமையு மாகும்
சேத்தாக்கால் வாதம் செயமாகும் - ஏத்த
நவலோகமெல்லாம் நல்லாகச் செந்தூரம்
தவமாய்க் கிடைக்கும் தப்பாமல் - நலமாக 84

## 79 - 84 உரை

முன்பு தூயதாக்கிய கெந்தியை எடுத்து அரைத்து மஞ்சள் தைலத்தில் குழப்பி அரைச் சூடாய்ச் சுட வைத்து வடித்து எடு. நாற்ற மிராது. எல்லாச் சரக்கும் உருகும்; கட்டும். கரியில் நின்று கண் விட்டாடும். மாற்றாகும். தாய் சொல்லயான் கண்டேன். தவப் பேறாகும். செந்தூரமுமாகும். தவமாகக் கிடைக்கும் தப்பாது.

## செம்பு அயம் காரீயம் சேர்த்துக் கரியாக்கிச் செம்பெடுக்க

ஒன்பது லோகமெல்லாம் ஒக்கவே செந்தூரம்
தென்பாகும் வேதை செயமாக இன்பமாய்ச்
சொல்லக்கேள் வாதி சேர்க்கவே செம்புஅயம்
நல்லாக ஓரிடையாய் நாடியே - வெல்ல 85

காரியொன்று கூட்டிக் கனக்கவே மூன்றும்
நாரிஎடை பாகமா யுருக்கி - பாரி
கெந்தி எடை ஒன்று கிராசம் கொடுக்கநலம்
வந்தியாய்த் தானெடுத்து வைத்துமே - முந்தி 86

தாளகத்தை ஒண்ணு தாக்கவரை திராவகத்தால்
பாளக மில்லாமலே பத்தியரை - யேழு
அரைத்துப் புடமிட நீ அன்பாகச் செந்தூரம்
வரைத்துச் சிவக்க மட்டும் மாட்டியே - நிரைத்து 87

எடுத்து நிறுத்து இன்பமே யோரெடைக்கி
அடுத்த துரிசுபத்து ஆட்டியே - தடுத்து
அரைக்கப் புகைநீரால் ஆட்டியே வில்லை
பரைத்துப் புடம் நாட்ட பக்குவமாம் - பருக்க 88

மாத்தேழு மாகும் மயங்கித் திரியாமல்
நாத்திசையும் போற்றுவார் நாட்டியே - பார்த்து
பின்னியெடு மின்னும் பிறழாதே வேலைக்கி
தன்னிலே ஒட்டுந் தயாவாகும் - நன்னயமாம் 89

குற்றமில்லாப் பொன்னாகும் குறைவற்ற செல்வம்
அத்துடனே சேர்த்து அருள் பெருகும் - சத்தியமாம்
என்றிப்படிதான் இயம்பினார் செந்தூரம்
அன்றிப் படித்தான் அநேகமுமாய் - நன்றி 90

தெரியாத வாதிகளோ தேசத் தலையாமல்
பரியாச மில்லாமல் பாரு - துரியமாய்
எத்தனைமுன் சொன்னேன் ஏராளச் செம்பெடுக்க
அத்துடனே இரும்பு அந்தெடைக்கி - நத்தி 91

உருக்கி எடை தாக்கு உண்மையாக் கெந்தகமும்
நருக்க வுடைத்து நலமாகப் - பெருக்க
தாளகத்தை நாலிலொண்ணு தாக்கியரை திராவகத்தால்
ஏழைமதி போகாம லிடுவில்லை - தாளகஞ் 92

சிவக்கப் புடம்வைத்துச் சிவக்காதே போனால்
தவக்கமில்லாமல் புடம்தாக்கியே - உவக்கச்

செந்தூரமாகும் சேருமே தான்துருசு
சிந்தையுடன் பத்தச் சிறப்பாகப் பந்தியாய் 93

நேக அரைத்து நின்வாக வில்லைகட்டி
தாகமுடன் திராவகத்தால் தாக்கியே - பாகமாய்
தீயப்புடம் ரெண்டு செப்பமாய்ப் போட்டெடுக்க
தாயக மாய்க்குருவு தானாகும் - பாய 94

நொறுக்கு மதிதன்னில் நுகரவே பத்து
நறுக்கென்று தான் கொடுக்க நாடவே - பெருக்கமா
யெட்டரையுங்காணும் இனமுள்ள பொன்னாகும்
தட்டவே தங்கம் தானாகும் - பட்டடையிற் 95

பித்தளையென் றாலெளிதாய்ப் பேதனமயாம் வாதி
நத்தியே சொல்லி நகைப்பான் - வித்தையாய்ப்
பொன்னுக்கு ஆதிபேர் பெரிய பித்தளையும்
தன்னிலயம் நாடத் தாக்குமே - நன்னயமாய் 96

## 85 -96 உரை

செம்பு அயம் காரீயம் மூன்றும் ஓரெடையாய்ச் சேர்த்து உருக்கி உருக்குமுகத்தில் ஓரெடை கெந்தியைத் தூவுக. தூவி எடுத்துத் தாளகம் ஓர் எடை சேர்த்துத் திராவகம் விட்டரைத்துச் சிவக்குமட்டும் புடமிடச் செந்தூரமாம். பின்பு எடுத்து நிறுத்து ஒன்றுக்குப் பத்து துரிசு சேர்த்துப் புகை நீர் விட்டு அரைத்து வி.த.கா. புடமிடு. எடுத்து ஒன்பதிலும் தனித்தனியாகவோ கலவையாகவோ உருக்கிகொடு ஏழு மாற்றாகும்.

செம்பும் அயமும் நேர் எடை எடுத்து உருக்கி அதனெடை கெந்தி தாக்கி உடைத்துத் தாளகம் நாலில் ஒன்று சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வி.த.கா. புடமிடு. சிவக்கும் இல்லாவிட்டால் மீண்டும் புடமிட்டுச் சிவக்கச் செய். எடுத்து அவ்வெடை துரிசு சேர்த்துத் திராவகம் ஊற்றி அரைத்து வி.த.கா. புடமிடு. இப்படி பின்னும் ஒரு முறை போடு. குருவாகும்.

வெள்ளியை நொறுக்கு வெள்ளியாக முன் நூலில் கூறியபடியாக்கி அதில் பத்துக்கு ஒன்று கொடு எட்டரை மாற்றாகும்.

## பித்தளைச் செம்பு

சருகுதான் பித்தளையைச் சாத்தக் கேள்சாத்த
உருகுமே யுருக்கி யொருபலந்தான் - வருக
உருக்கித் தகடடித்து உண்மை மருந்தைத்
திருக்கமுடன் சொல்லுகிறேன் சீனம் - நறுக்கக் 97

கரியில் வைத்து மேலூதக் காரமாகச் சிவந்து
பரியாகச் சுண்ணமாம் பாரு - திருமாது
வீரம் இடை சேர்க்கமேவுஞ் சிவப்பாகும்
ஆரமுடன் பித்தளையி னதின் மேலே - பாரம் 98

பூசியே காய வைத்து போடப் புடம்நாலு
ஆகியது செம்பு அபரிபோல் - பாசம்
இருக்கு மந்தச்செம்பை யியன்ற நொறுக்கு வெள்ளி
தருக்குமிடைநாலி லொண்ணு சாத்து - உருக்க 99

பசுமையாம் வெள்ளி பதிய வேயூதித்
தசுவையாம் நாலிலொண்ணு தங்கஞ்சேர் - கசுமையாம்
சேத்தூத மாத்துச் சிறப்பாக யேழரையும்
பாத்தூத வாதம் பலிக்குமே - நேத்து 100

தேரர் சொன்னதாம் பேச்சு செப்பமாய் மாத்து
ஆரவறிந்து அதைப் பாரு - நேராய்
உங்கள் குல மீட்டேறும் உங்கள்தவ மேபலிக்கும்
துங்க ரசவாதம் சொலிக்குமே - அங்கம் 101

வாய்ப் பேச்சுச் சொன்னால் வழக்காகும் லோகம்
காய்ப்பேச்சுத் தானிருக்குங் காரணமாம் - மேய்ப்பாகத்

திரியாதே பித்தளையைச் சீர்தூக்கிப் பாரு
அறியாயோ தங்கம் அடைவாகும் - நரியாக 102

விடத்தைத் தான் தின்று வீண்மதங்கள் பேசாதே
நடத்தை யறிந்து நலம்பெறுநீ - திடமாக
வாய்க்கும் எளிதாய் வகையா யறிந்திடுநீ
தாய்க்கு முலைப் பாலு தாழ்ச்சியோ - பேயாய்த் 103

திரிந்து அலையாதே திறமாய்க் குடவனைத்தான்
அறிந்து எடுத்து அலுவல்பார் - பரிந்து
செல்வம் நிலையாது தேறரச வாதம்
மல்குமே யென்னேரம் வந்திடுமே - புல்க 104

பணத்தைச் செலவழித்தால் பாக்கியங்கள் போகுமவ்
வினத்தின் ரசவாதம் ஈயமே - கனத்த
சிதம்பரத்தைப் பாரு தொல்நடனம் தோணும்
அதம்பரத்தால் கெட்டு அலையாதே - இதமாய் 105

ஆடித் திரிந்து அலைந்து திரியாதே
பாடி ரசவாதம் பாரு - தேடி
பெருநூலிற் சொன்ன பேதத்தை யிப்போ
தருமநூ லுலாவிலே சாத்தினேன் - மரும 106

## 97 - 100 உரை

சருகு பித்தளை ஒரு பலம் எடு. உருக்கு. தகடாக்கு. சீனத்தைக் கரியில் வைத்து ஊது. அதனொடு வீரம் சேர்த்து அரைத்துத் தகட்டில் பூசு. காயவை. புடமிடு. இப்படி நாலு புடத்தில் செவ்வலரி போல் செம்பாகும். வெள்ளியில் நாலில் ஒன்று கொடு. அதற்கு நாலில் ஒன்று தங்கம் சேர். ஏழரை மாற்று. 100 - 106 அறிவுரை

## பித்தளைச் செம்போடு அயம் சேர்க்க

பித்தளையின் செம்பு சொன்னேன் பேதமறப் பாரு
அத்துடனே சேரு அயமொன்று - எட்டுக்
கொன்றிட் டுருக்கக் கிருபையறத் தானுருகும்
அன்றிப்படியே அடி தகடாய் - நன்றாய் 107

அடித்துத் தகமாக்கி ஆனதொரு வெங்காரம்
பொடித்துப் பொரிக்கப் புகல்சுண்ணம் - படித்து
கடுஞ் சுண்ணமாகும் கருத்தா யொருபலந்தான்
எடுஞ் சுண்ணம்சீனம் இருபலமும் - கடுஞ்சுண்ணம் 108

சேத்துத் திராவகத்தால் செப்ப அரைத்துத்தகட்டின்
ஆர்த்து எடைமேலே அதிற்கட்டு - சேர்த்துப்
புடமிட் டெடுக்கப்போராய்க் கறுப்பாகும்
தடமிட்டு அஞ்சுபுடம் தாக்க - இடம்விட்டுப் 109

போகுமயம் செம்பாகும் போக்கு அலரிநிறம்
ஆகுநிறம் பூப்போ லதில்பாரு - ஆகு
மட்டும் புடம்போட மகாசிவப்புத் தானாகும்
செட்டு அயச் செம்புசேரப் - பட்டு 110

கிநாறுக்கு வெள்ளி தன்னில் நேராகவூதித்
தருக்கும் எட்டுக்கொன்று தாக்க - உருக்க
ஏழாகு மாத்து இனியதொரு வுப்புக்கும்
பாழாகப் போகா பதமாகும் - வேளாகும் 111

சிவன்தானுஞ் சொன்னார் சித்தர் மறைத்தார்நூலின்
கவன்தானும் நூலில் கருத்தா - இவன்தானும்
சொல்லொண்ணு வேதை துடிப்பாம் அயம்தன்னில்
நல்லொண்ணு வேதை நலமாகும் - எல்லாம் 112

வருகுமே யென்று வருக வுலாவை
தருகுமே யென்று தாட்டிகமாய் - உருவா
யெடுத்துப் பெருநூலில் இன்பமாகத் திரட்டி
அடுத்த கைபாகம் அறைந்தேன் - படுத்தி 113

யெல்லாரும் பார்த்து யினிதான கைபாகம்
நல்லாய்ப் பொறுக்கி நயமாகச் - சொல்லக்
கைபாகந் தப்பில் கனிவான பொன்னுமில்லை
நைபாகந் தான்வரிசை நாடியே - பாகம் 114

செய்து முடித்தால் சீரான தங்கமாம்
வயது கேட்டுத்திரிந்தால் வகையேது - பைய
பழுத்தகனி தின்றால் பரிவா யினிக்கும்
தழுத்த அடிபட்டகனி தானினிக்கா - வழுத்த 115

பெருநூல் வினையமெலாம் பேராகச் சொல்வேன்
தருமநூ லுலாவிலே சாத்தினேன் - திருநூல்
கங்கை மதியணிந்தார் கடாட்சித்தார்அந் நேரம்
துங்கமதா யீசுவரிக்குச் சொல்லிவிட்டார் - எங்காணும் 116

## 107 - 112 உரை

பித்தளை யொரு பலமும் அதற்கு எட்டுக்கு ஒன்று அயமும் சேர்த்து உருக்கு. தகடாக்கு. வெங்காரம் பொடித்துப் பொரித்துச் சுண்ணமாக்கு. அது ஒரு பலமும் சீனம் இருபலமும் சேர்த்துத் திராவகம் விட்டு அரைத்துத் தகட்டில் கட்டு. புடமிட்டு எடு. கருப்பாகும். இங்ஙன் ஐந்து புடமிடு. அயம் விலகும். செம்பாகும் செவ்வலரிநிறம் சிவப்பாகும் வரைப்புடமிடு. நொறுக்கு. வெள்ளியில் எட்டுக்கு ஒன்றீய ஏழு மாற்று. சிவபெருமான் சொன்னது. சித்தர் மறைந்தார்.

## 113 - 116 அறிவுரை

## களங்குக்குச் சேர்க்கத் தாளகக்கட்டு

வாதிகளே கேளும் வகையான தாளகத்தை
யோதியே திராவகத்தி லொண்ணாக - நீதியாய்
அரைக்க ரொம்பவிட்டு ஆட்டி வறுத்துவில்லை
தரைக்க சுக்கானீர் தனிவிடமாய் - நிரைக்கப் 117

புதைத்து எரிநாலு போக்கோடே சாமம்
வதைத்து எடுத்து வகையுடனே - சிதைத்து
அஞ்சுதிரந் தானரைத்து ஆட்டி வறுத்துஎடு
தஞ்சமுடன் தான்சிவக்கும் தாக்கியே - கெஞ்சிச் 118

செம்பின ரைப்பொடியில் சேர்த்து அரைத்துடனே
வம்பாக மண்புடங்கள் வைத்ததுமே - தெம்பாகக்
களங்கு வருமிடங்கள் காதலாய்நீ சேரு
துளங்க வுரை யாணியாம்சோதி - யுளங்காணும் 119

### 117 - 119 உரை

தாளகத்தில் திராவகம் விட்டரைத்து வி.த.கா. சுக்கான் நீற்றுக்குள் புதைத்து எரி. இங்ஙனம் நாலு சாமம் எரி. இங்ஙனம் ஐந்து முறை செய்து வறுத்து எடு. சிவக்கும். செம்பின் அரப்பொடியில் சேர்த்து அரை. மண்புடமிடு. களங்கு வருமிடத்துச் சேர். உரையாணியாக்கும்.

## காரீயச் செம்பு

காரீயச் செம்பு சொன்னேன் காதலாய்க் கெந்தகத்தைப்
பாரியாய்த் திராவகத்தைப் பாய்ச்சியே - நீதியாய்ச்
சேர்த்து அரைத்துச் செயமா யுருக்கியெடு
பார்த்துரச பதங்கத்தில் பாய்ச்சியே - நேர்த்தியாய் 120

ஈயத்தில் கிராசமிடு ஏந்திழையே பொன்னாகும்
பாயமாத் தான்வெள்ளி பாய்ச்சிடுநீ - நாயமாய்த்
தங்க மயமாகும் தாழ்ச்சியில் லாதிருக்கும்
எங்கள்குல மீடேறும் யோகமாய் - துங்கக் 121

## 120 - 121 உரை

கெந்தகத்தில் திராவகம் விட்டு அரை. உருக்கி எடு. ரசபதங்கத்தில் சேர்த்து உருக்கிஎடு. ஈயம் உருகுமுகத்தில் (கிராசமிடு) தூவு. வெள்ளியில் பாய்ச்சு தங்கமாகும்.

## கல்லுப்புக்கட்டு

கல்லுப்பி லேகசிவு காதலாய்ப் போக
நல்லுத்த வாருதியில் நாதங்காண்- கல்லும்
எடுத்துகட்டி யாய்நிறுத்து ஏத்தமாய்க்க கேளு
அடுத்துச் சுக்கான் அஞ்சுபடி தானளந்து - படுத்திச் 122

சட்டி யரைவாசி சதிருடனே தானிட்டுத்
தட்டிக் கல்லுப்பிட்டுச் சதிராக - வட்டி
அதன்பேரில் நீறிட்டு ஆனதொரு மேல்மூடி
சதியான மண்சீலை தாக்கியே - பதிவாக 123

எரிக்கக் கமலம் இருசாம மாகடட்டும்
அரித்தகல்லு நீறுதா னதிலே - தரிக்கா
ஏகியே போகும் இனிவெள்ளை யாகும்
ஆகியே கட்டு வகையாகும் - தீயாகித் 124

தெறிப்படங்குந் தானுருகும் செயமாகும் வேதை
பரியாக நல்லதாம் பாரு - வரியாய்

துரிசைக் கொன்றால் வாதம் துப்பரவாயாகும்
பரியாய் ரசங்கட்டும் பாரு - பொரிபோல் 125

ரசநீறிப் போகும் நன்மையாம் வாதம்
நிசமாகும் காய நிறுத்து - வசமாகும்
சீனமது சுண்ணம் செயமாக ஆச்சுதென்றால்
ஆன நவாகச்சாரம் அடங்கும் - மானமாம் 126

பள்ளிலே சொன்ன பதிவான பொட்டனையை
வள்ளலாய் வைத்து வகைபாரு - தெள்ளியதோர்
சரக்கைத்தான் கட்டும் சாதகமாய்ப் பாரு
பரைக்குச் சதிர்பூசை பண்ணு - உரைக்க 127

அப்பிரேகம் வீரமொடுஆட்டி அரைத்து வைக்க
தப்பா மலய்யா தாக்கவே - இப்புவியில்
சுருக்குப் போட்டுச் சரக்கைச் சுகமாக மேல்கவசம்
நருக்கக் கவசமிடு நாட்டிப் - பெருக்க 128

எரித்துஎடுத் துக்களங்கில் இன்பமாய்ச் சேரு
வரித்திப் படித்தங்க மாகும் - பரித்து
பூத்துகாய்ச் சாற்போலே பொன்மயமாய்க் காணும்
பார்த்து எடுத்திடவே பாக்கியமாய் - நேர்த்தி 129

## 122 - 129 உரை

கல்லுப்புகட்டு : ஒரு சட்டியில் அரைப்பாகத்தின் அளவுக்குச் சுக்கான் நீறு ஐந்துபடி யளந்து போட்டு இதன்மேல் கல்லுப்பைக் கட்டி கட்டியாக வைத்து மேலும் சுக்கான் நீறு முன்போல் போட்டுக் கவிழ் சட்டி மூடி சீ.ம.செ. இருசாமம் தாமரை நெருப்பு எரித்து எடுக்க வெள்ளையாகும். •சுக்கான் நீறு தங்காது. போய்விடும். உப்பு தெறிப்பு அடங்கும். உருகும். வெற்றி மாற்றாகும்.

துரிசினைக் கொன்றால் வாதம் தெளிவாக உண்டாகும். இரசம் கட்டுப்படும். நீறும். சீனம் சுண்ணமானால் நவாச்சாரம் அடங்கும். பள்ளுநூலில் சொன்ன வெடியுப்பைச் செய்து ஆராய்ந்துபார். (பள்ளு - அகத்தியர் பள்ளு) அப்பிரகமும் வீரமும் அரைத்துச் சுருகிட்ட சரக்குகளின் மேல் கவசமிட்டு எரித்து எடுத்துக் களங்குவகைகளில் சேர். முத்துக் காய்த்தாற்போல் பொன் மயமாகும்.

## சங்கத் திராவகம்

சங்கத் திராவகத்தைத் தான்சொல்லக்கேளு
பங்க மில்லாமல்நீ பாரு - இங்கிதமாய்
வெடியுப்புப் பத்து விருப்பமாய்ச் சீனம்
படியான பதினஞ்சு பத்து - வடியாக 130

இந்துப்பு ஒன்று யியல்பான நீலகண்டன்
சிந்தியா யொன்று சிறப்பாகப் - பந்தியாய்
அன்னமென் பேதி அதிலொண்ணுநீ போடு
சொன்னதொரு பூநீறு குட்டு - நன்னயமாம் 131

கூட்டி யிடித்துக் குமுறவே வாலையிட்டுக்
காட்டி வடித்துக் கருத்தாக - நாட்டி
முன்னீரைத் தள்ளு மொழியவே பின்னீரைத்
தன்னிலே வாங்கு தவமுதே - நன்னயமாம் 132

வடித்து எடுத்து வகையாய் அரக்கேனம்
துடிக்க அடைத்து வைக்கச் சொல்லுவேன் - படியாக
வன்னிகற்ப மீதில் வார்த்தரைக்கக் கேளு
தன்னில் ரசம் கக்கும் தாட்டிகமாய் - சென்னி 133

**130 - 133 உரை**

வெடியுப்பு பத்துப்பலம். சீனம் இருபத்தைந்து பலம் இந்துப்பு ஒரு பலம் துரிசு ஒரு பலம் அன்னபேதி ஒரு பலம் பூநீறும் ஒரு பலமிடு.

எல்லாம் சேர்த்து இடித்து வாலையில் போட்டுத் தீநீர் இறக்கு. குப்பியில் கடைசி நீரை ஊற்றிவை. பின்பு இலிங்கத்தில் ஊற்றி அரை. ரசம் கக்கும்.

## இலிங்கரச பதங்கம்

எடுத்து உப்புதனி லிதமாக இட்டு
அடுத்து யெரித்திடவே ஆகும் - தடுத்து
பற்பமாம் லிங்கம் பதிவாக நாலிலொண்ணா
அற்பமாய்த் தங்கமதில் நாகம் - சொற்பமாய் 134

சேர்த்து உருக்கச் செயமாகப் பிட்டாகும்
பார்த்து உடைத்துமுன் பற்பத்தில் - சேர்த்து
அரைத்துத் திராவகத்தால் ஆட்டி யெடுத்து
பரைத்துடனே காசிப் பதிவாக - வரைத்து 135

அடைத்துப் பனிரெண்டு அடைவாகத் தானெரிநீ
படைத்து வெள்ளையாகும் பதிவாகத் - துடைத்து
எடுத்து ரவிதன்னி லீயவே நூறு
படுத் தங்கமாகும் பரிசோர் - அடுத்து 136

நம்பினால் பொன்னுண்டு நம்பாதே போனால்
தம்பி வெகுபாட்டால் தவிப்பான் - எம்பிரான்
போலாகுந் தின்றால் ஏத்துவா ருலகம்
பாலாகும் பாக்கியங்கள் பாரு - நாலாய் 137

## 134 - 137 உரை :

மேற்சொல்லிய இலிங்கரசத்தை எடுத்து உப்பிலிட்டு எரி. பற்பமாகும். தங்கமும் நாகமும் சேர்த்து உருக்கிப் பிட்டாக்கி அதனொடு இந்த ரசபற்பம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துக் காசிக் குப்பியி

லிட்டுப் பன்னிரண்டு யாமம் எரி. வெள்ளையாகும். துடைத்து எடுத்து செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. தங்கமாம். உண்டால் உடல் அம்பலவன் போல் ஆகும்.

## கட்டுவகைத் திராவகம்

கட்டுவகை சொல்லு வேன் காரியமாய்க் கேளு
பட்டுப்போல் கட்டியே பாவிக்கும் - திட்டமாய்த்
திராவகத்தைத் தானிறக்கித் தாக்கவே காற்படிதான்
பராமுகமாய்ப் பீங்கானில் பாவித்து - நராபோகம் 138

ஊத்தி யெடுத்து ஊட்டவே சொல்லுவேன்
நேர்த்தியாய்த் தங்கமொன்று நேராகப் - பார்த்து
நாகமொன்று சேர்த்து நல்லா யுருக்கிப்
பாகமாய்ப் பிட்டாகும் பாருவி - வேகமாய் 139

உடைத்துத் திராவகத்தி லூட்டியே போட்டு
நடைத்துச் சரக் கெல்லாம் நாட்டப் - படைக்கும்
சுருக்கிட வேகட்டும் துய்ய மணியாகும்
நருக்கிடவே வுட்பழுக்கும் நாடிப் - பெருக்கவே 140

கட்டாகுங் கட்டில் கன மயமாகும்
செட்டாகுஞ் செல்வம் சிவமாகும் - திட்டமாய்ப்
பெருநூலில் தானொளித் தேன்பேர் பெரியகட்டைத்
தருநூலில் உலாவிலே சாத்தினேன் - வருநூல் 141

லோகங்கள் சேர்ந்தா லொரு நொடியில்கட்டாகும்
பாகமாம் பொன்னாகும் பாரு - லேகியமாம்
கட்டுவந்த தன்னிடத்தில் காதல் திராவகத்தால்
விட்டும் பரிசோர்ந்தால் மேன்மையாம் -தட்டு 142

**138 - 142 உரை :**

திராவகம் இறக்கி எடுத்துப் பீங்கானில் ஊற்று. தங்கமும் நாகமும் ஓரளவு நிறுத்து உருக்கிப் பிட்டாக்கித் திராவகத்தில் போட்டுக் கலக்கி எடுத்துச் சரக்குகளுக்குச் சுருக்கிடு. கட்டும். உலோகத்தில் கொடுக்கப்பழுக்கும். பெரு நூலில் மறைத்தேன். இங்கே சொல்லி விட்டேன். உலோகம் சேர்ந்தால்தான் கட்டும்.

### சாரக்கட்டு

கெட்டுமே போகாமல் கேட்டு ஒருபொருளைப்
பட்டுமே செய்து பதம்பாரு - திட்டமாய்
சாரத்தைக் கட்ட சாத்தக்கேள் மாந்தருக்கு
பாரமில்லை யிப்போது பாரு - நேராய் 143

எருக்கம்பால் தன்னி வியல்பாய்த் துவைத்துரவி
நருக்கவே சுண்ணநடு நாட்டியே - யெரித்து
பார்க்கவே யஞ்சுதரம் பண்ணியெடுத் தாயானால்
ஏர்க்க முழுக்கட்டாகும் இன்பமாய் - கார்க்கும் 144

தந்தம் போலக்காணும் தயவாகச் சீனத்தைப்
பந்தமாய் ஊதியே பாரு - வித்தமாய்
சுண்ண மயமாகும் சுருக்காகச் சாரமேல்
நன்னயமாய்க் கட்டியே நாடச் - சொன்னபடி 145

சேவற் புடமிட்டுச் செப்பமாய்த் தானெடுக்க
ஆவலாய் நீறும் அதிற்கேளு - பாவ
நாகத்தைச் சுத்தி பண்ணிநாடி முகந்தனிலே
பாகமாய்ப் போடப் பதைத்து - ஏகமாய்க் 146

கட்டும் புகையடங்கும் காணவே சீறலறும்
பட்டுமே தங்கம்எடை பக்குவமாய் - விட்டு
உருக்கி யெடுத்து உண்மையாய்க் கேளு
பருக்கரவி தன்னிலே பாச்ச - நறுக்க 147

நூறுக்கு ஒன்றிட வேநுண்மையா யெட்டரையாம்
பாருக்கு வாதம் பலிக்கும் - சேரு
வித்திலே நின்று விதமாகத் தான்முளைக்கும்
பத்தியே தங்கம் பதமாகும் - சித்தாக 148

உழுது பரம்படித்தா லுண்மையாய்த் தான்விளையும்
அழுது முகந்துடைக்க லாகாது - பழுதில்லா
யெத்திலே செய்தா லிதமாக ஒன்றுமில்லை
சத்தியமாய்ச் சொன்னேன் சலதிபார் - நித்தியமாய் 149

என்றிப் படிதான் இயம்பினார் யூகிமுனி
அன்றிப் படித்தார்அ நேகமாய்ச் - சென்று
வருத்தப் படாமல் வாய்ப்பேச்சுச் சொன்னால்
திருத்தப்படா வாதம் சிவக்காது - பொருத்தம் 150

இல்லாத பேர்க்கு இயல்பாகத் தான்வருமே
யெல்லாஞ் சிவமயமே யாகும் - பொல்லாப்
பணத்தைப் பணம் உண்டுபண்ணுவிக்கும் வாதம்
சணத்தில் ரசங்கட்டிச் சிவக்கும் - கனத்து 151

**143 - 151 உரை :**

சாரக்கட்டு: சாரத்தை எருக்கம்பாலில் தோய்த்துக் காயவைத்து எடுத்துச் சுண்ணாம்புக்குள் வைத்து எரித்தல்வேண்டும். ஐந்துமுறை எரிந்தால் முழுக் கட்டாகும். தந்தம்போல் இருக்கும். சீனத்தை ஊதிச்

சுண்ணமாக்கிச் சாரத்தின்மேல் கட்டிச் சேவற்புடமிடு. நீறிவிடும். நாகத்தை யுருக்கி அதில் பாகமாகப் போட அது புகையடங்கிக் கட்டும். கீறலறும். தங்கத்தில் எடைக்கெடை சேர்த்து உருக்கிச் செம்பில் நூற்றுக்கு ஒன்றிட எட்டரைமாற்றாகும்.



## கல்லுப்புத் திராவகம்

பொன்சேர்ந்த மட்டமெல்லாம் போக்கோடேதான்பழுக்கும்
தன் சேர்த்ததிராவகத்தைத் தாக்க - மின்வந்த
தேதினா லென்றால் இயல்பாய் வெடியுடனே
ஆதினால் சீனம் அதில்பாதி - நீதியாய் 152

கறியுப்பு நாலிலொன்று காரணமாய்த் தானிடித்து
வறியாய்க் கடமதனில் வைத்து - வரியாக
வாலைசட்டி மேல்மூடி வகையாகத் தானெரிக்க
ஆலைபோல் நீர்க ளதில்வந்து - ஞாலமாய் 153

**152 - 153 உரை :**

வெடியுப்பு ஒருபங்கு. சீனம் அதிற்பாதி. கறியுப்பு நாலிலொன்று. சேர்த்து இடித்துக் குடத்துக்குள் இட்டு வாலை வைத்து மூடி சீ.ம.செ. எரிக்க ஆலைபோல் புகைநீர் வரும். குப்பியில் அடை.

## பொன்மாற்று உயர

பெருக்குமே நீர்கள் பேசாமல் குப்பியிடு
தருக்குமே பொன்னாகுந் தாக்கவே - பருக்க
மட்டத்தை யிட்டு வகையாய்க் கொதியிடவே
திட்டமாம் பொன் தான் செயமாகும் - முட்ட 154

எடுத்துமே விற்று இயல்பாக ஞானம்
அடுத்துமே பாரு அதிகமாம் - தொடுத்த

வாதிக்கி நல்ல வரிசைகா ணிந்த முறை
பாதி மதியணிந்தோர் பாகம் - சேதி 155

**154 - 155 உரை.**

மேற்படி நீரில் மட்டத் தங்கத்தைப் போட்டுக் கொதியிட நல்ல செம்பொன்னாகும். விற்றுச் செலவிடு.

## நீற்றினத்துக்குச் சங்கத்திராவகம்

நீத்தினத்துக் கெல்லாம் நேர்மைகா ணிப்போ
பார்த்து சங்கத் திராவகத்தைப் பாவிக்கச் - சாத்துகிறேன்
வெடியுப்பு ஆறு மேன்மையாய் இந்து
அடிப்பாய்ப் பலமூணு ஆக்கி - யடியா 156

சாரம்ரெண்டு தானெடுத்துச் சாத்தியதோர் நல்ல
ஈரமில்லா அன்னம் பலம்ஒன்று - நேராக
துரிசியது காலும் துடியாய்ப் படிகாரம்
அரிசியது முப்பதாம் ஆக்கி - நிரிசியாய் 157

பூநீறு காலும் புகழ்பெறவே தானெடுத்து
ஆநீறு எல்லாமும் ஆட்டி - தானீறு
கிடத்திலரை வாசியடை கிர்த்தியாய்த் தானடைத்துத்
தடத்தி எலரிக்கத் திராவகமாம் - படத்தில் 158

எடுத்து எரிக்க இயல்பான நீராகும்
அரித்து இன்னமும் போக்கு அறைகுவென் - சரித்து
அரப்பொடியி லிட்டுரவி ஆதரவாய் வைக்க
பரபரென்று நீறிவிடும் பாங்காய் - நரவாக 159

உபரசங்க ளெல்லாம் ஓகோ கோநீறும்
தபனமாய்ச் செம்பு தானீறும் - நபமாகும்
வெள்ளியது நீறும் விருப்பமாய் நாகமெல்லாம்
தள்ளியே தானீறும் தாகமாய் - வள்ளல் 160

தாளகமும் கெந்தகமும் தாக்கிச் சுருக்கிடவே
பாளகமாப் பொன்னாகும் பாவிக்க - வாளகமாய்
உப்புமுத லெல்லாம் ஓடாது நீறிவிடும்
அப்புவினால் வந்த அருளதுதான் - இப்புவியில் 161

நவகோடி சித்தர் நாடியிதை வைத்துப்
பவமாகப் பொன்மயமாம் பாவித்தார் - தவமாம்
கருத்து வைத்தால்யோகம் கனமாகத் தான்பலிக்கும்
பெருத்துமுனி தங்கம் பிலமாக - நருக்க 162

வேதமுனி சொன்ன வித்தை யிதுபாகம்
ஆதலால் நாள்கண்டறிவித் தேன் - போதமாய்
எண்ணியே சொல்லி யின்பமய மாயிருந்து
தன்னிலே வாசி தனைப்பாகு - புண்ணியமாய் 163

யோக மகராசன் யோக குருநாதன்
பாகமாய்ச் செய்து பதமாக - நீதியாய்
செய்தால் ரசவாதம் செயலாகும் இப்போது
வைதா லுனக்கென்ன வந்திடுமோ - பைய 164

இருந்து படுத்து இன்ப மயமாக்கு
வருந்தினால் வந்து வலதாகும் - அருந்திக்
க்ள்ளரைப் போல் முழித்துக் காட்டித்திரியாதே
வள்ளலார் போற்று மருந்தை - மெள்ள 165

சிந்தூரம் வைத்துச் சிறப்பாகத் தின்றுநயம்
வந்துமே காயம் வலுமைபார் - நந்தி
சொன்ன வுபதேசம் சொல்லுவேன் இப்போது
நன்மையாய் வாதிகேள் நம்பியே - பின்னை 166

செய்வோமென் றெண்ணாதே தேற்றிமன னிப்போது
வைவமென்று யெண்ணி வதையாதே - நையவே
காசச்சந் தீரக் கருணை பெறத் தாளகத்தை
நேசமாய்ச் சொல்லுகிறேன் நீதியாய்உ - பாயமாய் 167

## 156 - 160 உரை :

வெடியுப்பு ஆறு பலம், இந்துப்பு மூன்று பலம், நவச்சாரம் இரண்டு பலம், அன்ன பேதி பலம் ஒன்று, துரிசு காற்பலம், சீனம் முப்பது பலம், பூநீறு காற்பலம், எல்லாம் சேர்த்து அரைத்து வாலையிலிட்டுப் புகை நீர்வாங்கு. அரப்பொடியிலூற்றி வைத்து அது நீறும் உபரசமெல்லாம் நீறும். வெள்ளிகெந்தி தாளகம் சுருக்கிடநீறும் பொன்னாம். வேதமுனி சொன்னது.

### தாளககசுத்தி

தாளகத்தைக் கொண்டுவந்து தாக்கமகா கற்சுண்ணம்
வாளகமாய் நீர்விட்டு வகையாக - மீள
அரைத்து எடுக்க இனிதாக பைத்தறுமே
அரித்து எடுத்து அலம்பிச் சரித்து 168

## 168 உரை :

தாளகத்தை சுண்ணும்புக்கல்லில் வைத்து நீர்விட்டு நீற்றி அரைத்து எடுத்துக் கழுவு தூயதாகும்.

## வீரசெந்தூரம்

வீரம்பல மெடத்து விருப்பமுள்ள பானையதில்
சேரப் பொடித்துச் செயமாகப் - பார
மேல்பானை மூடிவிரும்பியே தானெரிக்க
ஆப்பானை மேலேறும் ஆதியாய் - வாய்ப்பானை 169

உயரவே யேறி வுளுககாந் திருக்கும்
அயரவே சங்குநிறம் அன்பா - தயராதே
யெடுத்துடனே அப்பாவே யின்பமாய்த் தான்வைத்து
அடுத்து இன்பம் சேதிஅறையக் கேள் - தடுத்து 170

பச்சைக் கற்பூரம் பதமாயொரு பலமும்
இச்சையுடன் தானிறுத்து எடுத்து - அச்சமிலாத்
தாளகமும் ஒன்று தாக்கவே வீரமொன்று
பாளகமாய்த் திராவகத்தைப் பாச்சியே - நாளாக 171

அரைத்து ரவிவில்லை ஆகவே காய வைத்துப்
பரைத்துக் கற்சுண்ணம் பதிவாக - நிரைத்துச்
சட்டிதனில்பாதி தாக்கியே வில்லை வைத்து
முட்டவே கற்சுண்ணம் மேல்மூடித் - தட்டி 172

யிருத்தி அழுத்தி யெரிக்க ஒருசாமம்
வருத்தமில் லாமலெடு வண்மையாய்ப் - பொருத்தி
யெடுக்க வெள்ளையாகும் யினிதாப் பணவெடையும்
அடுத்துக் கொடுக்கவே அப்பால்கேள் - தடுத்து 173

சயமீளை காசம்போம் தாக்கவே குன்மம்
நயமாகத் தான்போகும் நாடு - பயமில்லா
பீலிபிடி முயல்வலிப்பு வாங்குமே - சொந்த
பலிப்பான வாயு பதறுமே - நலிப்பாகும் 174

ஆயிரம் வாயு அலறியே யோடிவிடும்
பாயிரமா யர்வுகடி பதறிப்போம் - நேயமாய்
வயித்தியர்க்கு நல்ல வகையாம் அவிழ்தங்காண்
நயத்தில் புளிதள்ளி நாடு - பயித்தியமாய் 175

திரியாதே கேளும் சீக்கிரமாய் வைத்து
அரிதாரம் பொன்னுக்கு ஆணியிலே - பரிசேர்
தங்க மயமாகும் தாய்கொஞ்சம் சேரு
பங்கமில்லாத் தங்கமாம் பாரு - இங்கிதமாய் 176

உங்கள்குல மீடேற வுங்கள் ரசவாதம்
திங்கள் போல் வாழ்ந்து சிறப்பாகும் - மங்களமாய்
இருக்கவல்லோ சொன்னேன் ஏந்திழையார் சொன்ன
பருக்கநல்ல வேதை பகருவேன் - வருக்காய்ப் 177

பதிந்தேன் பெரு நூலில் பாக்கியங்க ளுண்டாகும்
வதிந்தேன் இனியென்ன வாடாதே - கதிந்த
குறுக்குவகைச் செந்நூரங் கோடான கோடி
நிறுக்கு வாராமலே செய்து - பெருக்கச் 178

செந்தூ ரஞ் செய்து செயமர்கி வுங்கள்குலம்
நந்தூரமீ டேற நாடியே - சந்தோடம்
மாக இருந்து மயக்கமிலா மல்தானும்
ஆகப் பொருளெல்லாம் அடைவாகச் - சோகமாய் 179

சோதித்துப் பாரு சுயமான தங்கமாம்
ஆதித்த துள்ளளவும் ஆடுவீர் - சேதிகேள்
வேதை மிகவாக விரும்பியிதிற் சொல்லுகிறேன்
பாதி மதியணிந்த பரமனார் - நீதியாய் 180

சொன்னதொரு செந்தூரம் தொகுப்பாயினிச் சொல்லுகிறேன்
கன்னம்மா யிப்பொருளை நாடுவீர் - முன்னம்
கைபாக மாகக் கனிவான செந்தூரம்
மெய்யாக இப்போ விளம்புவேன் - செய்பாகம் 181

செய்யவே சொல்லுகிறேன் செயமாகும் இவ்வேதை
பையவே பத்திப் பதிவாக - வையகத்தில்
பார்த்து எடுத்தால் பாக்கியங் களுண்டாகும்
நேர்த்திக் குறுமுனிதான் நிசமாக - வாழ்த்தியே 182

சொன்னதொரு வாக்குச் சுயமான லோகத்தில்
முன்னமே சொன்ன முடிவுகாண் - நன்னயமாய்
நவலோக மெல்லாம் நாடிப் பழுக்கும்
தவமான இவ்வேதை தாக்குவீர் - அவமில்லா 183

வேதை மிகவாகும் விரும்பியே நீபாரு
சேதம்வா ராமலிது செப்புவீர் - ஆதரவாம்
ரசத்தை விட்டால் வர்ணம் நாடாதுநாடில்
தவத்தோர் கிடைக்கும் தவமாகும் - அவத்தைப் 184

பாடாமலே செந்தூரம் பத்தியே பாரு
அடரொளியாம் வாதஞ் செயமாகும் - மடநெஞ்சே
யேங்கீத்திரியா தே யின்ப ரசந்தன்னைப்
பாங்குபெறப் பாரு பதமாகத் - தூங்கி 185

மூலைக்கு மூலை விரும்பிய லையாதே
பாலைப் பால் மனதைப் பதிவாக - நூலை
விரும்பிநீ பார்த்து மெய்யான பாகமதைத்
திரும்பியே மூணுதிறம் சோதிக்க - நரும்பிக் 186

கெட்டாலுங் கேளு கிருபையாய் மூணுதிறம்
நட்டால் பயிற்விளையும் நாடியே - முட்டாக
பார்த்தால் வெளியாகப் பாரினுள்ளோர் தான்பிழைக்க
சேர்த்தா ரசவாதம் செயல்காணும் - பார்த்த 187

வாதிகளே கேளும் வகையான பாகமதை
சோதிகேட்டா லென்ன சிக்குமோ - போதிமிக்க
வுழுது பயிரிட்டால் வுசத்தியாய்த் தான்விளையும்
அழுது மிகநின்றா லருளாமோ - நழுவாதே 188

பாருமென்று சொன்ன பரமரருளாணை
சேருமென் கைபாகம் செப்பவே - போரேன்
தங்கமொன்று நாகமொன்று தாக்க ரசமொன்று
இங்கிதமா யிரதம் இத்தனையும் - பங்கமாம் 189

திராவகமு மொன்று தாக்கவே தங்கமாம்
பராமுகமர் யிருந்தால் பாவங்காண் - திராமுகமாம்
இத்தனையும் விட்டால் யிதமான தங்கமில்லை
முத்தி மிகவில்லை முடியாது - சற்றேகேள் 190

பட்டங்கட்டச் சீர்தப்பில் பறக்குமோ மானுடரே
அட்டியில்லாப் பேச்சு அதிகமாம் - கெட்டியாய்த்
திரிந்தாலே தங்கத்தை சீராகக் காணலாம்
அரிந்தாலோ யெல்லாமு மாகும் - தெரிந்தே 191

செய்பாகம் விட்டுச் சிவமாகத் தானழுதால்
மெய்பாகந் தான் வருமே வேண்டு - நைபாகம்
என்றிப் படிதா னியம்ப ரசவாதி
அன்றிப் படிதான் அநேகபுத்தி - நின்று 192

**169 - 192 உரை :**

பொடித்த வீரம் ஒரு பலம் பானைக்குள் இட்டு மேற்கவிழ்சட்டி மூடி சீ.ம.செ. எரி. மேலே ஏறியிருக்கும் சங்கு நிறமாக இருக்கும். இந்த வீரம் ஒரு பலம், பச்சைக் கற்பூரம் ஒரு பலம், தாளகம் ஒரு பலம் ஆக இம் மூன்றும் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வி.த.கா. ஒரு சட்டியினுள் பாதி சுண்ணமிட்டு அந்த வில்லைகளை வைத்து அதன் மேல் மேலும் சுண்ணமிட்டு மூடி ஒரு சாமம் எரிக்க வெள்ளையாகும். பணவெடை துணை மருந்திற்குழைத்துக் கொடுக்க சயம் காசம் ஈளை குன்மம் பீலி முயல்வலிப்பு வாயு ஆகிய நோய்கள் அஞ்சியோடும். ஆயிரம் வகையான வாயு அலறியோடும். அரவு கடி தஞ்சு பதறியோடும். வயித்தியர்க்கு இது நல்ல மருந்து. புளி நீக்குக. இந்த அரிதாரப்பொன்னுக்கு உரையாணி இல்லை. எனவே பத்தரைக்கு மேல் ஓடும். தங்கமாகும். தங்கம் ஒரு கூறு சேர்க்க நல்ல தங்கமாகும். ஆய்ந்து பார். ரசம் சேராவிட்டால் நலமில்லை. இறைவனருளாணையால் கூறுகிறேன். தங்கம் நாகரசம் ரசம் திராவகம் இவைகளால் தங்கமாகும்.

## மடக்கு ரச செந்தூரம்

மருகாமற் பாரு மயக்க மெலாந்தீர
தருகவினிச் செந்தூரம் சாத்துவேன் - வருக
மடக்குச் செந்தூரம் வகை நல்ல பாகமிது
அடக்கமாய் வைத்து அலுவல்பார் - திடமாக 193

சூதத்தைத் தானெடுத்துத் துய்ய திராவகத்தில்
ஆதரவா யூத்த அதிற்கேளு - சேதிகேள்
இரதமெடை யூத்தி யேத்தமுள்ள திராவகத்தை
வரதமிடை பூக்கும் வகையாக - நிரந்தரமாம் 194

எடுத்துக்குப்பி தன்னிலடை யேறும் பனிரண்டு
கடுத்துளரி பாகம் கணக்கா - நடத்து
ஏறிமஞ்ச ளாகு மிருக்கவே தானுடைத்து
ஆறியிடை திராவகத்தா லட்டியே - தேறி 195

பீங்கானில் தான் வறுத்துப் பேர் பெரிய குப்பியினில்
ஆங்காரமாக அடைத்து - ப்ாங்கா
யெரிக்கச் சிவப்பாகும் ஏந்திழையே கேளும்
நாக்கி யுடைத்து நடப்புகேள் - பெருக்க 196

எடுத்து அப்பால்வைத்து இனியரசம் நாலு
அடுத்துகெந்தி தானொன் றதிலுருக்கு - படுத்தி
தாரமரையோடு தாக்க லரைத்துக் குப்பிப்
பாரமாய்ச் செவ்வல்லிப் பூச்சாறு - நேர்மையாய் 197

அரைத்து குப்பிதன்னி லடைவாகத் தானெரிக்க
நிரைத்துச் சிகப்பாகும் நேராய்ப் பரைத்து
எடுத்து நிறுத்து இன்பமாய்க் கேளு
அடுத்து முன் மஞ்சளதில் நேரே - எடைக்கி 198

நிறுத்துத் திராவகத்தால் நேர்சமனாய்ச் செய்து
பருத்த திராவகத்தால் பாய்ச்சிசியரை - வறுத்து
காசியென்ற மேருவினில் காட்டி யெரித்து
வாசியாய் பனிரண்டு வாசமாய் - நீதியாய் 199

தீமூட்டித் தானெரித்துத் திட்டமாய்த் தானெரிக்கக்
காமூட்டச் செவ்வலரிக் காணு - வாமூட்டக்
குப்பியுடை தான்சிவக்கும் கொடுக்க ரவிதனிலே
தப்பித மிலாமாத்துத் தானாகும் - இப்புவியில் 200

நூறுரளி தானிட்டு நுட்பமாய்த்தான் கொடுக்க
பேறுரவி தங்கம் பிரப்படுங்கான் - வாறுதே
ளிப்படியாய்த் தானிருக்க வின்பமாய்க் கைபாகம்
தப்பித மில்லாமல் தடுமாறி - இப்புவியில் 201

## 193 - 201 உரை

மடக்குச் செந்தூரம் நல்ல பாகம். அடக்கமாகச்செய். இரசத்தில் திராவகம் ஊற்று. உப்பாகப் பூக்கும். எடுத்துக்குப்பியில் அடை. பனிரண்டு யாமம் எரி. மேலேறி மஞ்சள் நிறமாக இருக்கும். எல்லாவற்றையும் எடுத்து மீண்டும் ராவகம் ஊற்றியரை. வறுத்துக் குப்பியிலடைத்து எரி. சிவக்கும். எடுத்து வை. அதன் பின்பு கெந்தி ஒரு பலம் உருக்கி நாலு பலம் ரசம் சேர்த்து அரைப்பலம் தூய தாளகம் கூட்டிச் செவ்வல்லிப் பூச்சாறு விட்டரைத்துக் குப்பிக்கு ஏற்றி முறையாக எரி. சிவக்கும். அதனை எடுத்து நிறுத்து முன்பு செய்து வைத்த மஞ்சணிற ரசத்தை நேர் அளவு சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துக்குப்பியில் இட்டுப் பன்னிரண்டு யாமம் எரி. செவ்வரலிப்பூ நிறமாகும். குக்கியை யுடைத்து எடுத்துத் தூய செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு நல்ல தங்கமாகும்.

### உலகவாதிகள் புறட்டு

வாதிகளாய்க் கூடி வடிவாகத் தங்கமது
பேதிக்கச் செய்வான் பிறட்டாக - நீதியாய்க்
களங்கு வகைசெய்து காட்டித் தருவனென்
முழங்கியே யொருவனிட முக்கியமாம் - வளங்காணாத் 202

தங்கமயஞ் செய்து தருகிறேனென்று சொல்லி
பங்கயமாய் லேகியங்கள் பற்றுவார் - தங்கமாய்
சாராயங் கள்குடித்துச் சாப்பிட் டிளைப் பாறிப்
பூராய மாகப் புலம்புவார் நேராக 203

நாதவிந்து கெட்டு நலங்கியே மூத்திரத்தைப்
பாதமென்று வாங்கிப் பதறுவோரும் - பேதமாய்
அண்டமுப்பு வென்று அலைந்து ரசவாதி
பிண்டம் வழலை பிணத்தியே - மிண்டாக 204

மூலிகையி லுப்பு முயங்கித் திரிவோரும்
தாலிமுதல் சுட்டுத் தவிப்போரும் - பாவித்துக்
காலிகள் தான் பூண்டுகலங்கித் திரிவோரும்
பாவிகள் பால் நிட்டை பாவிப்போர் - தாவியே 205

வாதம் வருமென்று வகையாகத் தான்கெட்டுச்
சேதப்படப் பணமும் செலவழித்து - ஆதரவு
இல்லாமல் விட்டு ஏக்கமாய்த் தான்திரிந்து
பொல்லா மனிதரிடம் போகியே - நல்லாய் 206

203 - 206 அறிவுரை

## இலிங்கரச செந்தூரம்

வேதையொன்று சொல்வேன் விருந்து மேதான்கேளு
பாதக மில்லாமலே பாவிக்கச் - சோதி
தங்கமய மாகத் தாக்க வெகுசுளுகு
பொங்கமாய்த் தான்பார்க்கப் போதிப்பேன் - திங்கள் 207

வன்னி ரசமெடுத்து வல்லமையாய்க் கேளும்
உன்னியே நாலுபல முற்றுக்கேள் - சென்னி
பீங்கானில் விட்டுப் பிரபலமாய்க் கேளு
தாங்கவே திராவகத்தைத் தாக்கியே - ஆங்காண் 208

படியொன்று விட்டுப் பக்குவமாய்த் தான்வறுக்க
வடியாயுமி நெருப்பில் வாட்டியே - நெடிய

குப்பியடை மேருவினில் கோதையரே கேளு
தப்பிதமில் லாமலெரி தாக்கியே - யிப்புவியில் 209

எடுக்கவே காலி யேறிச் சிவப்பாகும்
அடுத்துமெள்ள வாங்கு அதின்பின்பு - தொடுத்து
பச்சைரசந் தன்னில் பாகமாம் நாலு
இச்சையுடன் கெந்தியரை யின்பமாய் - அச்ச 210

தாரமரை தானரைத்துத் தாக்கப் புகைநீர்
பாரமா யரைத்துப் பக்குவாமாய் - நேராக
அரைத்து அடைகாசிதனி லாகளரி யெண்சாமம்
பரைத்துச் சிவப்பாகும் பண்பாய் - நிரைத்து 211

எடுத்து மஞ்சள்தன்னி லின்பமாய்த் தான்எடைக்கிப்
படுத்துத் திராவகத்தால் பக்குவமாய் அடுத்து
அரைத்து எரித்து எடு ஆனதொரு செம்பரத்தம்
பரைத்துப் பூப்போல பக்குவமாய் - நிரைத்துச் 212

செந்தூர மெட்டுச் சிறப்பாகத் தங்கமொன்று
வந்தூர நாகம் வகையொன்று - செந்தூர்
உருக்கப் பிட்டாகும் உண்மையாய்த் திராவகத்தால்
நருக்க அரைத்து நலமாகப் - பெருக்க 213

அடைத்துமே காய்ச்சி அன்பாகத் தானெடுக்கப்
படைத்துப்பனிரெண்டும் பாக்கியமாய்த் - துடைத்து
எடுத்துமே பார்த்தா லேத்தமாய்ச் செவ்வல்லி
அடுத்துப்பூப் போலே அழகாகும் - எடுத்து 214

**207 - 214 உரை :**

இலிங்கரசம் எடுக்கும் முறைப்படி எடுத்து நாலு பலத்தைத் திராவகம் விட்டு உப்பாக்கி உமி நெருப்பில் வறுத்துக்குப்பிக்கு ஏற்றி எரி. காவி நிறம். பச்சை ரசம் ஒன்று. வெந்தி அரை உருக்கிச் சேர். தூய தாளகம் அரை அதனொடு சேர். திராவகம் ஊற்றியரை. குப்பியிட்டெரி. எடு. முன்பு செய்து வைத்த காவி நிறச் செந்தூரத்தொடு நேர் எடை சேர். திராவகம் விட்டு அரை. குப்பியிட்டெரி. செந்தூரம் எட்டு தங்கம் ஒன்று நாகம் ஒன்று. ரசமும் நாகமும் உருக்கிப் பிட்டாக்கிச் செந்தூரம் சேர்த்து அரைத்து எரித்துப்பார் செவ்வல்லி நிறமாம்.

## இலிங்கரச வேதை

செம்புதனில் நூறுதிட்டமாய்த் தான் கொடுக்க
நம்புமே மாத்து நலம் பத்து – தெம்பாகும்
வேதையிது போல வேகமாய்த் தானிருக்கும்
பாகதமில்லாமலே பார்த்து விடு சோதிமயம் 215

ஆகுமே யெல்லாம் அன்பாக யோகமாம்
பாகமாய்ச் செய்து பார்த்துக்கோ – நிதியாய்

**215 உரை**

செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. செம்பொன்னாகும். பாகமாகச் செய்.

## வீரரச செந்தூரம்

வீரரச மெடுத்து விளம்பமாய்த் திராவகத்தால்
வாரமாய் விட்டு வறுத்துமே – சிராக 216

அடைத்து எரிகாசியினி லன்பாய்ப்பனிரெண்டு
வுடைத்து எடுக்க வொளிவாகும் – படைத்து

எடுக்கச் சிவப்பாகும் யேந்தழையீர் கேளீர்
அடுக்க யெடுத்து அதின்பின்பு - தடுத்து 217

அப்பாலே வைத்து ஆதியாஞ் சூதமெடு
தப்பாமல் நாலுபலம் தாக்கவே - ஒப்பாக
கெந்தியொன்று தாதமரை கேட்டுமிகத் தானெடுத்து
அந்திபக லாக அரைத்துமே - முந்தி 218

அரைக்கச் செவ்வல்லி ஆனபூச் சாற்றில்
பரைத்து அரைத்துப் பதமாக - வரைத்து
அரைத்து எரிக்க ஆன சிகப்பாகும்
பரைத்து எடுத்துப் பதமாகத் - துடைத்து 219

எடுத்து வீர செந்தூர மேத்தமாய் ரண்டையுந்தான்
அடுத்து எடைபாகம் அதில் சேர்த்துத் - தொடுத்து
அரைத்து எடுத்து ஆன மகா மேரு
பரைத்துப் பனிரண்டும் பாகமாய் - நிரைத்து 220

எரித்து எடுக்க இனிதான் திராவகமும்
அரித்து அதில்விட்டு ஆட்டியே - தரித்து
நாலிரண்டுக் கொன்று நலமாகத் தங்கம்சேர்
பாலிக்க நாகம் பதமாகச் - சாலித்து 221

உருக்கப் பிட்டாகு முண்மையாய்ச் செந்தூரம்
நருக்க அதில்சேர்த்து நாட்டியே - பெருக்க
அரைத்து எடுத்து அடைவாகத் தான்பார்
உரைத்த சிவப்பாகு முன்னியே - நிரைத்து 222

எடுத்து ரவிதனிலே யேத்தமாய் நூறிலொன்று
அடுத்து கொடுக்கவுமே அன்பாகப் - படுத்து

பார்க்கவே மாத்து பத்தாகுங் காவிக்கும்
ஏற்குமே யுப்புக்கும் யேகாது - பாத்தியமாய் 223

வடநூற் கிரந்தம் வடிவாகச் சோதித்துத்
திடமான யூகிமுனி செப்பினார் - முடிவாகப்
பெருநூல் முடிவிது தான் பேரான வாதம்
தருநூல் பொருளிதுதான் தாக்கிப்பார் - கருநூல் 224

உலாவி லுபதேச முண்மையாய்ச் சொன்னேன்
நிலாவின் வெளிச்சம் நலமாக - உலாவித்
திரியாதே பாரு திட்டமாய்ச் செந்தூரம்
பரிவாகத் தான் செய்து பாரு - நெரியாக 225

பாகத்தை விட்டுப் பதைத்துத் திரியாதே
யோகத்தைப் பார்த்து ஒளிவாகு - தாகமாய்
கண்டு மனமகிழ்ச்சிக் களிகூறு என்னுடைய
பண்டு உலாதனிலே பத்தியே - சுண்டு 226

அடுத்து ரசவாதி ஆண்மையாய்க் கேளு
படுத்துச் செய் கைபாகம் பத்தியே - எடுத்து
செய்து முடித்துச் சிறப்பாகப் பொன்செய்து
நைதுமெய்ஞ் ஞானத்தை நாடியே - பைய 227

இருந்துமே பாரு ஏத்தமுள்ள வீரரசம்
அருந்தி யெடுக்க அடிபாரு - திருந்திச்
செந்தூர மெல்லாஞ் சிவக்கவே தாளகத்தைச்
சிந்தையாய் விட்டுத் திரியதே - பந்தமாய் 228

ஏழை ரசவாதி யேத்தமாய்ச் செய்த
பாழைகளைச் சொல்வேன் பதிவாக - மூழை

**216 - 228 உரை**

முன்பு நூலிற் கூறிய வண்ணம் வீரரசம் எடு. திராவகம் ஊற்றி வைத்துப் பூத்தபின் வறுத்துக் காசிக்குப்பியல் அடைத்துப் பனிரண்டு யாமம் எரித்து உடைத்து எடு. சிவப்பாக இருக்கும். எடுத்து வை. பின்பு ரசம் நாலு பலமும் கெந்தி யொரு பலமும் தாளகம் அரைப் பலமும் சேர்த்துச் செவ்வல்லிப் பூச்சாறு விட்டரைத்துக் குப்பியில் போட்டு எரிக்கச் சிவப்பாகும். முதலிற் கூறிய வீர செந்தூரமும் இச் செந்தூரமும் சேர்த்து அரைத்துக் குப்பியில் போட்டுப் பன்னிரண்டு சாமம் எரித்து எடு. பின்பு அதன் அளவில் எட்டுக்கு ஒன்று தங்கம் எடுத்து அதனெடை நாகமும் சேர்த்து உருக்கப் பிட்டாகும். அதனை முன் செந்தூரத்தோடு சேர்த்துத் திராவகம் விட்டு அரைத்து எரித்து எடு. சிவப்பாகும். செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. பத்து மாற்றாகும். உப்புக்கும் காவிக்கும் ஓடாது. பெருநூல் முடிவு இதுதான். இந்த உலாவில் உண்மையாக உபதேசம் செய்தேன் (225 - 228 அறிவுரை).

## ரசிதக் களங்கு

உருக்கு ரசிதத்தை யுண்மையாய் வங்கம்
பெருக்கக் கொடுத்துப் பெலமாகத் - திருத்து 229

கொடுத்துமே யூதிக் குடிலமாய்க் கால்பலமும்
அடுத்துமே வெள்ளி அதிலிடவே - படுத்து
வன்னி ரசங்கொடுக்க வாங்கிஎடை யிரண்டு
உன்னிதமாய்க் கல்வமதில் தேய்க்க - நன்னயமாய் 230

பொடியாகும் போலே போகமாய்த் தானிருக்கும்
படியாக் கரிநெருப்பில் பாகமாய் - வடி வாக
யெடுத்துமே வாட்ட யின்பரசம் போகும்
அடுத்துமே சண்டபற்ப மதில்ரெட்டி - கொடுத்து 231

அரைத்துத் திராவகத்தா லாட்டி உண்டை செய்து
பரைத்து ரவிதனிலே பாகமாய் - நிரைத்துக்
காயவைத்து வெண்கருவில் கனக்கவே தோய்த்துத்
தாயவைத்து அப்பிரகமுந் தாக்கியே - நேய 232

தோய்த்துடனே தோய்த்துச் சுவறரவி காயவைத்துப்
பார்த்து யெடுத்துப் பதமாக - நேர்த்தியாய்
உமிப்புடத்திற் போடு வுண்மையாய்த் தானெடுத்து
நமியாக வன்னிபற்பம் நாட்டியே - சமியாக 233

இப்படியே தொந்தமிடு யின்பமா யஞ்சு
தப்படியே சூதம் தனைநிறுத்தும் - உப்பாம்
சிகப்பாகத் தானிருக்கும் சேர்த்துமே யிரண்டு
வுகப்பாக வெள்ளியஞ்சி லொன்றுமே - நகப்பாக 234

வுருக்கிக் கொடுக்க வுண்மை ரவியஞ்சு
தருக்கிஎடை யொன்றுநீ தாக்கியே - பருக்கி
யெடுத்துத் தகவுடைத்து இன்ப மயமாக
அடுத்து உப்பு செங்கல்மா அஞ்சுநிறம் - படுத்து 235

புட்மிட் டெடுத்தால் பேறான தங்கம்
அடவா யிரட்டி எடையாகும் - நடமாகும்
எடுத்துச் செலவு செய்து இனியோகம்பாரு
அடுத்துமே நல்லா யருளுவீர் - படுத்து 236

நல்லாகத் தானிருந்து நாடி மிகப்பாரு
பொல்லா தவனாய்ப் புகலாதே - வில்லாக
வளைந்த ம்புதைக்கும் வளையாதவில்லு
தளைந்த தடியாம் தனைப்பாரு - உளைந்து 237

பொல்லாமை செய்து புலம்பித்திரியாதே
நல்லா யுலகத்தில் நாடுவீர் - வல்லா
செய்து முடித்தால் செயமாகும் நம்முடைய
பெய்த ரசவெள்ளி பாருமே - மெய்யா 238

யிருக்கவிலை வாதம் இயம்ப வருகும்
நரும்பிறக்கவே பத்திப் பாரு - நெருக்க
ஓங்கும் ரசவாதம் ஓதரியே வேதமெலாம்
பாங்காகப் பாத்தாற் பரிவாக - நீங்காமல் 239

செய்து முடித்தால் செயமாகு மிப்புவியில்
நைது ரசவாதம் நாடியே - பையப்
பதறாமற் செய்தால் பாக்கியங் களுண்டாகும்
சிதறாமல் ஞானஞ் சிறப்பாகும் - பதறாமல் 240

சொன்னரசவாதம் சொற்பெரிய கைபாகம்
நன்னயமாய்ச் சொல்வேன் நாடுவீர் - பன்ன

**229 - 240 உரை :**

வெள்ளியில் வங்கம் கொடுத்து உருக்கு. ஊது. காற்பலம் வெள்ளியை அதில் சேர். பின்பு இலிங்கரசம் இரண்டெடை கொடு. கல்வத்தில் தேய்த்திடு. பொடியாகும். நெருப்பில் வாட்டரசம் போய் விடும். அதனெடைக்கு இருமடங்கு சண்டரச பற்பம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து உருண்டை செய்து காய வைத்து வெண் கருவில் தோய்த்துக் காயவை. அப்பிரேகத்தையும் வெண் கருவில் தோய்த்துக் கவசமிட்டுக் காயவை. உமிப்புடமிட்டெடுத்து இலிங்கபற்பம் சேர்த்து முன்போல் அரைத்து முன்போற் செய். இங்ஙனம் ஐந்துமுறை செய். சிவப்பாகும். இரண்டு பங்கு செந்தூரம் வெள்ளியஞ்சில் ஒன்றுசேர்த்து உருக்கி நல்ல செம்பு ஐந்து பங்கு மீண்டும் சேர்த்து உருக்கி எடுத்து உடைத்து உப்பும் செங்கல் மாவும் பொடித்து அதனுள் வைத்து ஐந்து

முறை புடமிடு. தங்கமாகும். எடை இரட்டிப்பாகும். செலவிடு. உண்டுத்துத்தவம் செய். (237 - 240 அறிவுரை).

## தங்கக் களங்கு

புடத்தங்கம் வாங்கு பேறாய்ப் பல மொன்று
திடமாகச் சண்டரசம் சீராய் - அடைவாக 241

ஊத்தவே சேர்ந்த உண்டையாய்த் தானிருக்கும்
பார்த்து அரைக்கப் படியுமே - நேர்த்தியாய்க்
கல்வத்தில் தேய்த்துக் கனக்கவே மண்போல்
செல்வக் கரியூதிச் சேர்ந்திடவே - நல்லாய் 242

தங்கத்தை விட்டுத் தாட்டிகமா யோடிவிடும்
பங்கமாய்த் தூளாகும் பாருநீ - இங்கிதமாய்த்
தங்கமெடை யொன்று தாட்டிகமாய் சண்டரசம்
பங்கமா யொண்ணரையும் பாச்சியே - யுங்கள் 243

அரைத்துத் திராவகத்தா லாட்டிக் கயறாக
பரைத்துரவி காயவைத்துப் பாகங்கேள் - நிரைத்து
வெள்ளிப் பொடி பண்ணிவிரும்ப அதின்போல்
துள்ளியே வெண்கருவா லொட்டியே - தள்ளி 244

எடைசமானா யொட்டி யின்பமா கவுலர்த்
தடையாய் வெயில்தனில் தாக்கியே - படையாக
உமியிலிடு காடை யொட்டியே போடு
தமியிலிடு தானெடுத்துப் பாரு - கமியா 245

யிருக்கும் சிவப்பாயின்ப ரசவாதம்
செருக்கு ரவிநூ றொன்றில் சேர்ந்திடவே - பெருக்கப்
பத்தாகு மாத்துப் பதிவாகச் சொர்ணமயம்
சித்தாகும் யோகஞ் சிறப்பாகும் - முத்தியே 246

தங்கமய மாகுந்தாட்டிகமாய்த் தானெடுத்து
உங்கள்குல மீடேற வுல்கியே - பங்கம்
வாராமல் தானிருக்கும் வருத்தமில்லாமலிது
பாராமல் தங்கத்தைப் பாச்சவே - நேராக 247

தங்கமிட்டால் தங்கமாம் தாழ்ச்சியிலாப் பொன்னாகு
முங்கள்குல மீடேறு முண்மையாம் - திங்கள்
கோசமென்றும் பீசமென்றும் கொள்கை இது வாகும்
பாசமாய்த் தானிருக்கும் பாரமாய் வாச 248

முருக்க மலர் போல் முடிப்பார் முடித்தால்
மருக்கொழுந்தின் வாசம் வருமோ - ஒருத்தர்
ரசவாதம் செய்வமென்று ஓடியலைந்து
பிசவாமல் தங்கம் பிரட்டி - நிசமாக 249

மடக்கிக் கயிறு கொண்டு மாட்டி யெடுத்து
கடக்க வே ஓடினான் கண்டு - திடத்தை
அறியீர் ரசவாதி ஆண் பொருளறிந்து
பரியான தங்கத்தைப் பாரு - பொரியாகச் 250

செய்தால் ரசவாதம் செப்பமாய்த் தானிருக்கும்
வைதா லுனக்கென்ன வந்திடுங்காண் - மெய்போல்
அலைந்தா லோ என்ன ஆதியாய் மூலி
தொலைந்தா லெனக்கென்ன செல்வம் - கலைந்தால் 251

ஆகும் ரசவா தம் அடைவாகத் தானுழுதால்
பாகுமே நாற்றுப் பயிராகும் - நிதியாய்ச்
செய்தால்பலிக்கும் செல்வம் நிலையாகும்
எய்தாலோ அம்பு இதமாகும் - கைதப்பிப் 252

போனால் ரசவாதம் போக் கோடேவாராது
ஆனால் ரசவாதம் அடக்கேன் - தானாகச்

செய்து முடித்துத் திறமான ஞானம்பார்
வைது அடித்து வரையாதே - உய்ய 253

நாயென்ற ஆணவத்தை நாட்டாதே நாட்டினால்
தானாகக் கெட்டுத்தவியாதே - ஏனோ
வாதிக்குப் புத்தி வகையாகத் தான் வேணும்
சேதப்படச் சரக்குச் செய்யாதே - மேதினியில் 254

சூதத்தைக் கட்டு சுருக்கான வாதமெல்லாம்
நாதம் போல் வந்து நல்குமாம் - பேதமிலா
லிங்க ரசத்தை நேராகத் தானெரித்துத்
தங்கத்தைக் கூட்டத் தளவாயாம் - உங்கள் 255

குலங்க ளீடேறும் கோத்திரங்கள் வாழும்
நலங்காணு மிப்புவியில் நாடுவீர் - பலங்காணும்
வீரரசஞ் சொன்னேன் மேதினியி லெல்லாநம்
பாரமா யில்லை பத்தியே காரம் 256

தங்கக்களங்கு சொன்னேன் தாட்டிகமாய்ச் செய்து
உங்களபிமான முண்மையாய்த் - திங்கட்
செலவு செய்து கொண்டு சிறப்பாக யோகம்
அளவா யிருந்து அதிற்பாரு - துளவாய் 257

**241 - 257 உரை :**

மாற்றுக் காணக் கைபாகம் சொல்வேன். தங்கம் ஒரு பலம் உருக்கிச் சண்டரசபற்பம் அதனெடை சேர்த்து இரண்டும் உருக்கு. அரை கல்பத்திலிட்டுத் தேய்த்துக் கரியில் வைத்து ஊது. தங்கத்தை விட்டு ரசம்போய் விடும். தூளாகும். தங்கம் ஒரெடையும் சண்டரச பற்பம் ஒன்றரை எடையும் சேர்த்துத் திராவகம் ஊற்றிக் கயிறாக அரைத்துக் காய வைத்து, வெள்ளியைப் பொடியாக்கி வெள்ளைக் கருவில் தோய்த்து

முன்பு காயவைத்த சண்டரச தங்க அரைப்பில் ஒட்டி (எடை சமமாக ஒட்டுக) வெயிலில் காயவைத்து உமிப்புடத்தில் காடைப் புடமாகப் போடு. எடுத்துப் பார். சிவப்பாக இருக்கும். செம்பில் நூற்றுக்கு ஒன்று சேர்க்கப் பத்துமாற்றாகும். கோச பீசமென்பதுவும் இதுவே. (நாகமும் தங்கமும் கோசமும் பீசமும்) இலிங்கரசம் எடுத்துத் தங்கம் சேர்த்துச் செய்க. உங்கள் குலம் ஈடேறும். கோத்திரமும் வாழும்.

## வாதயோகத்துக்குச் தபாநாதர் தியானம்

அரசன் சிவனு மென்று ஆனதொரு வித்தைப்
பிலங்கள் குறையாமற் பின்பாரு - வரங்கன்
தருகுமென யோகம் தப்பாது இப்புவியில்
வருகுமே வாதம் வருங்காண் - சருகு 258

புசித்துத் திரியாமல் போரான வித்தை
தரித்து இடையாய்ச் சாத்துவீர் - வருத்தத்
தில்லைச் சிற்றம்பலத்துள் சேர்ந்து இருந்திடுநீ
அல்லல் படாமற் கணக்காய் - நல்லா 259

**258-259 உரை:**

சிவபெருமானே இத்தொழிலுக்கு அரசன் என்றுட்கொண்டு நோக்கு. வெறுவியனாகச் சருகு தின்றலையாதே. யோகம் செய். தில்லைச் சிற்றம்பலமாகிய உத்சிப் பெருவெளியை சார்ந்து இரு அம்பலவாணரைக் கண்டு சிவயோகம் கண்டத்தில் நாடு.

## செம்புக் களங்கு

சபாபதியைக் கண்டு சாதிசிவ யோகம்
நலமான கண்டத்தில் நாடுவீர் - சிவமாய்

செம்பொன்று சொல்வேன் சிறப்பாய்ச் சிவமயமாம்
வம்பென்று விட்டு அயராதே - தெம்பாய் 260

தங்கமொன்று செம்பொன்று தாட்டிகமாய்ச் சேர்த்துருக்கி
யுங்கள் தககடா யுருட்டியே - யெங்கள்
தகட்டை யடித்துத் தாட்டிகமாய்க் கேளு
மகட்டான சீனநவா சாரமுடன் - புகட்ட 261

கல்லுப்பு ஒன்று கருத்தான பொட்டளையும்
நல்லுடனே சூடனது நல்லாய் - வெல்ல
வகைக் கொன்றுசேர்த்து வண்மைப் பழச்சாற்றில்
நகைப்புடனே நால்சாமம் நாட்டியே - கைக்க 262

எடுத்துத் தகட்டி லின்பமாய் மேலே
அடுத்து அதிற்பூசி ஆண்மையாய்த் - தொடுத்து
ரவிதனிலே வைத்து நல்லாய்ப் புடம்நாலு
கவியவே போட்டுக் கணக்காய்ப் - பவியமாய்ச் 263

செம்புருக்கித் தான்கொடுக்கச் சிவந்த தங்கமாகும்
வம்புடனே பார்த்து வரிசையாய்த் - தென்பாய்
யோகங்களாகும் யூகி முனி சொன்ன
ஆகுமது களங்கு அன்பாகத் - தேகம் 264

அநித்தியமென் றெண்ணு அன்பாய் ரசவாதம்
நய்த்திலே காணு நலமாகும் - சகத்தில்
ரசவாதம் பொய்யோ நாடிமிகக் கேட்போர்
தசமான யோசனைகள் தாக்கியே - நிசமாக 265

செய்தால் ரசவாதஞ் செல்வமுடனே வருகும்
வைதா லுனக்கென்ன வந்திடுமோ - மெய்யாக

என்று முனிவ ரியம்பினா ரந்நேரம்
அன்றிப் படித்தா ரநேகமாய் - நின்று 266

காரியமாய்ப் பாரு காதலா யென்னேரம்
பாரியாய்ச் சாத்திரத்தைப் பார்த்து - நேரியாய்
நல்லாகப் பார்த்து நாடியே கைபாகம்
வல்லமையாய்ப் பாரு வளமாகும் - எல்லாம் 267

பார்த்தாக்கால் தோன்றும் பத்தியுடன் சொன்னேன்
சேர்த்தால் ரசவாதம் சிவக்கும் - பேர்த்து
அலையாமற் பாரு ஆதி சிவனருளால்
அலையாமல் நந்திபக்கல்தான் கேட்டு - முலையாமல் 268

அசுவனியும் சொன்னார் ஆதி விசுவனியும்
பசுபாசத் தன்மந்திரி பாவித்தார் - நிசமாக
ஆதிஅகத்தியற்கு ஆண்மையாய்த் தான்சொன்னார்
சேதிமிகக் கேட்டுத் தெளிவாக - நீதியாய்ப் 269

புலத்தியற்குச் சொன்னார் பெரிய புலத்தியரும்
நலத்துடனே தேரர்க்குச் சாற்றினார் - நலத்தில்
யூகிமுனிகேட்டு உண்மையாய்த் தானெண்ணிப்
பாகினு புதிக்குப் பாவித்தார் - போகில் 270

உலகத்தோர் கேட்டு உண்மையாய் மெய்யென்று
கலகமில் லாமல்நம்பிக் காட்டினார் - பலிவாய்
வயித்தியங்கள் சொல்லி வாதிக்குப் புத்திசொல்லி
நயத்திலே காட்டி நயந்தார் - பயமா 271

யெல்லாருங் கேட்ட இன்பவுலா தன்னை
நல்லா யுனக்குதான் நாடினேன் - சல்லாப
இன்னமொரு வேதை யின்பமாய்ச் சொல்லுவேன்
நன்னயமாய்க் கைபாகம் நாடியே - சொன்ன 272

**261-271 உரை :**

தங்கம் ஒன்று செம்பு ஒன்று ஆக இரண்டும் சேர்த்து உருக்கித் தகடாகத் தட்டிச் சீனமும் சாரமும் கல்லுப்பும் வெடியுப்பும் சூடனும் ஆகிய ஐந்தும் பழச்சாறு விட்டரைத்துப் பூசிக் காயவைத்துப்புடமிடு. இங்ஙனம் நாலுபுடமிடு. எடு செம்பினை உருக்கிக் கொடு. சிவந்த செம்பொன்னாகும்.

*(பாகின் நுண் ஆதிக்கு - பாகுபோல நுட்பம் முதலிய உடையோர்க்கு)

## தங்கச்செம்பு நொறுக்குவெள்ளியிற் கொடுக்க

சொல்போலேபாரு தோயும் ரசவாதம்
நல்பெரிய சாத்திரத்தை நாட்டியே - யிப்புவியில்
லிங்கபற்பந் தானெடுத்து நேர்த்தியாய்க் கீழே
அங்கமா கப்பற்றி அப்புறங்கேள் - திங்கள் 273

செம்பைத்தான் மின்னு திச் சிவந்த பருவத்தில்
வம்பைத்தான் யேழுதிரம் வைத்திடவே நம்பு
இழுக்குமே பற்பம் இயல்பாகத் தான்கட்டும்
அழுக்குமே செம்பு அடைவாகப் - பழுக்கும் 274

நொறுக்குமதி தன்னில் நேரா யிரண்டெடையாய்
கறுக்குங் கொடுக்கக் கனகமாம் - நறுக்காய்க்
கொடுத்தூது தங்கஞ்சேர் கோதையரே கேளு
படுத்தூது எட்டரையும் பலிக்கும் - எடுத்துவிற்று 275

கைபாகந் தப்பில் காட்டாது தங்கம்
மெய்பாகந் தப்பிலுயிர் மீளுமே - பொய்யாகும்

**272 - 274 உரை :**

ஒரு குகையில் இலிங்கபற்பமிட்டுச் செம்பை மின்னல்போல் உருக்கி அதில் சாய்த்திடுக. இங்ஙனம் ஏழுமுறை செய்க. செம்பு கட்டும். நொறுக்கு வெள்ளியில் இரண்டெடை கொடுக்கக் கருக்கும். ஊது தங்கமாம். தங்கம்சேர். எட்டரை மாற்றாகும். கைபாகு தப்பினால் ஆகாது.

### சுரக்கில் உப்பு புளி அறிந்து சேர்க்க

உப்புப் புளிபார்த்து ஊட்டச் சரக்கில்
தப்பிதமில் லாமலே தங்கமாம் - இப்புவியில் 276

ஆனசரக்கு வந்தால் ஆதி புளிசரக்கு
தானாகச் சேர்ந்தாக்கால் தங்கமாம் - வானாகும்
ஆணுடனே பெண்ணும் அடைவுடனே சேர்ந்தாக்கால்
தாணு சிறுபாலகரும் தாட்டிகமாம் - பேணு 277

வருகுமுயிர் போல் வாதமே செய்தால்
தருகும் புளியுப்புத்தாக்கு வேன் - பெருகும்
வெடியுப்பு உப்பாகும் வேதமாம் சாத்திரத்தில்
படிக்கிப் புளியென்று பாவித்தார் - நொடியாக 278

கல்லுப்பு உப்பு காதலாய் வாதிகேள்
நல்லுப்புக் கடல் நுரைதா னாடுவீர் - வெல்லுப்பு
வேலை அமுரிநீர் வேதாந்த வாதி கேள்
சாலவே இந்துப்புத் தான்புளியாம் - காலம் 279

சூடனது உப்புத் துடியான வாதிகேள்
நாடகமா கத்துருகதான் புளியாம் - நாடு
கடல்நுரையு முப்பாகும் காதல் ரசவாதி கேள்
தடவைக் கற்சுண்ணம் தான்புளியாம் - நடமாடு 280

சூதமது உப்பாகும் சூட்சமாய் வாதிகேள்
சாதகமாய்க் கெந்திதான் புளியாம் - பேதமாய்
காந்தமது உப்பாகும் காதல் ரசவாதிகேள்
சேர்ந்த பழங் காடியுளி செப்பினோம் - பாந்தமாய் 281

இரும்புதா னுப்பாகு மின்ப ரசவாதி
அரும்பு காட்டாமணக்குப் பால்புளியாம் திரும்ப
தொட்டியது உப்பாகும் தேரர் சொன்னா ரிப்புவியில்
தட்டிப் புளியரணை தான்புளியாம் - வட்டியாம் 282

பேதியது உப்பாகும் பேதமுள்ள வாதிகனே
சாதியாம் பொன்னம்பர் தான்புளியாம் - நீதியாம்
மாங்கிசத்தின் பேதி வளமாக வுப்பாகும்
தாங்குங் கல்மதம் தான்புளியாம் - பாங்காய் 283

வீரமது உப்பாகும் விருத்தரசவாதி கேள்
பாரப் புளியாரை பார்புளியாம் - சாரம்
உப்பாகு மென்று ஓதினார் யூகிமுனி
தப்பாகு மிந்துப்புத் தான்புளியாம் - இப்புவியில் 284

அப்பிரேகமுப்பாகும் ஆன பிணிசரக்குத்
தப்பித மில்லாமலேதான் புளியாம் - இப்புவியில்
கௌரி யுப்புமாகும் கேட்டீ ரசவாதி
தவரி புளி மாங்காய்தான்புளியாம் - பவரி 285

வெள்ளைப் பாஷாணம் வேண்டிய தோருப்பாகும்
கள்ளு பனமரமும் காட்டினேன், -தெள்ளுதமிழ்
வைக்கி ராந்தம் உப்பு வண்மையுள்ள வாதிகளே
பைக்கமஞ் சல்நிமினை பார்புளியாம் - செப்பத் 286

தங்கமது உப்பாகும் தானே சிலையிரண்டும்
பங்கமில் லாமல்புளி பத்தியே - சிங்கம்

நாகமது உப்புநலமான வாதி கேள்
தாகமா யிலுப்பை நெய் தான்புளியாம் - யோகமாம் 287

வித்துவது உப்பாகும் விரும்பியே நாதம்
சிந்துபுளி யாகுமெனச் செப்பினேன் - முந்தியே
வெண்காரி தான் புளியாம் வேதமெனச் சொல்லும்
தங்காத சாரம் தானுப்பு - பங்காமல் 288

மஞ்சள் கருபுளியாம் மயங்கித் திரியாமல்
தஞ்சமென வெண்கருவும் தானுப்பு - பஞ்சாயம்
யோனிக் கிளிஞ்சியின்மே லோடுப்புத்தாரமாய்
மானுட் சதைதான் புளியாம் - பாரம் 289

சங்குவும் உப்பாகும் சாத்தவே கேளு
பங்கமா யுட்சதையும் பார்புளியாம் - துங்கமாய்ப்
பச்சையென்ற கற்பூரம் பாகமா யுப்பாகும்
இச்சையுட னிந்து யினிப்புளியாம் - நிச்சயமாய் 290

உப்புப்புளி சேர்த்து உண்மையாய்த் திரவகமும்
தப்பிதமில்லாம லேதான் வாங்கு - இப்புவியில்
உப்பிலிட்டா லுப்பாகு முண்மையாய்ச் சீனத்தைத்
தப்பித மில்லாமலே தானீற்று - இப்போ 291

**275 - 290 உரை :**

| உப்பு | புளி |
|---|---|
| வெடியுப்பு | சீனம் |
| கல்லுப்பு | கடல்நுரை |
| கடல்நீர்உப்பு | இந்துப்பு |
| சூடன் | துருசு |

| | |
|---|---|
| கடல்நுரை | கற்சுண்ணம் |
| ரசம் | கெந்தகம் |
| காந்தம் | பழங்காடி |
| இரும்பு | காட்டாமணக்குப்பால் |
| அன்னபேதி | பொன்னம்பர் |
| மாங்கிசபேதி | கல்மதம் |
| வீரம் | புளியாரை |
| சாரம் | இந்துப்பு |
| அப்பிரகம் | புளி |
| கௌரி | புளிமாங்காய் |
| வெள்ளைப்பாடாணம் | கள் |
| வைக்கிராந்தம் | பொன்னிமிளை |
| தங்கம் | மனோசிலை |
| நாகம் | இலுப்பெண்ணெய் |
| விந்து | நாதம் |
| சாரம் | வெண்காரம் |
| வெள்ளைக்கரு | மஞ்சட்கரு |
| கிளிஞ்சலோடு | உட்சதை |
| சங்கு | உட்சதை |
| பச்சைக்கற்பூரம் | இந்துப்பு |

உப்புப்புளி சேர்த்துத் திராவகம் இறக்கு. உப்பிலிட்டால் உப்பாகும் தவறாமல் சீனத்தை நீற்று.

## உப்புபுளியின் செய்கை

சணத்திலே நீறும் சயமான கண்டர்
கணத்திலே நீறும்கருதக் கேள் - உன்க்கே
சொன்ன புளியுப்பிச் சீக்கிரமாய்க் கைபாகம்
நன்னயமாய்ச் சொல்லுவேன் நாடுவீர் - முன்னம் 292

வெடியுடனே சீனம் விதமாகச் சேர்ந்தால்
அடியோடே சரக்குவகை அண்மையாம் - படியாம்
கட்டுண்ணும் தங்கமாம் கரியில் நின்றாடும்
சட்டுப் பலிக்கும் சயமாகும் - முட்டவே 293

சயமாகும் எல்லாம் சந்து நவலோகம்
அயமாகும் செம்பு அடைவாகும் - தயவாகும்
கல்லுப்பு வந்தால் கசிவறவே ஆக்கும்
நல்லொந்த பூநீறு நாதங்காண் - செல்லுற்று 294

### 291 - 293 உரை :

சீனச்சுண்ணத்தால் துரிசு நீறும். வெடியும் சீனமும் சேர்ந்தால் சரக்கு ஆண்மையாம். கட்டும். தங்கமாகும். கரியில் நின்று ஆடும். ஒன்பான் உலோகமும் வெற்றியாம். இரும்பும் செம்பாகும். கல்லுப்பைக் கசிவு நீக்கும். பூநீறு நாதமாகும். (உவர் மண்ணும் சவுக்காரமும் கரைத்துத் தெளிந்த நீரில் கடல்நுரையைக் காய்ச்சி எடுக்கக் கட்டும். கரியில் வைத்தூது சுண்ணம் கல்லுப்பைச் சேர்த்தரை. வி.த.கா. ஊதச் சுண்ணமாம்.

## நீற்றினம்

துருசு வந்தாலுருக்கத் துப்புரவாய் வெங்காரம்
அரிசுடனே போடவது வுருகும் - பரிவாய்
நீத்தினங்க ளெல்லாம் நிலவரமாய்ச் சொல்லுகிறேன்
பாத்துடனேபண்ணை பதமாகச் - சேர்த்தால் 295

நீறாக மெல்லாம் நிர்ணயமாம் வாதமாம்
பாறாகும் பச்சைக் கற்பூரத்தால் - நேராகும்
கல்லுப்பு என்றதெலாம் கடல்நுரையை நேராக
நல்லொத் தரைத்தூது நற்சுண்ணம் - வெல்லுற்றுத் 296

திராவகத்தை விட்டுத் தப்பாமல் நாளேழு
பராமுகமாய் வைத்துப்பார் பாருப்பாம் - சராமுகமாம்
ஒட்டவே காய்ச்சி ஒருமிக்க வுப்பாக்கி
வட்டமுள்ள வில்லைகட்டி வாதமாம் - திட்டமாய் 297

ரவிதனிலே போட்டு நலமாய்ப் புடமிடவே
தனியவே சுண்ணம் மகிமையாம் - தவியாதே
யெட்டுக் கிரண்டு இனியதொரு நீலகண்டன்
வட்டுச் சேர்த்தூத வளப்பமாய்த் - திட்டமாய்க் 298

கடுஞ்சுண்ண மாகும் காதல் ரசங்காட்டும்
படுமோ ரசவாதம் பாலிக்கும் - எடுமே
களங்கு செய்து கொள்ளு காரமாய்த் தங்கம்சேர்
துளங்கமணி மார்பர் சொல்லிவிட்டார் - பளக 299

**294 - 299 உரை :**

துருசும் வெங்காரமும் சேர்த்துருக்க உருகும். இலிங்கத்தைப் பதமாகச் சேர்த்தால் நீறும். பச்சைக் கற்பூரம் சேர்க்க வாதமாகும். கல்லுப்புக்கு நேர் கடல்நுரை சேர்த்து அரைத்து ஊது. சுண்ணமாகும். அதில் திராவகம் விட்டு ஏழு நாள் வை. உப்பாகும். காய்ச்சி எல்லாவற்றையும் உப்பாக்கி வி.த.கா. புடமிடு. சுண்ணமாகும். எட்டுக்கு இரண்டு துரிசு சேர்த்து ஊதக் கடுஞ்சுண்ணமாகும். ரசம் கட்டும். களங்கு செய். தங்கம் சேர். யூகி பரிபூரணம் 200. 147 - 148 காண்க

## அண்டசுன்னம் - வெள்ளிவித்தை

நூனாதி தேவருக்கு நுணுக்கமாய்ச் சொல்லிவிட்டேன்
பானா வுலாவிலே பாவித்தேன் - சேனா
அண்ட வித்தை சொல்வேன் ஆதிசிவன் சொன்ன
பின்டவித்தை யுண்டு பிலக் கேடாம் - தொண்டர் 300

காத்தாக்கா லோ தெரியும் காரணமாய்ச் சொல்வார்
பார்த்தால் ரசவாதம் பாவிக்கும் - சேர்த்தால்
வெள்ளிவித்தை யுண்டு மேதினி யோர் தங்களுக்குத்
துள்ளி ரசவா தம்சொலிக்கும் - மெள்ள 301

முட்டையின் மேலோடு முக்கியமாய்ப் பத்து
நிட்டையா யூதநிறமாக - நட்டமாக
ஊதிடவே சுண்ணமாம் ஒக்க வெடியுப்பும்
பாதுடனே யிடைசமனாய்ப் பாச்சியே - வாதாக 302

அண்டக் கருவாவரைத்து வில்லை காயவைத்துக்
கண்டபுடம் போடு காரமாம் - பண்டாக
எடுத்துமே பீங்கானிதமாக விட்டு
நடுத்துத் திராவகத்தை நாட்டியே - நடத்து 303

மூணு நாள் வைத்து முன்னீரைத் தானிறுத்துக்
காணு மேவுப்பு கணமாகும் - வேணும்
வறுக்க வுப்புமாகும் வல்லமையாய்த் தானெடுத்து
தறுக்க எடை வெள்ளை தனைக்கலக்கப் - பொறுத்து 304

அரைத்துத் திராவகத்த லானரவி காயவைத்துப்
பரைத்துமே மண்மறைவில் பக்குவமாய் - நிரைத்து
போட்டுப்புட மெடுத்துப் பேரான வெள்ளீயம்
காட்டுமோ சீதங்கன மாகும் - நாட்டு 305

ஊத்துக்கு நிற்கும் வுள்ளபடி யாடும்
நாத்திசையு மெச்சும் நலமாகும் - பாத்திபனே
யென்றுமுனி சொன்னா ரியம்பிப் பலவார்த்தை
நன்றுமே புத்தி நலம்சொன்னார் - கன்று 306

கொடுத்தபால் போல கொற்றவரே கேளும்
அடுத்த ரசித வெள்ளியாகும் - நடுத்து
செயமான வேதை செய்யவே சொன்னேன்
நயமான யோகமே நாடுவீர் - பயமாக 307

இல்லா ரசவாதம் இன்பமாய்ச் சொல்வேன்
நல்லா வுலாவிலே நாடுவீர் - கல்லா
மனிதருடன் போசாதே மார்க்கமாகச் சொல்லு
தனியே ஒருத்தனைத்தான் தாட்டிகமாய்ப் - பனியாக 308

### 300 - 308 உரை :

முட்டையின் மேலோடு பத்துப்பலம் தூய்மை செய்து எடுத்து ஊதச் சுண்ணமாகும். அதனெடை வெடியுப்புச் சேர்த்து முட்டையின் வெண்கருவிட்டரைத்து வி.த.கா.புடமிடு. காரமாகும். எடுத்துப் பீங்கானிற் போட்டுத் திராவகம் ஊற்றி மூன்று நாள் வைத்து மேல்நீரை இறுத்துவிட அடியில் உப்புக் காணப்படும். எடுத்து வறுக்கவுப்பாகும். அதனெடை வெள்ளைப்பாடாணம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துக் காயவைத்து மண் மறைவில் புடமிடு. எடுத்து வெள்ளீயம் உருக்குமுகத்தில் கொடு. நாற்றிசையும் மெய்க்கின்ற நல்லவெள்ளியாகும். கல்லாதவருடன் பேசாதே ஒருவரையும் நம்பாதே.

## இரசவெள்ளி

நம்பாதே யென்று நலமாக யூகிமுனி
தெம்பாகச் சொன்னார் சிறப்பாக - தம்பமாய்

அலையவே வேண்டாம் ஆதிரச வெள்ளி
தலைமையாய்ச் சொல்லுகி றோம்தான்கேளு - கலையாதே 309

ரசத்தில் திராவகத்தை நாட்டியே பார்த்தால்
தசப்பாக வுப்பாகத் தானாகும் - வசப்பாக
இருக்குமதை யெடுத்து ஏற்கவே வைத்து
நருக்கவே கோழிமுட்டை தானுப்பு - எடுத்து 310

இது ரெண்டுமாக ஏற்கனவே தானரைத்துத்
தடுத்து வில்லையாகத் தனைவைத்துப் - படுத்து
வுமி நெருப்பிலிட்டு வுத்தமமாய்த் தானெடுத்து
தமியான வெள்ளீயம் தாகமாய் - நமியாகக் 311

கொடுக்க ரசிதமாம் கொக்குநிறம் போலாம்
நடுக்க இருக்க நலமாகும் - எடுத்து
யெடுத்து மேவிற்று இதமாய்ச் செலவு செய்து
அடுத்துச் சிவயோகம் ஆதியாய்க் - கடுத்துப் 312

பாருமே என்று பரமனுரை செய்தார்
தாருமே யூகிமுனி தான்சொன் னேன் - வாரு
மேனிருத்திக் கொண்டு வடிவாக நூனாதி
தேவருமே தேவர் திறமாகப் - பாரில் 313

வுப தேசம் சொன்னாரின்ப ரசவாதம்
தபமாகத் தான் சொல்லத் தாகமாய் - நலமாக
நவசித்தர் ஒன்பது பேர்நாடி மிகவந்து
தவமா யுபதேசம் சாத்தினார் - பவமாய் 314

சித்தர் சொன்ன நூலைத் திரட்டியே அத்தனையும்
பத்தி யுலாவிலேபாடினேன் - சித்தாகப்
போகவே சொன்னேன் போக்கோ டேவாதம்
தாகமாக் கைபாகம் சாத்தினேன் - யோகமாச் 315

செந்தூரம் சொன்னேன் செப்பமாகக் களங்கம்
பந்தூரம் கைபாகம் பாடினேன் - நந்தூரம்
தயிலவகை சொல்லித் தாகமா யந்நேரம்
பயிலா வுலாவிலே பாடினேன் - நயமாக 316

மட்டங்கள் சொன்னேன் மயமாக கைப்பாகம்
திட்டமுடன் பாகம் திறமாக - முட்டவே
வுப்புக்கட்டுச் சொன்னேன் ஓங்கியதோர்பாகம்
தப்பில் லாமொழிகள் சாற்றினேன் - இப்புவியில் 317

**309 - 317 உரை :**

ரசத்தில் திராவகம் ஊற்று. உப்பாகும். வெண்கரு ஊற்றி அரை. வி.த.கா. உமிப்புடமிடு. எடுத்து வெள்ளீயம் உருக்கிக் கொடு. கொக்குநிற வெள்ளியாகும். விற்றுச் செலவு செய்து தவமும் செய்.

## துரிசுச்சுண்ணம்

துருசதுவும் சுண்ணம் துப்புரவாய்ச் சொல்கிறேன்
பரிசுதர வேணும் பாரிலுள்ளோர் - நரிசுதரக்
கைபாகம் சொல்வேன் காதலரே கேளும்
மெய்பாக மாக விளம்புவீர் - செய்பாகம் 318

கண்டுமே தேறு கருத்தாய்த் துருசுடனே
பண்டு வெகுமானம் பாலிப்பார் - சென்று
ஒறுத்துத் துருசியைத்தான் ஒட்டி மிகப்பாரு
சிறுத்த ரசம்கட்டும் சித்திலே - வருத்தமாக 319

கும்பமுனி சொன்னார் கொடூரமாகத் துருக
நம்பினேன் அந் நேரம் - நாட்டமாய்
ஆதிவழலை தன்னை அன்பாகச் சொல்லுகிறேன்
சோதி பெற மேன்மையாய்ச் சொல்லுவேன் - நிதியாய் 320

வீவரச மெடுநீ விரும்பமாய் நாலுபலம்
காரமாய்த் திராவகத்தை காட்டுநீ - பாரமாய்
பீங்கானில் விட்டுவைக்கப் பிரண்டுப்பு ஆகும்
நீங்காமல் காயத் திடமாக்கு - பாங்காக 321

எடுத்து மேநாலு இன்பமாய்ச் சீனம்
அடுத்து முன்னடைக்கி அடைவாகத் - தடுத்து
ஊதியெடுத்து உணர்வாய் எடை சேர்த்து
ஆதி புகைநீரா லரைத்துரவி - போதி 322

அஞ்சுசுண்ணந் **தன்னி** வடைவாய் நடுவிலிடு
கெஞ்சுமெனச் சுண்ணங் கிருபையாய்ப் - பஞ்சாய்ப்
பச்சைக் கற்பூரம் பதமாய்ப் புகைநீர்விட்
டிச்சையுடன் புரண்டு இப்புவியில் - தச்சயமாய் 323

உப்பாகுங் காய்ச்சி யுணர்வர் யெடுத்துடனே
தப்பிதமி லாமலெடை தான் சேரு - மெய்ச்சியே
அரைத்து அஞ்சுசுண்ணம் அன்பாய் நடுவில்வைத்து
தரைத்துப் புடம்பேடத் தான்குருவாம் - பரைத்துத் 324

துருசியின் மேல்கட்டித் துப்புரவாய்க் காடை
பரிசனமாய்ப் போட்டுப் பதமாக - வரிசையாய்
நீலகண்டன் நீறும் நிமிஷ ரசங் கட்டும்
ஆலகண்டன் போல அதுவாகும் - சாலச் 325

சரக் கெல்லாங் கொஞ்சும் சத்திசிவமாகும்
அரக்கென்ற பாஷாணம் அதிற்கட்டும் - புரக்கும்
வேதை யிதிலாகும் வேதாந்தம் தான்முடிவாம்
பாதகமில்லாம லே பார்த்திடுவர் - பேதை 326

சவுக்க ஈரமாகும் சார்ந்த சரக்கெல்லாம்
நவுக்கார மாய்க் கொல்லும் நாணயமாய் - புவிக்கா
மறைத்த வழலையிது வாதிக ளேகேளு
இரைத்த கிணறூறும் இன்பமாய்ப் - பரைத்த 327

தங்கமயமாம் வேதை தாய் சொல்ல யான்கண்டேன்
தங்கமாம் தங்கம் பொரும்பாகும் - உங்கள்
குலங்க ளீடேறும் கோத்திரமுந் தான்வாழும்
அலங்கற் பதிவழலை அறைந்தேன் - நலங்கேள் 328

சித்தர் மறைத்த திறமாய்த் துரிசதனைப்
பத்தியே சொல்லிப் பாவித்தேன் - பெத்தி
பெருநூலைக் குறுக்கிப் பேதமில்லாமல்
தருநூ லுலாவிலே தாபித்தேன் - வருநூல் 329

பேதங்க ளில்லாமல் பித்தனார் சொன்ன
சாதங்கள் கைபாகம் சாத்துவீர் - தாதை
தனைப் போல சொன்னேன் தன்னை யினிப்பாரு
வுனைப்போ லுலகில்ஒருவருண்டோ - தனைப்போல் 330

மலைகள் பழுக்கும் மாதவர்கள் செய்த
கலைக ளுணர்வல்லோர் கற்றுணர்ந்தோர் - சிலையாக
எல்லா மறிந்திடுநீ யின்ப துன்பநீங்கும்
பொல்லாத பேறாகப் போகா தே நல்லோர் 331

இருந்த இடத்தில் இருக்கவே சொன்னேன்
நறுந்தண்தமிழே நடையாகத் - தருந்தி
பெருநூலைப் பாருபேய் போல் திரியாமல்
தருநூ லுலாவைத் தரித்துமே - கருநூல் 332

தனித்துமே பாரு தப்பாமல் முத்தி
செனித்து மேதானிருக்குஞ் செப்பமாய் - பணிந்து
நிற்குமே வாழ்வு நீடூழி காலம்
பக்குவமாய்த் தானிருக்கும் பாரிலே - கற்க 333

## 320 - 333 உரை : வழலை

நாலுபலம் வீவரசமெடுத்துக் காரம் உள்ள திராவகம் விட்டுவை. உப்பாகும். காயவை. சீனம் நாலுபலம் எடுத்துக் கரியில் வைத்து ஊதி அந்தரச உப்பினெடை சேர்த்து புகைநீர்விட்டு அரைத்து அஞ்சு சுண்ணக்குகைக்குள் வைத்துப் புடமிடு. சுண்ணமாகும். பின்பு பச்சைக் கற்பூரத்தில் திராவகம் விட்டு உப்பாக்கி முன்செய்த சுண்ணத்தினெடை சேர்த்து அஞ்சு சுண்ணக் குகைக்குள் வைத்துப் புடமிடக்குருவாகும். இந்தக் குருவைத் துரிசின் மேல் கவசமிட்டுக் காடைப்புடமிடு. நீறும், ரசம் கட்டும். சரக்கெல்லாம் கட்டும். பாடாணமும் கட்டும். சவுக்காரமாகும். சரக்கெல்லாம் கொல்லும். உலகத்திற்கு மறைத்த வழலை இதுவேதான். சித்தர் மறைத்த துரிசினைச் சொல்லிவிட்டேன். தந்தைபோல் சொன்னேன். மலைகளும் பழுக்கும். எல்லாவற்றையும் தெரிந்து கொள் நீ. இன்பதுன்பம் நீங்கும்.

## வழலைக்குருசுக்கான்

சுக்கான் வழலைதான் சொல்லக் கேள் சொற்பெரிய
மிக்கா சவுன்காரம் மேன்மையாம் - மக்கா
பூநீர் விலையுங்கல் பேர்பெரிய நீத்தியதை
தான்படி நாலுதாக்கி யே - யேன்கேள் 334

சாடிதனிற் போட்டுத் தளரப்புகை நீர்விட்டு
நாடி ஒரு மண்டலத்தில் நாடியே - தேடி
யிறுத்து எரிக்கவே யேகமா யுப்பாகும்
நறுத்துப் பொடித்து நலமாக - நிறுத்து 335

அரைத்து ரவியில் வில்லைஅன்பாகக் காய்ந்து
நிரைத்துச் சுண்ணம்நடுவில் சுகமாகப் - பரைத்து
காடைப் புடமிட்டுக் காட்ட எரித்திடவே
சாடையா யெடுக்கத் தான்குருவாம் - தேடி 336

சவுக்கார மாச்சு சதாசிவன்தான் சொன்ன
மௌக்காரம் வழலை வடிவாகும் - நவுக்காரம்
பூத்துரசத் தோடே புகலரி நேராகப்
பார்த்து அரைக்கப் பலனுண்டாம் - சேர்த்து 337

அரைத்துப் புடமிட வேஆன வழலையாம்
அரைத்து எடுத்துப் பக்குவமாய் - நிரைத்து
எடுத்துத் துருசின் மேலேகமாகக் கவசம்
தடுத்துக் கொடுத்துத் தாக்கவே - யடுத்து 338

காடைப் புடமிடுநீ காட்டி யெடுக்க
பேடைத்துருக பெலமாகச் சோடை - யெடுக்கக்
கடுஞ்சுண்ணம் இன்ப மாய்த் தானிருக்கும்
அடுத்துச் சுக்கான் வழலையாகும் - தடுத்து 339

சரக்கெல்லாங் கட்டும் சதாசிவன் தான்சொன்ன
குரக்கவே பொன்னாகும் கூட்டத் - துரக்க
வெடியுப்புக்கூட்டும் வெண்மை நவாசாரம்
படியாகத் தான்கட்டும் பாக்கியமாம் - பொடியாக 340

இரதமது கட்டும் ஏத்த வெள்ளை பாஷாணம்
சுரத மயமாகத் துடிப்பாக - வரத
கட்டுமே லிங்கம் கசடத்த வேதைமுகம்
செட்டுமே வாதவெள்ளம் செப்புவீர் - பட்டுமே 341

உபரசங்க ளெல்லாம் உருகுமே யுண்மையாம்
பவரசமாய் வாதம் பாவிக்கும் - நவரசமாய்
கல்லோடு எல்லாம் கனக்க வுருகுமே
நல்லோடு செம்பு தங்கம் நாடுமே - பல்லோடு 342

தங்க மயமாகும் தாட்சிவா ராதுஇனி
பொங்க மயமாகும் புவிமீதில் - உங்கள்
குலங்க ளீடேறும் கொற்றவர் போலாவீர்
தலமெல்லாம் நாடும் தவமாகும் - இடமாக 343

வுன்னரிய போதமாம் உண்மை யிதுவாகும்
தன்னிலே நாடும் தண்மையுமாம் - எண்ணரிய
கைபாக மாகவே காதலாய்ச் சொன்னேன்
மெய்பாக மாக விருந்தாகும் - பொய்பாகம் 344

ஆகவே செய்து வடிவாகத் தப்பியே
தாகவே செய்து தடுமாறி - யேகமாய்ப்
பணமல்லாம் போச்சு தென்று பாகமாய்ச்சொல்லி
கனமாக வேபுலம்பிக் காட்டாதே - சினமாக 345

இருக்க ரசவாதம் இன்பமாய்த் தானிருக்கும்
சுருக்கமா யிந்நூலில் செல்லிட்டேன் - பெருக்க
இருக்குமிட மெங்கென்றால் யேத்தமாய் வன்னிகற்பம்
படமாகச் செந்தூரம் பண்ணியே - நடமாடு 346

தங்க மயமாகும் தாழ்ச்சிவா ராதுநலம்
பங்கமாய் மேருவினில் பத்தியே - சிங்கமாம்
தங்கத்தைச் சேரு தாழ்ச்சி வாராது நலம்
பொங்கமா யீவு போதமாம் - நங்கள் 347

குலதெய்வ மாகும் கற்றமிக வாராது
நலசெய்வ மாகியே நாடிநீ - பலதெய்வம்
என்றுமே கும்பிட்டு ஏங்கித் திரிவார் போல்
நன்று பொருளை நாடியே - சென்று 348

உறுதியாய் நின்று வுற்றரச வாதம்
நறுதியாய்ச் செங் கோலும் நாடியே - உறுதியாய்ச்
செய்து முடித்தத் திறமாகக் கைபாகம்
பைய வேசெய்து கொள்ளப் பாகமாய் - நைதால் 349

ஒருதிறந்தான் தப்பினா லொத்து மேபார்த்து
இருதிறத்தான் சோதிக்க யெய்துமே - வருதிறமாய்ச்
செய்யவே தேறும் தேற்றிக் கொள் உன்மனத்தை
வையகத்தில் மானுடரை நம்பாதே - மெய்யாய் 350

ஆண்டவருக் கேதெரியும் ஆனரச வாதிக்கிப்
பூண்டபணி கண்டாலும் பொய்யங்காண் - தூண்டா
விளக்கு எரியுமோ வேதையென்று சொன்னாக்கால்
குழப்பமாய் நின்றால் குடிகேடு - தளப்பமாய் 351

தோணாத வாதி துவரம்பருப் பைக்கண்டால்
காணாத தங்கம் போல் காணும் - பூணாக
வுழுது பயிரிட்டா லுறுதியாய்த்தான் விளையும்
அமுது புலம்பினா லாகுமோ - பழுதாக 352

இருந்தால் தெரியுமே யேழை மடநெஞ்சே
பொருந்தாத பொன்னொளிவு போகுமே - வருந்த
மெய்வருத்தப் பட்டால் விளையும் ரசவாதம்
செய் வருத்தப்பட்டால் செயமாக - நைவருந்த 353

செம்பதுவும் சொன்னேன் சிறப்பாகச் சுத்திமுறை
நம்பியே பார்த்தால் நலமாகும் - தம்பிரான்
செய்து முடிப்பார் செயமான வேதையாம்
வைது திரிந்தால் வருமோசொல் - கையில் 354

வெண்ணெய் வார்த்தெரிக்க விருப்பமாய் நெய்யாகும்
பெண்ணை வைத்த சிரசில் பிஞ்ஞகரே - உன்ன
வருமெனவே சொன்னார் வல்லமையாய்ச் செய்து
தருகும் ரசவாதம் தானாகும் - பருகும் 355

## 334 - 355 உரை :

**வழலைக்குருசுக்கான் (யூகிமுனிவர் கும்மி 1000த்தில் 10 முதல் 22 கான்)**

சுக்கான் வழலையைச் சொல்லுகின்றேன். அதுமிக்க மேன்மையான சவுக்காரம். பூநீறு விளையும் நிலத்தினுள்ளிருக்கும் கற்களைத் தோண்டி எடுத்து நீற்றி ஒரு சாடியினுள் நாலுபடி போட்டுப் புகைநீர் விட்டு நாற்பது நாள் கழித்து இறுத்து எரிக்க அது உப்பாகும். அதனைப் பொடித்து அரைத்து வி.த.கா. சுண்ணாம்புக்குள் வைத்துக் காடைப் புடமிடடெரிக்கக்குருவாகும். இதுதான் சவுக்காரம். சதாசிவன் சொல்லியது. திராவகம் ஊற்றி வைத்துப் பூக்கச் செய்த ரசமும் குருவும் நேர் அளவு சேர்த்து அரைத்துப் புடமிட வழலையாம். இதனை அரைத்துத் துரிசின் மேல் கவசமிட்டுக் காடைப்புடமிடக் கடுஞ்சுண்ணமாகும். எல்லாப் பொருள்களையும் கட்டும். பொன்னாகும். வெடியுப்புக் கூட்டிய நவாச்சாரம் கட்டும். ரசம் கட்டும். வெள்ளைப் பாடாணம் கட்டும். இலிங்கம் கசடற்றுக் கட்டும் மாற்று உண்டாக்கும். உபரசமெல்லாம் உருகும். இலிக்கத்தைச் செந்தூரம் செய்து மாற்றுப் பார். தங்கத்தையும் சேர். தாழ்வு வராது. செம்பு கூறினேன். சிறப்பாகச் சுத்தி செய்தால் மாற்று ஆகும். மற்றவை அறிவுரை.

## செம்பை வெட்டை செய்து கொடுக்க

செம்பை மிகஅறிந்து சேர்க்கவே தங்கம்
பங்கமில் லாமலே பார்த்ததுமே - நம்பு
ரவியைத் தகடடித்து நல்ல வெடியுப்பாம்
கவியவே சீனமுடன் காரியமாய்ப் - பவீய 356

குண்டுமணி சேர்த்துக் கொள்கையாய் நேரே
துண்டுமே கத்தநீர் துப்புரவாய்ப் - பண்டு
துப்பரவாகக் குழப்பித் துடிப்பாக அப்புரமே
தப்பாதே அப்பாலே தான்வைத்துச் - செப்பும் 357

பழுப்பினத்தை யூதிப் பகரவே யேழுதிறம்
தழுப்பாகத் தோய்த்திடவேதான் கேளு - நிழுப்பாக
எலிக்குஞ்சு தன்னிறமாம் யேத்தமாய்த் தானூதி
பலிக்கவே தோய்த்துப் பதமாகச் - சொலிக்க 358

தோய்த்து எடுத்துத் துப்புரவாய்த் தானுடைக்க
வாய்த்து அருந்திராய் வண்மையாய்ச் சாய்த்து
அதிக வெட்டையானா லது வுதவாது
கதிபெற வே வுட்டுகொள்கா ரீயமாம் - சதியாக 359

செய்து கொடுத்துத் தில்லாகச் சொல்லாதே
நையவே கைபாக நாடுவீர் - பைய
பழுத்தகனி தான் ருசியாம் பழுக்காத மாங்கனியே
தழுத்த ருசியாகாதயவிலது - வழுத்தி 360

செம்பை அரைவாசித் திட்டமாய்த் தான்கொன்று
வம்புலாம் வெள்ளிதனில் வாட்டியே - தெம்பாக
நாக்கு ஒன்று நலமாகச் செம்பொன்று
சாலமாய்ச் சேர்த்து ருக்கத் தானாகும் - போலாகும் 361

பொன்னிடை யே சேர்ந்துப் போடப் புடம்நாலு
தன்னிலே தானிறங்கும் தாரணியில் நன்னயமாய்
இருக்குமே பொன்னு ஏத்தமா யாணி
அருக்டம் பத்து வயதாகும் நருக்கும் 362

கைபாகஞ் சொன்னேன் காதலாய் நம்புவீர்
மெய் பாகமாக மிதிப்பாகர் - செய்பாகம்
பாகமே செய்தால் மயக்கம் ரசவாதம்
தேகம்போல் செய்து திடமாக - யோகமாம் 363

என்னைக் கிருந்தாலு மிருக்குமே காயம்
நன்னயமாய்க் கைபாகம் நாட்டவே - சொன்ன
படியாகச் செய்துபார் பலிக்கும் ரசவாதம்
கடிசெய்து யோகம் கனகமாம் - முடியில் 364

இவ் வேதை போல் வெங்குங்கிடையாது
செவ்வேதை வாதம் சிறப்பாக - மெய்வேதை
இருத்தி மனத்தை யேற்கவே செய்தால்
பருத்தியது பூத்த பரிவாகும் - நருத்தி 365

செந்தூரஞ் செய்தால் செய்வேதை தான்பலிக்கும்
வந்தூரப் பொன்னும் வளமாகும் - விந்தையாய்
லோகமெல் லாம்பழுக்கும் லோகாதி லோகம்
பரகமாய்க் கைபாகம் பத்துவீர் - தாகம் 366

எடுத்தால் குடிக்க இன்பமாய்த் தோணும்
அடுத்தால் ரசவாத மாகும் - தொடுத்தால்
எந்தவித மானாலும் இறுக்கி நசந்தன்னை
அந்தவிதம் பொன்னாக ஆகும் - சுந்தரமாய்த் 367

துருசுச் செந்துரஞ் சொன்னேன் பெருநூலில்
அருசு திரவகமும் அதில்விட்டு - வரிசையாய்
எரித்து எடுக்கஇனிய சிகப்பாகும்
பரிந்து கடுங்காரம் பாகமாய் - நிறுத்து 368

பூத்தரசங் சொன்னேன் பூதலத்தில் மானுடர்க்கு
நேர்த்தி யிடைபாகம் நேராகச் - சார்த்தி
யெடுத்து நிறுத்தி இனிய புகைநீரால்
அடுத்து அரைத்து அதிலடைத்துக் - கடுக்க 369

எரிக்கச் சிவப்பாகு மேங்கித் திரியாமல்
பரிக்க ரவிதன்னி லே பாச்சிவிடு - சரிக்கமாய்
மாத்துமே பத்தாகும் மயக்கமது நீங்கும்
சேர்த்து ரசவாதம் தெரியாமல் - பார்த்து 370

இருந்த சிவ யோகம் ஏறவே பாரு
அருந்தவே வாசியை நீ ஆற்று - பருந்தாகத்
திரியாதே யென்றுதேசத் தலையாதே
பரிகாச மாகவே பத்தாதே - வரியாக 371

செப்பினேன் உலாவிலே சேரவே கைபாகம்
தப்பியே போகாத தனைப்பாரு - இப்புவியில்
வாழ்ந்துபெருஞ் செல்வம் வல்லாண்மை யாய்ப்பாரு
சேந்து நவலோகஞ் சிறப்பாகும் - தாழ்ந்து 372

போகாம லப்பிரகம் போக் கோடே சொல்வேன்
தாகாமல் செந்தூரந்தான் பாரு - வாகாக
சத்திபுட நாதங்கான் சதா சிவன்தான் சொன்ன
பத்தியுடனே் யறிந்து பண்ணு - சித்தியாம் 373

## 356-373 உரை : செம்பை வெட்டை செய்து கொடுக்க

கழுதை நீரில் வெடியுப்பும் சீனமும் பொடித்துப் போட்டுக் குன்றிமணிப் பருப்பினையும் தூள் செய்து போட்டுக் குழப்பி வைத்துக் கொண்டு செம்பினைத் தகடு தட்டி எடுத்துப் பழுக்கக் காய்ச்சி அந்த " வெடிசீனக் கழுதை நீர்க்குன்றிமணிப் பருப்புக்குழம்பில்" தோய்த்துப் பார். எலிக்குஞ்சு நிறமாக இருக்கும். எடுத்து மீண்டுந் தோய்க்கும் நிலையிலிருந்தால் தோய்த்து உடைத்துப் பார். மிகுதியாக வெட்டையானால் ஆகாது. செம்பு செத்தும் சாகாமலும் இருக்கும்பதத்தில் எடுத்துக் கொள். வெள்ளியில் நாலுக்கு ஒன்று கொடுத்துத் தங்கமும் அதனெடை சேர். பத்து மாற்று. அதனைச் செந்தூரம் செய்தால் ரசவாதம் நன்றாகும். எப்படியாவது ரசத்தைக் கட்டிச் சேர்த்தலும் வேண்டும். முன்பு பெருநூலில் துரிசுச் செந்தூரம் சொன்னேன். அதில் திராவகம் ஊற்றி உலர்த்தி எரித்தால் மிகுந்த சிவப்பாகும். பூத்தரசமும் முன்பு சொன்னேன். அதனை இதனொடு சேர்த்து அரைத்து எரித்து எடு. மிக்க சிவப்பாகும். செம்பிற்கொடு. பத்துமாற்றாகும். வில். செலவிடு. வளிநிலை பார். அலையாதே. உலாவில் உண்மையுரைத்தேன். வாழ்ந்து பெருஞ்செல்வம் வல்லாண்மையாய்ப் பார். ஒன்பதும் சிறப்பாகும்.

### அப்பிரகச் செந்தூரம்

தங்கமய மாகும் தாய்சொல்ல யான் கண்டேன்
இங்கிதமாய்ச் சொன்னா ளிதமாகப் - பொங்கமாய்
அப்பிரகம் நாலுபலம் அடவாக வீரங்கால்
தப்பித மில்லாமல் நீதாக்கியே நட்புப் 374

பட அரைத்துப் பார்க்கப் பதமாக வெண்ணெய்யாம்
திடமுடனே தான்புடமும் தேறவே - அடவாக
எடுத்து அப்பால் வைத்து இன்பமாய்க் கேளு
தடுத்து ரசத்தில் திராவத்தை - விடுத்து 375

ஊத்தவே வுப்பாகும் வுண்மையாய் நாலுபலம்
நாத்திசையும் அப்பிரகம் நாலிலொன்று - சேர்த்து
அரைத்துத் திராவகத்தால் ஆட்டி வறுக்கப்
பரைத்துக் குப்பி தன்னில்பாகமாய் - வரைத்து 376

அடைத்து எரித்து எடு ஆன சிகப்பாகும்
துடைத்து மறுபடியும் சொல்லக் கேள் - நடத்த
அஞ்சுதிறம் தானெரிக்க ஆன சிவப்பாகும்
பஞ்சமில்லை பொன்னு பதமாகும் தஞ்சமாய் 377

யெடுக்க முருக்கும் இன்ப ரசவாதம்
அடுத்து ரவியிலிடு அன்பாகத் - தடுத்து
நூறுக் கொன் றிட்டால்நுழைந்துமே தங்கமாம்
பாரிலதிகம் பத்துமாம் - வாரு 378

வுப்புக்குங் காவியினி லோடாது தங்கம்
தப்பிதமி ல்லாமலே தானாகும் - இப்புவியில்
கைபாக மாகக் கருதினே னிப்புவியில்
மெய்பாக மாகஇனி வென்றுநீ - செய்பாகம் 379

விட்டுக் கொடுத்து விருப்பமா யில்லாமல்
பட்டுநூல் போல பதம்பாரு - செட்டாக
இருந்து ரசவாத மின்பமாய்ப் பாரு
நருந்தமிழை நாடி நலமாக - வருத்தி 380

தேசத் தலைந்து செய்யுங் கைபாகம்
ஆசையுடனே கேட்டு ஆதரவாய்ப் - பாச
பசியடைக்கி நின்று பதறாதே வாதம்
பிசகாமல் பார்த்துப் பிரியமாய் - நிசமாக 381

அப்பிரகச் சித்தை ஆரறியப் போரார்கள்
தப்பித மில்லாம லே தானறிந்து - இப்புவியில்
அறிந்து யெடுத்து ஆன நவநீதம்
பிறிந்து கைபாகமாய்ப் பேருவகில் - நறிந்து 382

புத்தியுள்ள வாதி கேள் புத்திரைப் போல
சத்தியமாய்ப் பாரு சதா சிவன்போல் - முத்தி
அறிந்து மே செந்தூரம் ஆதிநலமாகச்
செறிந்து புகை பாரு சீக்கறமாம் - பரிந்து 383

சித்திக்கி முத்தி தெளிவான ஞானம்
பக்திக்கி முக்திப் பதிவாகும் - சித்தியாம்
துருகச் செந்தூரம் துப்பரவாய்ச் செய்து
பரிசனமா யிரதம் பாய்ச்சுவர் - சரியாகும் 384

அண்ட கெவுனமாம் ஆதிசிவம் சொன்ன
தண்டப் பரிவழலைத் துப்புரவாய்ச் - சண்ட
ஆடுமே ஆட்டு ஆதிசிவன் சொன்ன
தேடுமோ துருசுநீறு சேர்க்கப் - பாடும் 385

ரசவாதமாகும் நன்மையுண்டாம் போகம்
பிசகு வாராம லேபித்தியே - நிசவாதம்
துருசுச் செந்தூரம் துடிய கிடையாட்டால்
பரிசாக அப்பிரகம் பாரு - வரிசையாய் 386

இரதமது கட்டு மின்பரசவாதம்
கரத மெனக் காட்டும் கனியாகும் - சுரத
நெல்லிக்கனியெல்லாம் நேரான தங்கம்
கொல்லமா சித்தர் போல் கூடுமாம் - நல்லாக 387

பொதிகை முனி போலாம் போக்கரிய ஞானம்
பதியான கண்ணுபோல் பாரும் - கெதிகொளவே
தேரர் போலாகும் தேத்தயிப்புவியில்
பாரமிலை ஞானங்கள் பத்துமே - காரம் 388

பாய்ச்சரங் கட்டுமே பாருலகில் மானுடர்கள்
பேச்சு வருத்தமிலை பேதமாய் - வாச்சு
இருந்திடவே யோகம் இன்பமாய்க் கேளு
நருந்திடவே ஞானம் நல்வழியாம் - பருந்து 389

ஏய்க்கும் ரசவாதமெப் படியாப் பாத்தாலும்
பாக்கியமாய்ச் செய்தால் பலிக்கும் - வாய்க்கும்
மனசை நிலைநிறுத்து வந்திடுமே வாதம்
கனதை பெறக் கல்வி களைத்தது - இனமாக 390

செய்க்குரம் போட்டால் சேர்ந்து விளையும்
நய்க்குரவால் சிந்தூரம் நாடுவீர் - மெய்க்கு
காய்சுத்தி பண்ணு கனதை பெறத்தானிருக்கும்
மாயமில்லாமல் வலதாக - நியாயமாய் 391

இருந்து ரசவாத மேத்தமாய்த் தான்பாரு
நருந்துஎடை தங்கத்தை நாடுவீர் - வருந்தினால்
எல்லாந்தான் வருகு மிருப்பா யிருந்தாக்கால்
நல்லாக வென்னவரும் நாடுவீர் - எல்லாம் 392

கருத்து வைத்தாலே தெரியும் கள்ளமடநெஞ்சே
யுருத்தாகத்தான் திரிந்தா லொக்குமோ - சிறுத்த
நாட்டி லிருக்காதே நன்மையா யன்றில்போல்
பாட்டுப் படித்துப் பதமாக - வேட்டில் 393

இருக்கு மதைப் பார்த்து இன்ப ரசவாதம்
பெருக்க நினைத்துப் பேதமா - யிருக்க

## 374 - 393 உரை அப்பிரேகச் செந்தூரம் :

அப்பிரகம் தூய்மை செய்தது நாலு பலம். வீரம் காற்பலம் சேர்த்து அரை வெண்ணெய் ஆகும். புடமிட்டு எடுத்துவை. திராவகம் ஊற்றிப் பூத்த ரசம் நாலு பலம் எடு. அதனொடு அப்பிரக வெண்ணெய் ஒரு பலம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வறுத்துக் குப்பியில் போட்டு எரித்து எடு. சிவப்பாக இருக்கும். இங்ஙனம் ஐந்துமுறை எரி. மிக்க சிவப்பாகும். செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. நுழைந்து பொன்னாகும்.

துரிசுச் செந்தூரம் செய்து அதனொடு ரசத்தைப் பாய்ச்சு. அது நலம் தரும். ரசம் கட்டும். துரிசுச் செந்தூரம் கிட்டாவிட்டால் அப்பிரகம் பார்.

387 - 393 அறிவுரை

## தங்கக்குரு

தங்கக் குருச்சொல் வேந்தப்பாது கைபாகம்
பங்கமில் லாமலே பற்றுவீர் - சிங்கம் 394

ஏமம் பலமொன்று ஏத்தமாய்ப் பொன்னிமிளை
ஆமமுருக்கி அதிலிடு நீ - சாமம்
கொடுக்க வுடையும் குணமாகத் தானரைத்து
படுக்கப் படமிட்டுப் பாரு - எடுக்க 395

ஓங்கிச் சிகப்பாகு முற்ற ரசவாதம்
பாங்கு பெறச் சொல்லுகின் றேன் பாரதனில் - ஆங்காணு
ரவிதனிலே பத்து நாட்டவே யேழாகும்
பவிதனிலே ஒன்று பத்தியே - கவிய 396

யெடுத்துப்பு தன்னிலிடு யேத்தமாய்த் தங்கம்
படுத்துப் புடமிறங்கும் பாரு - நடுத்து
ஞானம்பார் போகம்பார் நல்வினையும் போகும்
வானம்பார் புவியில் வடிவாகத் - தானம்பார் 397

பொன்னிமிளை தானிழைத்தான் பொன்போலத் தானாகும்
வன்னி வடி வாய் வாதாகும் - பின்னை
யேழைரச வாதிசெயு மேற்றமுள்ள பொன்னதுதான்
வாழைமட நெஞ்சம் வலுமையாய்ப் - பாழை 398

சொன்னது போல்செய்து தொகையாய் முடித்துப்பார்
அன்னதுபோல் கைபாகம்ஆண்மையாய் - பின்னை
சுட்டுத் திரியாதே தோசி போலெந்நேரம்
பட்டுப்பட்டுத் தேறிப் பதமாக - இட்டமாய் 399

வாதப்படா நெஞ்சே வல்லமையாய்ப் பண்ணு
சேதபடப் பணத்தைச் செய்யாதே - பாதகமாய்
சொல்லாத சொற்களையே சோம்பித் திரியாதே
நல்லாயொரு பொருளை நாடுவீர் - சொல்லா 400

பணத்தைப் பொன்னாக்கும் பார்தனிலே வித்து
க்ஷணத்தில் ரசவாதம் சீராய்க் - கனத்த
சரக்கை யெல்லாங் கட்டு சாங்கமாய்ப் பொன்னாகும்
துரக்குமே வாதந் தொடருமே - பரக்க 401

நடக்கா தேயென்று நன்மையாய்ச் சொன்னேன்
மடக்க ஒருசேதி பேதமாய் - அடக்க
மாகவே செய்தால் மயங்காமல் வாதம்
ஆகவே யேல் அது கேட்கும் - தாகமாய் 402

**394 - 402 உரை தங்கக்குரு**

ஒருபலம் பொன்னிமிளையையுருக்கி அதில் ஒரு பலம் தங்கமிட்டுப் பார். தங்கத்தைச் சிறிது சிறிதாகக் கொடு. உடையும் அரைத்துப் புடமிட்டுப் பார். சிவக்கும். செம்பில் பத்துக்கு ஒன்று கொடு. ஏழு மாற்றாகும். உப்புக்குள் வைத்து ஊது. புடமிறங்கி யோகம்செய். ஞானம்பார் (அல்லது தங்கம் உருகும்போது பொன்னிமிளையைச் செதுக்கியுள் சேர்க்கலாம். செய்து பார்.)

**398 - 402 அறிவுரை**

## செம்புச்சுண்ணம்

தாம்பூரம் நீத்தறாட்டி கமாய்ச் சொல்லுகிறேன்
ஆம்நல்ல வாதிஅறியக் கேள்- மாமாகேள்
செம்புமிக நீறிச் செயமாக ஆச்சு தென்றால்
தும்ப மற்ற பொன்னாகும் சோதியாய்ய - நம்பு 403

நீத்தல் + தாட்டிகமாய்ச்

இரதமது கட்டு மின்பரச வாதம்
கரதலத்தில் வந்திருக்கும் காணும் - சுரதம்
வருகும் ரசவாதம் வல்லமயமாய்க் கேளும்
தருகும் பலன்கள் தாட்சியில்லா - நருகும் 404

தைபாக மாய்ச் செய்தால் காரியமாம்நீறும்
மெய்பாக மாகவிருக்கு மே - நைபாகம்
செம்பைப் புளியிலைபோல் சேர்த்து மேதட்டி
நம்பரவச் சொல்லுகிறோம் நாடியே - தெம்பாக 405

வெடியுடனே சீனம் விரும்பியே தாளெடைக்குப்
படியாகச் சேர்த்துப் பதமாக - நெடிதாகக்

கழுதையுடன் கத்தம் கனக்க வேதான்பிழிந்து
பழுதுபடாம லே பக்குவமாய் - நழுகாமல் 406

குண்டுமணி தானிழைத்துக் கூட்டிக் குழப்பி
பண்டுசெய் செம்புக்கு மூன்றிடையாம் - கண்டு
எடுத்துக்குழம்பாக்கி யின்பமாய்க் கேளும்
அடுத்துச் செம்பைமின் னூத்தில் துவைக்கக் - கடுக்கக் 407

கரியில் வைத்தூதிக் காரணமாகத் துவைக்க
பரிகார மில்லாமல் பத்தியே - சரியாக
ஒடித்துமே பார்க்க ஒடியாதே போனால்
நடுத்து மறுபடியும் நாடியே - படுத்து 408

வெட்டை கொள்ளத்துவைத்து வேதாந்தம் அப்பொருளை
நிட்டை கொள்ள வெட்டையாம் நிர்மலாம் - செட்டு
எடுத்து உருக்காமல் ஏங்குமுகம் வாராமல்
அடுத்து மே ஆட்டெலும்பை அதில்வைத்துத் - தடுத்து 409

ரொம்பவே கீழ்மேலும் நேராகக் கொட்டித்
தம்பக்கச வுபுடமாய்த் தான்போடு - பம்பரமாய்
ஆத்தி யெடுக்க அடைவாகத் தானீறும்
பாத்திகளோ ரசவாதி பாகத்தை - சேர்த்து 410

வெளுக்காதே போனால் விரும்பியே பின்ணொன்று
தளுக்காக இல்லாமல் தான்பாரு - முழுக்க
விரமிட்டுத் தானரைத்து விதமாய்த்தான் போட
காரமாய்த் திராவகத்தால் காட்டியரை - பாரம் 411

தாம்பூரந் தானீறும் தாக்க ரசவாதம்
ஏங்காணு மென்றுஇது கேட்கும் - ஆங்காணும்

கண்ணத்தில் தாம்பூரச் சுண்ணமிது வாகும்

பண்ணத்த வாதிகளே பாகமாய்ச் - சொன்ன 412

## 403 - 412 உரை செம்புச்சுண்ணம்

கழுதைக் கத்தம் கொண்டு வந்து பிழிந்து வைத்துக்கொண்டு அதனுள் வெடியுப்பும் சீனமும் பொடித்துப் போட்டுக் கலக்குக் குன்றிமணிப்பருப்புத்தூளும் போட்டுக் குழப்பி வைத்துக்கொள். செம்பினைப் புளியிலைப் போல் தகமாகத் தட்டிக் கரியில்வைத்து ஊதி மின்னூத்தாகவூதும்போது எடுத்துக் குழம்பில் தோய்த்துப் பார். வெட்டையாகும் ஒடியும். ஒடியாவிட்டால் மீண்டும் நெருப்பில் வைத்து ஊதி எடுத்துக் குழம்பில் தோய்த்து வெட்டையாக்கு. (யூகி முனிவர் கும்மி 1000த்தில் 464 - 466 பார்). ஆட்டெலும்பைச் சட்டிக்குள் கீழே பரப்பிச் செம்பு வெட்டையை அதன் மேல் பரப்பி வைத்து மேலும் ஆட்டெலும்புபோட்டு மூடிக் கசபுடமிடு ஒழுங்காக நீறிவிடும். வெளுக்காவிட்டால் மீண்டும் ஒருமுறை புடமிடு. எடு வீரம்சேர். திராவகம் விட்டு அரை. வி.த.கா. புடமிடு. செம்பு சுண்ணமாகும். மாற்றுக்கலை ஏவல் கேட்கும்.

### தாமிரச் சுண்ணப்பயன்

படிபோட்டுப் பாரு பார்த்து எடுத்து

வடிவான சுண்ணம் வலுமைகேள் - படியாக

விராலி யிலைக்கிட்டு வடிவாகத் தான்பிழிய

கராலி யிலைதானாக் கனமாக - பராமுகமாம் 413

தண்ணீராய் நிற்கும் தாக்கு எடுத்து

புண்ணிய மாகவே புத்திகேள் - நண்ணி

அயக்க ரண்டிதன்னி லானையைத் தானிட்டுப்

பயப்படா முலிநீர் பற்றவே - நயப்படவே 414

விட்டுமே காய்ச்ச விரும்பியே தானோட்டம்
கட்டு நிரைத்துக் கனக்குமே - திட்டமாய்ச்
சூடனுட தீயில் துரிசாக வாட்ட
ஆடகமாய்த் தான்வெள்ளி ஆகுமே - பாடி 415

யெடுத்து மே செம்பட்டிலேத்தமாய்க் கோத்து
அடுத்துமே தாழ்வடமாய் ஆண்மையாய்ப் - படுத்து
கோத்துச் சிரசுதனில் கொண்டுமே போட்டு
பாத்து மே அஞ்செழுத்துப் பற்றுவீர் - சேர்த்து 416

உருச் செபிக்கும்போது உண்மையாய்க் கேளும்
பருச் செவிக்கப் பாக்கியங்கள் பண்பாய் - நருச்செவிக்க
மந்திரங்கள் மாரணங்களு மாகுமே சல்லியங்கள்
தந்திரங்கள் ஞானம் தழைக்குமே - பிந்தாமல் 417

எட்டெட்டுஞ் சித்தியா மேற்ற ரசவாதி
அட்டாங்க யோகம் அருளுமே - தட்டாதே
தொட்ட தெல்லாஞ் சித்திதொன்மை ரசவாதி
பட்டபா டெல்லாம் பலிக்குமே - வட்டமாக 418

தங்க வித்தையாகும் தாட்டிகமா யோகம்
பங்கப் படாமலே பாரு - உங்கள்
குலங்க ளீடேறும் குற்றமிக வாராது
தலங்க ளபிமானந் தாக்கும் - நலங்கள் 419

கட்டு கின்றதான் ரசத்தைக் காதல் கரிதனிலே
செட்டு மேதானுருக்கச் செயமாகும் - வட்டு
உருக்கவே நாலிலொன்று உண்மையாய்த் தங்கம்
பருக்க நாகத்தைப் பார்ச்சியே - வறுக்க 420

எடுக்கக் களங்காகு மேழைமதி போகாமல்
தடுக்கரவி நூறிலே தாக்கியெடு - நடுக்க
மில்லாத தங்கமா மிருக்குமே கேளும்
சொல்லா ரசவா தஞ்சுயம்பாகும் - நல்லாய் 421

தாம்பூர பற்பமதை தாக்கப் பணவெடைதான்
வாம்பூர குன்மம் வகையாகும் - சோம்பல்
இருந்த நோயெல்லா மிருப்பிடத்தை விட்டு
அருந்த வேபோகும் அடைவாகத் - திருந்த 422

செம்பதுதா னீற்றுச் செயமான வாதமாம்
அம்பொன்ற நவலோகம் அடைவாக - நம்பும்
பழுக்குமே யென்று பதிவான கைபாகம்
மழைக்குமே போகா தனைப்பாரு - திழுக்க 423

**413 - 423 உரை :**

தாமிரச் சுண்ணத்தை விராலியிலையிலிட்டுப் பிழிந்து கரண்டியில் விட்டு ரசம் ஊற்றிக் காய்ச்சு ரசம் கட்டும். சூடனின் தீயில் வாட்டித் துளைத்துச் செம்பட்டில் கோத்துத் தாழ்வடமாகவும் தலைமா லயாகவும் அணிந்து கொள். ஐந்தெழுத்தோத எல்லா வன்மையும் உண்டாகும். 64 வன்மையும் உண்டாகும். கட்டின ரசத்தை உருக்கி நாலில் ஒன்று தங்கமும் நாகமும் சேர்த்துக் களங்காக்கிச் செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. தூய தங்கமாகும். ஒன்பதும் பழுக்கும். செம்பு நீற்றால் குன்மம் முதலியன நோயெல்லாம் ஓடும்.

## வாதிகள் செய்கை

வகையறியார் வாதி வல்லமையைப் பேசி
நகையாகத்தானகைத்து நாணுவார் - பகையாக

செம்பும் அதன்நிறமே செயமாகப் போகுமே
நம்பி ரசவாதம் நாடுமே - இப்புவியில் 424

வாத மென்றாலெளிதோ வாய் வாதமாகும்
பேதப் படாமலே பேசுவார் - பாசமாய்
அலைந்து உலகில் ஆடித் திரிந்து
அலைந்து வெகுமலைகள் கத்தியே - யலைந்து 425

கூடாத பேருடனே கூடித் திரிந்து
ஆடாத சத்திபூசை ஆர்ப்பரித்து - நாடி
கும்பிட்டுப் பாத்திரத்தைக் காட்டிக் குடித்து
வம்பிட்டுச் சண்டைக்கி வாய்ப்பட்டுத் - தெம்பிட்டு 426

ஆடாத கூத்தெல்லாம் ஆடித் திரிந்து
பாடாத பாடெல்லாம் பாடியே - தேடி
லேகியங்கள் தின்று நினைவழிந்து இருமல்மிஞ்சி
பாழிலே வீணாப் பலங்கெட்டுப் - போகி 427

யெல்லார்க்குங் கள்ளரா யேழ்பிறப்பும் தீதாகி
பொல்லாப்புப் பட்டுப்புலம்பியே - வல்லாய்
திரியமால் தாம்பரத்தைச் சீர்தூக்கி நீத்திப்
பெரிதாய் ரசங்கட்டிப் பேசு - விரிவாக 428

**424 - 428 உரை :**

சத்திபூசை செய்து குடித்துச் சண்டை இட்டு எல்லோர்க்குங் கள்ளராய் ஏழ்பிறப்பும் தீயராய் ஆகாதே.

**வங்கச்சுன்னம்**

வங்கத்தைக் கைபாக மாகவே சொல்லுகிறேன்
சிங்கமெனை நீத்தச் செயலறிநீ - உங்கள்

குலதெய்வம் போல குறிப்பாய் நினைத்து
அலையாமல் வங்கம் அதில்நில்லு - கலையாமல் 429

வங்கத்தைக் காய்ச்சி வளமாக வேழுதிறம்
சிங்கமெனத் தோய்க்கச் சொல்லக்கேள் - பங்கப்
படாமல் வெடியுப்புப் பாணியால் தானரைத்துத்
தகடா குழம்பில்தான் தோயாய் - வகடாக 430

துவைத்துமே யேழுதிறம் தோய்த்துமே பார்த்துத்
தவத்துமே புண்ணாக்குத் தானுள்ளே - கவுத்து
மூடிக் கசபுடமாய் முக்கியமாய்த் தானிடவே
ஆடியே சங்கு போலாகிவிடும் - தேடி 431

யெடுத்துமே சொல்வே னிதமாகக் கேளும்
அடுத்துமே காரமதில் சேர் - தடுத்து
சீனத்தை யூதச் செயமான சுண்ணமாம்
கானொத் திவ்வெடைக்கிக் காட்டியே - யேனோதான் 432

அரைத்துரவி காயவைத்து அன்புடனே அஞ்சு
துரைத்துச் சுண்ணங் கீழ்மேலுமிட்டுமே - நிரைத்துப்
புடமிட் டெடுக்கப்பேர்பெரிய சுண்ணமாம்
நடமிட்டனு போக நாடுவீர் - திடமாக 433

தங்கமது நீறும் தாளகமும் நீறும்
பங்கமாய்ச் சாரமது பாவிக்கும் - சிங்கம்
வருகுமுன் னேபட்டு வகையாகத்தான் கட்டும்
தருகுஞ் சிவயோகம் தானாகும் - பருகும் 434

போகாத வாதத்தைப் போக்கேடே சொல்ல
வாகாத வங்கத்தை வைத்தூது - காகாத

வெல்லாமு மாகு மின்ப ரசவாதம்
சொல்லால் பெரியோராய்ச் சொல்லுவார் - நல்லார் 435

அடிமரத்தி லேறி அடைவாகத் தொத்தினால்
முடிமரத்தி லேறலா முண்மையாம் - படியாக
இருந்தால் நடந்து இன்பமா யேறி
வருந்தாக வுச்சிதனி லேறலாம் - முருந்தா 436

வங்க மென்ற சொல்லை வகையாகக் கைபாகம்
சிங்கமென்ற ராசனைத்தான் சிக்கியே - பொங்கப்
பாகப்படியே படிவித்துச் செய்து
தாகமாய் வங்கத்தைத் தான்பாரு - யோகமாய் 437

தாம்பூரஞ் சொன்னேன் தாக்கவே வங்கத்தை
வாம்பூர வைபாக நாடியே - நாம்பூர
ரசங்கட்டச் சொன்னேன் நாடியே கைபாகம்
தசம்கட்ட நன்றாகக் காரு - வசமாக 438

## 429 - 438 உரை : வங்கச்சுண்ணம்

வெடியுப்பைப் பாணி விட்டரைத்துக் குழம்பாக்கி வைத்துக்கொண்டு ஈயத்தைத் தகடாக்கிக் காயவைத்து அதில் ஏழுமுறை தோய்த்து எடுத்து ஒரு சட்டியினுள்ளே எள்ளுப் பிண்புக்குப் போட்டு அதனுள் தகட்டை வைத்து மேலும் பிண்புக்கிட்டு மூடிக் கசபுடமிடுக. சங்குபோல் வெண்மையாக நீறும் அதனொடு வெண்காரம் சேர். சீனத்தையூதிச் சுண்ணமாக்கி அதனெடை சேர் அரைத்துக் காயவைத்துக் கீழும் மேலும் சுண்ணமிட்டு நடுவில் வைத்துப் புடமிட நல்ல சுண்ணமாகும். இதனால் தங்கம் தாளகம் சாரம் நீறும், வங்கமும் நீறும், ரசம் கட்டும். ரசவாதம் உறுதியாகும்.

## 435-438 அறிவுரை

## நாகச்சுன்னம்

நாகத்தை நீத்த நலமறியச் சொல்லுகிறேன்
பாகமாய் நாகத்தைப் பார்த்ததுமே - யாகமாய்ப்
பொரும லடங்கப் போக்கோ டிலுப்பெண்ணெய்
தரும லிருபத்தொரு கால்சாய்த்துமே - வருமம் 439

சாய்த்துமே தானெடுக்க சாத்தியே கண்ணடங்கும்
பாய்ச்சுமே வுருக்கிப் பதமாக - தோய்ச்சுப்
பொடியாக இட்டுப்பேர் பெரிய வீரத்தை
அடிவாகக்கால்வாசி அதிலிட்டுப் -படியாக 440

அரைத்து வில்லைகாய அளம்பாக் கிளிஞ்சற்
றரைத்துட னேபோட்டுள் ளேதான்புடமாம் - பரைத்துப்
புடமிட்டெடுக்கப் பேர் பெரியசுண்ணமாம்
தடமாக வீரங்கால் தாக்கியே - நடமாட 441

அரைத்துத் திராவகத்தால் அன்பாகத் தங்கம்
கரைத்துத் தகடதனில் கட்டியே - உருக்கப்
புடமிட்டெடுக்க பேறான தங்க நீறு
தடப்பட்டுச் சுண்ணம் தண்மையாம் - நடமிட்டு 442

எடுக்கக் குருவாகு மின்பரளி தன்னில்
அடுத்து ஐம்பதுக்காகு மாணியாம் - படைத்துக்
காஞ்சனமு மாகும் கடிய நவலோகம்
தாஞ்சமில் லாமலே தான்பழுக்கும் - வாஞ்ச 443

நாகம்போலே வேதை நலமாகக் கண்டதில்லை
பாகமா யுன்மனசு பத்தியே - நாக
சணபேதியாம் நாகம் சத்தமுதல் தங்கம்
பணபேதி யாகும் பரிசுதான் - சீனபேதி 444

**439-444 உரை :**

நாகத்தை இலுப்பெண்ணெய்யில் 21 முறை உருக்கிச் சாய்த்திடுக. பொடித்து வீரம் காறபங்கு சேர்த்து அரைத்து வி.த.கா. கிளிஞ்சல் நீற்றுக்குள் வைத்து பெரும் புடமிடுக. சுண்ணமாம் அதில் காறபங்கு வீரம் சேர்த்துத் தங்கத்தகட்டிற்குப் பூசுக. புடமிடுக. தங்கம் நீறும். செம்பில் ஐம்பதிற்கு ஒன்று கொடுக்கத் தங்கமாகும். சணபேதிபணபேதி சத்தபேதியாகும்.

## வாதிகள் புரட்டு

சோரத்தைக் கட்டவே துப்பரவாய் வாதி
ஆரத்தைப் போலே அலைகுவார் - நாரொத்த
ஊரமஞ்ச ளோடும் உழன்று திரிந்து
பாரமில்லை யென்றுலைந்து பாவிப்போர் - நாரம் 445

கட்டுப்பாடா நாகத்தைக் காட்டிச் சிறிதுபோர்
பட்டுப்படாகப் பதைப் போரும் - செட்டுச்
செம்புதனிற் கெடுத்தச் செயத்தங்க மாச்சுதென்று
வம்புக்காய் வாதி யனைந்தோரும் - தெம்பாகச் 446

சுட்டுக கரியெடுத்துச் சோம்பலாய்க் கொட்டிப்
பட்டு அலைந்து பகர்வோரும் - செட்டியாய்
நாணயங்க ளில்லாமல் நாடிய லைவோரும்
பானமென்று கள்குடித்துப் பாரிலே - ஞானம் 447

போலே யிருந்தும் புலம்பித் திரிவோரும்
ஆலயங்கள் தேடி அலைவோரும் - பார்தனிலே
மெளன மாயிருந்து மாட்டி யுலகத்தை
தவனமாகக் கொடுத்துத் தான்பணத்தைக் - கவனமாய் 448

பணங்கள் தந்தால் வாதம் பாவிப் போமென்று
சுணங்கள் போல கடிக்குந் தோசிபோல் - இணங்க
பல்லாக்கி லேறிப் பதிய மவுனமாய்
எல்லாந் தெரியுமென்று ஏங்கியே - சல்லாபச் 449

சீசன் கையிற் பணத்தைச் சீக்கிரமாய் வாங்கித்
தாழப் புதைத்துத் தவிப்போரும் - நாளாக
ஆகட்டுமென்று சொல்லி அலைய வைத்துப்
பாகமில்லை யென்று பதைப்போரும் - தாகமா 450

யிப்படியே சொல்லி யிதமாய்த் திரியாமல்
மைப்படியும் நாகத்தை வளமாக - வெப்படியும்
நீத்தியே தங்கம் நிர்ணயமாய் மேலே
ஆத்தியே கட்டு அடைவாகப் - பார்த்துத் 451

தங்கத்தை நீற்றினால் தங்க மதுவாகும்
பங்கப் படாமலே பற்றுவீர் - சிங்கம்
புதைய விருந்தால் போக்கோடே தானப்பாம்
வதையாகத் தானிருக்கும் வண்மையா - யிதையாகப் 452

**445 - 452 அறிவுரை**

## வெடியுப்புச் சுண்ணம்

பொட்டளையின் வேதை போக்கோடே சொல்வேன்
கட்டளையாய் நம்பிக் கருத்தாகப் - பொட்டல்
வெடியுப்பு அஞ்சு விளங்கியதோர் சீனம்
அடியான அஞ்சு அடைவாகப் - பொடியாக 453

அரைத்துப் பழசாற்றல் ஆனவில்லை கட்டிப்
பரைத்துக் கரியில்வைத்துப் பக்குவமாய் -நிரைத்து

ஊதினால் நீறும் உள்ளபடி பூக்கும்
பாதியே வீரமுடன் பத்தியாய் - வாதியாய் 454

அரைத்துத் துரிசியின்மேல் அப்பிக் கனமாக
நிரைத்து நெருப்பில் நேராகப் - பரைத்து
அண்டவே வாட்டி அடுக்காக உப்புச்சுண்ணம்
சுண்டவே மண்ணதுவும் சுவறவே - முண்டாகச் 455

செய்து புடம்போடு சிறப்பாகக் குருவாகும்
நைது வெள்ளி தன்னிலே நானாலு - பைய
ஒன்று கொடுக்க வுண்மையா யேழாகு
நன்றுப்புக் காவிக்கும் நல்குமே - பன்று 456

உழுது பயிரிட்டால் ஓங்குமே வெள்ளாண்மை
அழுது புலம்பினா லாகுமோ - முழுதும்
சோதித்தால் தோணுஞ் சொற் பெரியவாதம்
பாதியே பார்த்தால் பலனாமோ - நீதியாய் 457

ஒருதிறந்தான் தப்பினால் ஒத்துமே பார்த்து
இருதிறந்தான் சோதித்தா லெய்துங்காண் - மறுதிறந்தான்
பார்த்தாக்கால் தோணும் பதையாமல் நெஞ்சே
சேர்த்தாக்கால் தோணும் செயமாகும் - பார்த்து 458

எரிப்புத் தவறாம லேத்தமாய்ப் போகாமல்
அரைப்பு அதிகம் அரைக்காமல் - சரியாய்
குப்பி யிடையாமல் குப்பிக்கிச் சீலைமண்
அப்பியே பேர்ந்து அலையாமல் - இப்புவியில் 459

ஊத்துக் குறையாமல் உள்ளபடி பாரு
நேர்த்தியாய் நீத்தினத்தை நேராகப் - பார்த்து
அவசரத்தைக் காட்டாமல் ஆதரவாய்ச் செய்து
தவமுடனே நிரையாய்ச் சாத்துவீர் - பலசரமாய்க் 460

குப்பிக் கரைவாசி கூட்டி மருந்துவகை
தப்பிதமில்லாமலே தான் போடு - இப்புவியில்
கூட்டங்கள் பண்ணாமல் கூடித் திரியாமல்
ஆட்டங்கள் பண்ணி அலையாமல் - தேட்டாகக் 461

கைமுறைகள் தப்பாமல் காதலாய்ப் பாரு
மைவிழியாள் மேலாசை வைக்காமல் - செய்முறைகள்
செய்து எடுத்துத் திறமாய்ச் சரக்கினுட்
பய்து வலுவைப் பதம்பாரு - பைய 462

**453 - 462 உரை :**

வெடியுப்பும் சீனமும் வகைக்கு ஐந்து பலம் பொடித்துப் பழச்சாறு விட்டரைத்து வி.க.கா. ஊது. சுண்ணமாம். அந்த எடைக்குப் பாதி வீரம் சேர்த்து அரைத்துத் துரிசின் மேல் அப்பி வாட்டி உப்புச் சுண்ணக் கவசங்கட்டிப் புடமிடக் குருவாகும். வெள்ளியல் பதினாறுக்கு ஒன்று கொடுக்க ஏழுமாற்றாகும். உப்புக்கும் காவிக்கும் புடமிறங்கும்.

457 - 462 அறிவுரை

### நாகரசகுரு

கூட்டி முடித்துக் கொடியதொரு செல்வம்
ஆட்டிப் படித்து அடைவாகத் - தாட்டிகாமாய்
நாக ரசக்குருவை நாட்டுகிறோ முலாதனிலே
பாகமாக் கைபாகம் பார்த்துமே - தாகமாய்ச் 463

சுத்திசெய்த நாகம் சுயமாய்ப் பலம்அஞ்சு
பத்தியாய்ச் சண்டரசம் பலமஞ்சு - முத்தியாய்
உருக்கியே தானூத்து உண்மையாய்ப் பிட்டாகும்
நருக்கியே வீரரசம் நாலிலொன்று - முருக்க 464

அரைத்துத் திராவகத்தை அதிலிட்டுப் பார்த்துத்
தரைத்துவிட்டு வைக்கவே தான்பூக்கும் - நரைத்து
எடுத்துக் குப்பி தன்னிலின்பமாய் நாலு
அடுத்து எரிக்க அதிசிவப்பாகும் - படுத்து 465

ஏமத்தை யெட்டிலொன்று இன்பமாய்ச் சேர்த்து
ஆமத்தைத் திராவகத்தா லாட்டியே - சேமம்
வறுத்துக் குப்பிதன்னி லடைவாகத் தானெரிக்க
நறுத்த செந்தூரம் நாடியே - மறுத்த 466

நூறுதான் செம்பு நுண்மையாய்த் தானுருக்கிப்
பாருதான் ஒன்றிடவே பத்துமாம் - சேரு
இருக்கும் ரசவாத மேத்தமாய்க் கேளு
நருக்குமே தங்கம் நலமாகும் - பருக்க 467

நாகரசந் தான் குருவைநாடி ஒளித்தார்முனிவர்
பாகமாய்ச் சொன்னேன் பதிவாக - யோகமாய்ச்
சித்தர் சொன்னநூ லைத் திரட்டி வுலாதனிலே
பத்தியாய்க் கைபாகம் பாடினேன் - முத்தியாய் 468

ஓங்கும் பெருஞ்செல்வம் ஓதரிய பாகமாய்ப்
பாங்குபெற வுலகம் பதிவாகத் - தாங்கியே
நாகத்தைச் சொல்லி நாட்டினேன் பாகமாய்த்
தாகமாய்க் கண்டு தடையறவே - பாகமாய்ச் 469

செய்து முடித்துத் திறமாகத் தங்கத்தைப்
பைது முடித்துப் பதம்பாரு - வையம்
வேண்டுமே உண்ண விருப்பமாய்க் கண்டு
தூண்டுமே வுன்னைத் தொடருமே - வேண்டுதலை 470

செய்யும் உலகம் செப்பரிய ஞாலம்
பைய வருமென்னவே பாரு - வுய்வு பட
வாதத்தை விட்டாக்கால் வடிவில்லை ஞானம்
சேதப் படவுலகில் சிக்கியே - பாத 471

எல்லார்க்குங் கள்ளராய் ஏழ்பிறப்புந் தீதாக
நல்லாய் பெருந்திருட னாகியே - சொல்லா
திருக்குமோ லோகம் திருக்காகத் தான்மையும்
செருக்குமே கைபாகம் செய்குவாய் - நிரைத்துத் 472

துரிசைநீ பார்த்துத் துப்புரவாய் ஏறி
நரிசையாய் இரதத்தை நாடியே - பரிசையாய்க்
கெவுன சித்தனாகிக் கெடப்படவே வாழ்ந்து
தவனமுடன் யோகமெனத் தான் பார்த்துப் - புவன 473

சக்கரத்தைப் பாரு தடையறவே யோகம்
பக்கமுள்ள செந்தூரம் பண்ணி - மிக்க
இராசயோ கம்பெற்று இன்பமாய் வாழ்ந்து
தராசெனப் பாக்கியம் தாண்டியே - வராசை 474

இருக்கும் அயந்தனையே யின்பமாய்ச் சொல்வேன்
பெருக்க நினைமனமே பேசுவீர் - உருக்க
இரும்பென்றால் எளிசாய் இனியதங்க மாகிவிடும்
அரும்பென்றால் உள்ளே அசைவாய் - தரும்பார் 475

## துரிசு அயச்செம்பு

செய்து முடித்தால் செயமாகும் வாதம்
நைது தனியிரும்பை நாடுவீர் - பைது
அயமதனை ராவியே அன்பாகப் பத்து
நயமாக செங்காரம் நாடியே - பயமாகப் 476

பழச்சாறு விட்டுப் பக்குவமாய்த் தானேழு
நழச்சாறு நாளேழு ஆட்டியே - பழச்சாறு
ஆட்டி யரைத்து அம்பாக மெல்லத்
தாட்டிகமாய் மேல்சட்டை தானுருக்கி - வாட்டி 477

எடுத்து மணியாக இன்பமாய்த் தூரவைத்து
அடுத்து அதின்மேல் அறையக்கேள் - தடுத்துக்
கெந்தி பலம்முக்கால் கிருபையுள்ள சூடனரை
அந்திபலம் கால்வீ ரம்மரைக்கச் - சுந்தரமாய் 478

அரைக்கத் திராவகத்தால் ஆட்டமெழு காகும்
நிரைத்த துரிசுபலம் நேராகப் - புரைக்கக்
கண்டாமே யச்சத்தைக் காட்டி யிதன்பேரில்
துண்டா விதனிலே தூக்கியே - பண்டாகக் 479

காயவைத்து மேலே கட்டாயம் கெந்தியைத்தான்
பாயமாய்க் கூட்டி நல்லபக்குவமாய் - நேயமாய்
சுண்ணாம்பு செய்து சுருக்காக மண்கவசம்
நண்ணாகச் செய்து இனிநட்டுவீர் - பண்ணாக 480

எடுத்துக் கசபுடத்தில் இன்பமாய்ப் போட்டு
அடுத்துமேல் கவசமதைத் தள்ளிப் - படுத்து
உருக்க ரவியாகும் உண்மையாய்ப் பத்திலொன்று
நருக்கா மதிதனிலே நாடியே - பருக்க 481

மாற்றுமே ஏழாகும்வையகத்தோர் போற்றுவார்
சாற்றும் அயச்செம்பு தான்வேதை - பார்த்து
இதுலருவு சொன்னேன் ஏத்தமுள்ள வாதிகளே
அதுலகுவாய் அயத்தை அன்பாகப் - பதுலகுவாய்ப் 482

பார்த்தால் தெரியும் பதிய அயந்தன்னைச்
சேர்த்தாலே பொன்னும் செயமாகும் - நேர்த்தியாய்
அயச்செம்பு செம்பாய் அடைவாகத் தானெடுத்தால்
பயப்படாச் சீனங்கள் பண்ணலாம் - நயப்படவே 483

யென்று முனிவ ரியம்பினார் சொல்லி
அன்று முனிவர நேகமாய்ச் - சென்று
படித்தார நேகபுத்தி பத்தியா யெல்லாம்
தடுத்தாண்டு கொண்டார் தயவாக - வடியாய் 484

யூகிமுனி சொல்லை யுற்றுக்கேள் நெஞ்சே
பாகிமுனி யென்று பலம்படைத்து - ஏகிமுனி
அண்ணா மலையி லடுத்தகரு நெல்லிதனில்
பண்ணார் தபசு உடன்பாவித்து - நண்ணாய் 485

மரத்தடியில் வீற்றிருந்து வல்லமையாய்ப் பாடிக்
கரத்தட்டில் சொன்ன கருத்துக் கேள் - வரதாகச்
சொன்னேன் பெருநூலுஞ் சோதிபெறவாதம்
நன்னனயமா யந்நூறு நல்கினேன் - பன்னகமாய்ச் 486

சிங்கிருப்புச் சொன்னேன் சிறப்பாக மன்னூறு
அங்கமாய்ப் பாடி அரங்கேத்தித் - தூங்க
வகுப்பு முப்பத்திரண்டு வகையாகப் பாடி
தகுப்பாகக் கைபாகம் தாக்க - நகுப்பாக 487

வுலாவிலே சொன்னேன் உண்மை ரசவாதம்
பலாபலங்க ளெல்லாம் பகர்ந்தேன் - நலமாகத்
கைபாக மெல்லாம் காதலாய்ப் பாடி
மெய்பாக நல்ல விபரமாய்ச் - செய்பாகம் 488

## 463 - 475 உரை. நாகரசகுரு

தூய்மை செய்த நாகம் ஐந்துபலம் சண்டரசம் ஐந்துபலம் உருக்கி ஊற்று. பிட்டாகும். வீரரசம் நாலிலொன்று சேர்த்து அரைத்துத் திராவகத்தை விட்டு வைக்கப் பூக்கும். குப்பியிலிட்டு நாலு யாமம் எரிக்கச் செந்தூரமாகும். எட்டிலொன்று தங்கம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துக் குப்பியிலடைத்து எரி. நல்ல செந்தூரம் நூற்றுக்கு ஒன்று செம்பிலிடு. பத்துமாற்று.

468-475 அறிவுரை

## 476 - 488 உரை துரிசு அயச்செம்பு

அரப்பொடி பத்துப்பலம் அதனெடை வெங்காரம் சேர்த்து ஏழுநாள் அரை. உருக்கு. மணியாகும். எடு. கெந்தி முக்கால் பலம் சூடன் அரைப்பலம் வீரம் காற்பலம் இம்மூன்றும் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து மெழுகாக்கு. அயச்சத்தும் கண்டரும் சேர்த்தரைத்து உருட்டிக் காயவைத்து அதன்மேல் மெழுகைப் பூசிக் காயவைத்துச் சுண்ணாம்புக் கவசமிட்டு அதன்மேல் மண்கவசமிட்டுக் கசபுடமிடு. எடுத்து உருக்கு. செம்பாகும். வெள்ளியில் பத்துக்கு ஒன்று கொடு. மாற்று ஏழாகும்.

483-488 அறிவுரை

### பூகிமுனிவர் அகத்தியர் தேரையர் முதலிய சித்தர்களைக் கண்டது

அகத்தியனார் கேட்டு ஆனதொரு நன்னூலைத்
தகத்துடனே கேட்டுத் தடுமாறா - வகுத்துக்
கேட்டுக் கிருபைசெய்து கேள்விகள் தான்செய்து
பாட்டுக் கொருபா கம்பரிந்தார் - நாட்டு 489

உலகத்தெல் லோரு முன்மையாய்த் தான்பிழைக்கக்
கலக்கப் படாமல் கருணையாய் - நலமாகத்

தேரையரைக் கண்டு தெளிந் தேன் தெரிவையர்போல்
ஆராரு என்றார் அவரைநான் - பேராகப் 490

பாதம் பணிந்தேன் பரிவாக யூகிமுனி
பேதமிலா யூகிமுனி பேர்பெறவே - போதம்
உருவாவா யென்றா ருண்மை யவருரைப்பச்
சுருதிபோலே நின்றே னுண்மையாம் - பருதி 491

சித்த ரெல்லாம்வந்து சிறப்பாக வாதத்தை
அத்துடனே கேட்டார் அறிவாகப் - பித்தாய்
சொன்ன மொழியெல்லாம் சொற்பெரிய தேனாகும்
கன்னல்மொழி கரும்பு கண்டேன்காண் - நன்னயமாய் 492

துரிசதுவுஞ் சொன்னேன் சுருக்கமாகக் கேட்டார்
தெரியபடச் சொன்னேன் சிந்தையாய் - வரிசையாய்
கைபாகஞ் சொன்னேன் காதலரேயிப் போ
மெய்பாகம்நாட மிகப்பார்த்தேன் - செய்பாகம் 493

489-493 அறிவுரை

## இரசங்கட்டத்துருசுகுரு, அகத்தியர் முறை

சொன்னேன் துருசுநீர் சோதி ரசங்கட்ட
நன்னயமா கப்புவியில் நாடுவீர் - சொன்ன
துரிசைத்தான் சொல்வேன் துடியான கைபாகம்
வரிசையாய்ச் சொல்வேன் - வகைபாரு 494

சொல்வேன் சயசுண்ணம் தொல்லுலகிலெல்லோரும்
நல்லே னுனதடுமை நாடியே - செல்வம்
வருத்தத் துரிசைநீ வைத்துமே பாரு
பருகுமே வாதம் பலிக்குமே - செருக 495

பூநீறு பலம்பத்துப் பூட்டவே கேளும்
ஆநீறு திராவகம் அதிற் போடு - வானோர்
போலுமெனத் தான்கரையும் போகமாய்த் தான்வறுத்து
ஆலுமென வுப்பாகும் அதில் வேதை - சீலைபோல் 496

வீரம்பூ ரம்போட்டு விருப்பமாய்த் தான்கலக்கி
ஆரமாய்க் குழம்பு அடைவாகும் - பாரம்
நீரில் கலக்கி நிலவரமாய்த் துரிசுபலம்
பால ரவியில் பத்துநாள் - பாரில் 497

உலர வைத்து மேலே ஓங்கினதோர் வெள்ளீயம்
அலரக் கரண்டி அதில்போட்டுக் - கிளர
வுருக்கி வெடியுப்பு வுண்மை எடை சாகமட்டும்
நருக்கி பொடி போட்டு நாடியே - பெருக்க 498

எடுத்துமே கொட்டி யினிதான சீனமது
அடுத்து உலர்த்தி அதிற்பத்தி - கடுத்துத்
திராவகத்தை விட்டுத் தளர அரைத்து வில்லைப்
பராமுகமாய் ரவிதனிலே பாகமாய் - நிராமுகமாய் 499

காயவைத்துக் குக்குடத்தில் காட்டுமுன் னேநீறும்
பாயமாய் முன்துருசில் பதிவாக - நேயமாய்க்
கட்டி வலுக்கக் காடைப் புடம்போட
முட்டி வெள்ளையாதி முடிவாகும் - வட்டி 500

வங்கம் வந்தவிடத்தில் வலுவாக வீரமிடு
துங்கத்துரிசு மேற் சூட்டுவீர் - பங்கம்
துருசு சயகுருவாம் துப்பரவா யாகும்
பருசன மாம் வேதை - பகரு 501

யெடுத்து விராலி யிலைக்கிட்டுப் பிழிந்து
படுத்து மேதண்ணீர் பதுவாம் - நடுத்துப்
புண்ணியமாங் கரண்டி போட்டு ரசந்தன்னை
நண்ணியே விட்டு நலமாகக் - கண்ணியமாய்க் 502

காச்சவே யிட்ட லியாம்காதலாய்த் தானுருட்டிப்
பாச்சவே சூடன் பதிவாக - ஏச்சக்
கொழுத்திவிட்டு வாட்டக் குணமாகக் கட்டும்
பழுத்திடுந் தங்கமாம் பாரு - முழுக்கச் 503

சோதித்தால் தான்வருகும் சொற்பெரிய வாதம்
பாதிமதி யணிந்த பரமனார் - நீதி
தங்க மொன்று நாகமொன்று தாக்கிவுருக்கிச் சேர்
பங்கமுள ரசத்திற் பாச்சியே - சிங்கம் 504

அரைத்து எரிக்கக் குப்பி ஆண்மையாய்த் தான்சிவக்கும்
பரைத்து மிகச் சிந்தூரம் பாகமாம் - பரைபோல்
இருக்குமிகச் சிவந்து இன்பமாய்த் தோன்றும்
பருக்கு மெடுத்துப் பதம்பாரு - பொறுத்து 505

யெடுத்துரவி முன்கி லின்பமாய்த்தான் கொடுக்கப்
படுத்ததங்க மாத்துப் பத்துமாம் - நெடுத்து
இப்படியே வாதமிருக்கும் வகை சொன்னேன்
எப்படியும் பாக மறவாதே - யெப்படியும் 506

வாதங் கிடைக்கும் வலதாகச் சொன்னாக்கால்
சேதம் வருமென்று திரமாக - வேதம்
சொற்படியே சொன்னேன் சோதி ரசவாத
மெப்படியும் வந்து இதமாகச் சொற்படிக்குத் 507

துருசுசுண்ண மாகும் சுயமாய் ரசங்கட்டும்
பரிசன வேதையாம் பாரு - வரிசையாய்
புரண்டு துரிசைத்தான் புரண்டுழன்று பாரு
வரண்டு ரசத்தை வலுவாகும் - திரண்டு 508

எப்படியும் கட்டும் யேழைமட நெஞ்சே
தப்பித் திரிந்து தவியாதே - இப்போ
ரசத்துக்கு ஏழு நலமாகச் சட்டையுண்டு
விசையாகச் சட்டை விருப்பமாய்த் - திசையாகக் 509

கட்டக் கேள் வாதிகளே கனமான துருசுநீறு
முட்டக் கேள் செய்தால் முதலாகும் - சிட்டர்களே
யேங்கித் தவியாம லின்பமுள்ள தான்துரீசை
பாங்காகப் பார்த்துப் பதம்படுத்துத் - தாங்கி 510

**494 - 510 உரை :**

பத்துப்பலம் பூநீற்றைத் திராவகத்தினுள்ளே போடு. கரையும். வறு. உப்பாகும். இந்த உப்பும் வீரமும் பூரமும் திராவகத்தில் போட்டுக் கலக்கிக் குழம்பாக்கு. இதில் துரு பலம் கலக்கி இளவெயிலில் பத்துநாள் காயவை. வெள்ளீயத்தை உருக்கி அதின் எடை வெடியுப்புப் போட்டுக் கிண்டி எடுத்து அதனெடை சீனம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வி.த.கா. குக்குடபுமிடு. நீறும் முன்பாகம் செய்து வைத்து துருசின்மேல் கவசமிடு. காடைப் புடமிடு, வெள்ளையாகும், வங்கம் குறிப்பிட்ட இடம் பார்த்து வீரமிடு. துரிசின் மேல் சூட்டு, அது செயகுருவாகும். விராலி யிலையிலிட்டுப் பிழி. கரண்டியிலிடு. ரசம் ஊற்று. காய்ச்சு, இட்டிலி போலாகும். உருட்டிச் சூடனது தீயில் வாட்டு. கட்டும் தங்கமாகப் பழுக்கும். ஆய்ந்து பார். தங்கம் ஒன்று நாகமொன்று சேர்த்து உருக்கு. ரசத்தில் பாய்ச்சு. அரைத்துக் குப்பியிலிட்டு எரி. சிவக்கும். செம்பினை உருக்கிக் கொடு. பத்தாகும். எப்படியும் ரசம் கட்டும். தப்பித் திரிந்து தவியாதே.

## துருசுகுரு தன்வந்திரி முறை

வரிசையாய்ச் செய்து வருத்தப்படா ரசத்தை
யுரிசையாய்க் கட்டு உண்மையாம் - பரிசையாய்
அகத்தியரும் ஆடும்வித்தை அன்பாய்த்துரிசு சொன்னேன்
தகத்துடனே தன்மந்திரி தான்துரிசை - நயத்துடனே 511

சொல்லவே னுலாதனிலே, சொல்லக்கேள் வாதிகளே
வெல்லுரசந் துருகி இன்பமாய்க் - கொல்லும்
இந்துபலம் ஒன்று இன்பமுள்ள திராவகத்தால்
பந்து எதையட்டிப் பதிவாக - வந்து 512

வறுத்து வில்லைகட்டி வல்லமையாய்ச் சுண்ணம்
முறுத்தகீழ் மேலிட்டுமூடியே - சிறுத்துப்
புடமிட் டெடுத்துப்போர் பனியில் வைக்க
அடவுட னேசெயநீருமாகும் - திடமாக 513

பச்சைக் கற்பூரம் பலமாகப் பீங்கானில்
இச்சையுடன் திராவகத்தி லிட்டு - லச்சையறச்
சாரம் பலமொன்று சாதகமாய்த் திராவகத்தைப்
பாரம் பவமொன்று பக்குவமாய் - வாரம் 514

ஊத்தியே வைக்க உண்மையுள்ள வுப்பாகும்
பாத்தியே வில்லை பதமாகச் - சேர்த்துப்
புடமிட் டெடுக்க பேர்பெரிய சுண்ணம்
அடவுட னேமூன்று அடைவாகத் - திடமாகச் 515

சேர்த்துத் திராவகத்தால் செப்பமாய் விட்டுப்
பார்த்துத் தயிர் போல பால் வெண்ணெய் - வார்த்துத்
துருசு ஒருபலத்தைத் தோய்ச்சுமே போட்டு
வரிசையாய் நாளெட்டு வல்லமையாய் - நரிசை 516

சுக்கானைப் போலேதுய்ய வெள்ளை பாரு
மிக்காகத் தானிருக்கும் விருப்பமாய் - சிக்கு
வங்க சுண்ணம் பண்ணி வண்மை யதின்மேலே
சிங்கக் கவசமிடு சீக்கிரமாய்ப் - பங்கம் 517

படவே கவசம் பத்த வேகட்டி
நடவென்ற காடை நலமாகப் - புடமிட்
டெடுத்தால் குருவாகு மின்பமுள்ள வாதம்
அடுத்தால் நலமாகும் அன்பாய்த் - தொடுத்துத் 518

துத்தியிலையில் துடியாகத் தான் போட்டுப்
பக்தியுடனே மூன்று நாள் பார்க்கச் - சித்தியாம்
சா றுவருந் தான்பிழிந்து சாத்திரிய - சூதத்தை
வாறுடனே போட வலுமையாய்ச் - சோறு 519

போலக் கெதியிடவே போக்கோடேதான் திரண்டு
பாலநட் செத்திரம் போல்பத்தியே - வாலை
கட்டிமணி யாகுங் கசடற்றுத் தானா ருகும்
விட்டுஇனிச் சொல்லுகி றேன் மேன்மையாய் - முட்டி 520

ஏமமொன்று நாகமொன்று ஏத்தியெம்முண் மணியில்
ஆமமொன்று தானுருக்கு அடைவாகத் - தாமமாய்ச்
சேர்த்துருக்கிச் செம்புதனில் நூறிலிரண்டு
பார்த்துக் கொடுக்கப் பத்தரையாம் - நேர்த்தியாம் 521

சொன்னபடி செய்து சுயம்பாய் ரவிதனில்
பன்மையாக் கொடுத்துப் பத்தியே - முன்னே
யிருந்து செயமாக்கி யின்பமுள்ள வாதிகளே
பொருந்து சிவநிட்டை பூண்டுமே - இருந்து 522

சிவயோகம் பாரு சிறந்த மாயத்தா
லவமாகத் தான்திரிந்து அலையாதே - பலமாகச்
சொன்னபடி செய்து சோதிச்சுப் பாகமாய்
நன்னயமாய்ச் செய்து நலமாக - முன்னியே 523

தன்மந்திரி நூலில் தாழ்ச்சியாய்ச் சொன்னார்
வன்மமுள்ள கைபா கம்மறைத்து - உன்னிதமாய்
சொன்னா ரடியேற்குச் சோதிச்சுயான் சொன்னேன்
முன்னமே நூலில் முகித்தேன் - பின்னை 524

ஒருவருடன் பேச்சை யுண்மையாகக் கேட்டு
வருவது மில்லை மலையாதே - நிருபாக
மாகவே சுட்டுமலைத்துத் திரியாதே
தாகவே நன்னூலைத் தான்பாரு - யோகம் 525

வருமெனவே யோகம் வருகும் வரும்போது
தருமெனவே சித்தி தானாகும் - பருமெனவே
கருத்துக் கிசைந்து கனிவாகத் - தான்பாரு
வருத்தப் படாமல் மனதற்றே - பொருத்த 526

இருந்தா லகுவாத மழைக்கு மேபுக்கினா
லிருந்தால் சமாதிதா னெய்துமே - வருத்தினால்
வந்துவிடும் வாதம் வகையாக யோகமுதல்
தந்துவிடு ஞானம் சமாதிதான் - சிந்தனையாம் 527

வாசியோ கம்முடியும் வல்லமைதா னுண்டாகும்
பாசுபத மெல்லாம் பதறுமே - நாசி
யோகமக ராசனைப் போலொக்க விருந்து
பாகமாய்ச் செய்து பதம்பாரு - தாகமாய் 528

சிந்து மேவாதம் செயலரிய யோகமுதல்
வந்து மேநின்று மருவுங்காண்-முந்தத்
துரிசை முடித்துத் துப்புரவாய்ச் செய்து
பரிச மெனரசத்தை பாச்சியே - உருசை 529

கண்டு மனங்கனிந்து காதல் ரசவாதி
கொண்டுசிவ பூசையி லேகோதியே - நின்று
பரிசிகத்தில் வேதை பதிவா யிருந்துமென
தெரிசிகத்தில் தங்கத்தைத் திறமாக - வரிசையாய் 530

லோகம் பழுக்கும் லோகாதி லோகம்
பாகமாய்ச் செய்து பதிவாக-வாதிகனே
யிரதமது கட்டியின்ப ரசவாதம்
பரதமாய்க் கண்டு பதிவாக-சுரந்தியா 531

யென்றிப்படிதா னியம்பிரச வாதிக்கு
அன்றிப் படித்தா ரநேகமாய்ச் - சென்று
யிகுத் தேன் சிந்தூர மின்பமாய்த் திரண்டு
வகுத் தேன் சிலகாலம் வகையாக - வுகுத்த 532

நீலனைத்தான் கொண்டு நேராய் ரசவாதம்
ஆலயம் போல அதில் நில்லு - காலாங்கி
பசியடக்கும் வாதம் பத்தியாய்ச் செய்து
பசியடக்குஞ் செம்பு பதமாக்கி-வசியமாய் 533

செய்து முடித்துச் சிறப்பாக ஞானங்கள்
வைது ரசத்தைப் பவழமாய்க் - கையில்
அரைத்துச் சிந்தூரம் அன்பாகக் குப்பியினில்
பரைத்து அடைத்துப் பதமாகப் - பொரித்துத் 534

## 511 - 534 உரை. துரிசுகுரு, தன்வந்திரி முறை

இந்துப்பு ஒருபலம் திராவகத்தில் போடு. எடு. வறு. வி.த.கா. கீழும் மேலும் சுண்ணமிட்டு நடுவில் வில்லை வை. சிறு புடமிடு. சுண்ணம் பனியில் வை. செயநீராகும். திராவகத்தில் பச்சைக்கற்பூரமிடு. அதில் ஒருபலம் சாரமிடு. உப்பாகும். வி.த.கா. புடமிடு. சுண்ணமாகும். திராவகத்தில் போடு. தயிர்போல பால்போல வெண்ணெய் போல ஆகும். ஒரு பலம் துரிசினைத் தோய்த்துக் காய்ப்போடு. எட்டுநாள் தோய்த்துக் காயப்போடச் சுக்கான் கற்போல் வெள்ளையாகும். வங்கச்சுண்ணம் செய்து அதன்மேல் கவசமிடு. காடைப்புடமிடு. கருவாகும்.

துத்தியிலையில் போட்டு மூன்று நாள் வைத்துப் பிழி. சாறு வரும். கரண்டியில் விட்டுச் சூதத்தை வார்த்துக் கொதியிடு. விண்மீன்போன்று கட்டும். மணியாகும். கசடற்று உருகும். தங்கம் நாகம் இரண்டும் ரசமணியுடன் சேர்த்து உருக்கு. செம்பில் நூற்றுக்கு ரெண்டு கொடு. பத்தரை மாற்று ஆகும்.

தன்வந்திரி தனது நூலில் மறைத்துத் தாழ்ச்சியாகச் சொல்லி வைத்தார். எனக்கும் குறிப்பாகவே சொன்னார். நான் ஆராய்ந்து பார்த்து வெளிப்படையாகவுரைத்தேன். செந்தூரம் தின்றால் உடல் வலுக்கும்.

(525-534 அறிவுரை).

### துரிசுகுரு, தேரையர் முறை

தின்றாலே காயசித்தாம் திட்டமாம் வாசி
யென்றாலே யோகமென வின்பமாம் - நன்று
தேரர்சொன்ன தான்துரிசைச் செப்பக் கேள் செப்பில்
பாரமில்லை கைபாகம்பாரு - நேரமாய் 535

சிவனுமுரை செய்த சிவமான பார்பதியும்
அவனும்நந்தி செய்த அடைவாக - நலமாகச்

செப்பினால் நீலனைத்தான் செய்மாகச் செய்தால்
அப்புச் சலத் தேஅறிவிப் பேன் - இப்புவியில் 536

காணாது காணலாம் காட்சிமிகு வுண்டாகும்
வாணாது நல்ல படிவாகும் - தோணாதே
போனால் துரிசைபுகட்டி யேவைத்திடுநீ
பானால் பதிவாகும் பார்மீதில் - தானாக 537

வடித்த திராவகத்தில் வலதாகச் சொல்லுகிறேன்
நடித்த வெடி சுண்ணம் நலமாகப் - பொடித்துப்
போட்டு மேமெல்லப் புகலரிய மொலுமொலென
வாட்டு மேகரைந்து வகையாகத் - தேட்டுத் 538

துரிசைநீ தோய்ச்சுத் துடிவாகப் பத்துநாள்
வரிசையாய்த் தோய்த்து வழியாக - நரிசையாய்ச்
சூரிய னில்காயச் சூட்டியெடு பின்னாலே
வாரியாய்ச் சீனம் வகைபத்துக் - காரியில் வைத்து 539

ஊதிடவே வெள்ளையாய் உண்மையாய் நீறும்
பாதிடவே திராவத்தைப் பார்த்துஅரை - காதி
அரை த்துரவி காய அன்பாகப்புடமிட்டுத்
தரைத்து எடுத்துத் தயவாக - வரைத்து 540

ஆட்டிக் கவசமிட்டு அப்பா லேகேரும்
பாட்டிரவி காய வைத்துப்பண்பாகத் - தாட்டிகமாய்
தீநீ ரறைத்துத் திடமாய்க் கவசமிட்டுப்
பானீரின் மேல்கவசம் பத்தி யே - சாநீரில் 541

சேவல் புடத்தில் திரமாகச் செம்பாகும்
பாவக் குருவிநுல் பாகமாம் - யோகமாம்
அண்டரண்ட மாடும் ஆதி குருவாகும்
பிண்டம் வழலையெனப் பேசுவீர்-கண்டர் 542

தில்லம்பால் தன்னில்திரமாகப் போட்டு வைக்க
நல்லாய் முறியுமே நாடியே - வல்லாய்
அயச் சட்டி யிட்டு அரன் பீச மிட்டு
நயப்பட வே கோதியிடு நாட்டியே - பயப்படா 543

சென்று ரசங்க ட்டும் சிறப்பாகக் கரியில் வைத்து
நன்று வுருக்கிநு லாடிவிடும் - நின்று
தங்க மொன்று நாகமொன்று தாக்கியுருக்கி
யுங்கள் ரவிநூறி லுருக்கியிடு - சிங்கம் 544

போலாகப் பாய்ந்து போத மெநஞ்
சேலாகத் தங்கம் அடைவாகும் - சேலாக
வருத்தப் படாமல் வளமாகத் தான்பாரு
கருத்துட னேயாகுங் கனகமயம் - பகுத்து 545

## 535 - 545 துரிசு குரு. தேரையர் முறை

வடித்த திராவகத்தில் வெடியுப்புச் சுண்ணம் பொடித்துப் போடு. கரையும். துரிசினை அதில் தோய்த்துத் தோய்த்துப் பத்து நாள் காயப்போடு. பத்துப்பலம் சீனத்தைக் கரியில் வைத்து ஊதி வெண்மையாய் நீற்றி எடுத்துத் திராவகம் விட்டரைத்துக் காய வைத்துப் புடமிட்டு எடுத்துத் திராவகம் விட்டரைத்துத் துரிசிக்குக் கவசமிடு. அதன்மேல் சுண்ணக்கவசம் மணகவசம் இட்டுச் சேவல் புடமிடு. செம்பாகும் தில்லம்பாலில் துரிசினைப் போட்டு வை முறியும். அயச்சட்டியில் விட்டு ரசமும் விட்டுக் காய்ச்சு. கட்டும். கரியில் வைத்து உருக்கு. உருகியாடும். தங்கம் ஒன்று நாகமொன்று தாக்கியுருக்கு. செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. தங்கமாகும்.

## நாகச்செயநீர் - சரக்குகள் கட்ட மூலிகை ரசம் பிழிய

நாகச் செயநீர் நலமாகச் சொல்லுகிறேன்
பாகமாய்ப் பாகு பதமாக - வேகா
சுத்திபண்ணித் தானெடுத்துச் சுத்தவன்னி ரசத்தை
பத்தியுட னெடைக்குப் பாய்ச்சி யே - சித்தி 546

யுருக்கி ரண்டுஞ் சேர்த்து உண்மையாய் வீரம்
பருக்கஇடை யொன்றாகப்பாய்ச்சி யே - வறுக்கத்
திராவக த்தை விட்டுத்தளர வே வைத்துவிட்டுப்
பரா முகமாய் நாளெட்டில் பாரு - சராபோக 547

மாக வே நீரெல்லாம் வாங்கியொரு பீங்கான்
தான வே அப்பால் தனைவைத்துச் - சேகரமாம்
துரிசை யொருபலத்தில் துப்புரவா கக்கரியில்
வரிசையுட னூதி வைத்திட வே - வரிசையாய் 548

வெளுக்கும் வெள்ளை யாகும் வேகமாய்த் தானிருக்கும்
தளுக்காய்ச் செயநீரி ல்தான் தோய்த்து - முழுக்க
எட்டுநாள் போட்டு இதமாகப் பார்நீரில்
செட்டுப் படவுள் செலுத்தியே - முட்ட 549

சட்டியிட்டுத் தானெரித்துச் சாமநால்
முட்ட வேபிரிக்க முக்கியமாய் - சிட்ட
எடுத்து மே பார்த்தா வேத்தமாய்த் தான்சிவக்கும்
அடுத்துக் குருவாகும் ஆண்மையாம் - அடுத்து 550

மூலிகை யிட்டு முறுக்கி யேதா பிழிய
வாலிபமாய்க் காட்டும் வசமாகும் - பாலித்து
ரசமுடனே வீரம் நன்மை பெறுதாளகமும்
விசையாகத் தான்கட்டும் விரும்பியே - தசமாக 551

லிங்கமு தல்பூரம் நிலவர மாகத்தான்
பங்கப் படாமல் பதைக்கு மே - துங்கம்
வேதையாம் வேதை விருப்பமாய்த் தானாகும்
பாதையாம் நல்ல மாத்தாகும் - காதை 552

சொல்ல முடியாது சொல்பெரிய வேதைகளை
வல்லபமாய்ச் சொன்னேன் வகையாக - நல்லா
யிருக்க ரசவாத மின்பமாய்த் தான்பாரு
பெருக்க முடித்துப் பிலம்பாரு - செருக்க 553

ஏழை ரசவாதி யின்பமாய்த் தானே
பாழைபட வதைத்தால் பாக்கியமாம் - வேடம்
எடுத்தா லேகூத்துக் சிசைய மடநெஞ்சே
அடுத்தால் ரசவாத மாகுமே - கொடுத்தால் 554

வாங்குவார் தானுலகர் வாதைப் படமாட்டார்
தாங்குவார் வாதந் தனைப்பொய்யா - யேங்குவார்
வாதம்சிவ யோக வாதிக்கு உண்டாகும்
பாதம் உலகத் தோர்பத்தாது - ஏதுக் 555

கென்றுசொல் வாருலக ரேங்கித் திரிந்து
அன்று தாநூல்களை யேஆராய்ந்து - நன்றி
பர தேசி வந்தார் பூக்க வைத்துப் போனால்
நரர் சொல்லி காட்டி நயப்பார் - உரசாக 556

நான் செய்யவே னென்பார் நாளைக்குக் காட்டு வேன்
வான் செய்த கைபாக மாகுங்காண் - ஏன் செய்த
ஏட்டிலே யென்ன இருக்கு மென்று சொல்லி
பாட்டி லே ஒன்றுமில்லை பாருமே - கேட்டாகப் 557

பாடினா ரென்பார் பயன்பிரி யாமல்தான்
ஆடினார் பாட்டு அடைவாக - நாடியே

செய் வேனென் பார்சிலரும் சிறப்பாகத் தங்கத்தை
மைவேன் எனக்கு மயமாகச் - செய்யக் 558

கொடுக்க எடுத்துக் கொண் டோடிப் போவாரும்
அடுக்கப் பிடித்து அடைவாக - நடுக்க
அடிதண்ட மாக அடித்துப் பிடிகட்டி
படியாக வேசிலரும் பார்த்துமே - நொடியாக 559

இப்படி யேதிரிந்து ஏங்கித் திரியாதே
பைப்படியுந்தான் துருசு வைத்து மே - யெப்படியும்
இரதத்தைக் கட்டு ஏத்தமுள்ள பொன்னாகும்
சுரதத்தை நாடிச் சுகமாக - வரதத்தை 560

யென்றிப் படிதா னியம்ப வுலகத்தில்
அன்றிப் படித்து அருள்பெறுவீர் - நன்றி
பொன்னாகா பாவிக்கிப் பொருந்தவே வெள்ளீயம்
தன்னிலே வெள்ளி தானாகும் - முன்னே 561

**546 - 561 உரை : நாகச்செயநீர் - சரக்குகள் கட்ட மூலிகை ரசம்பிழிய**

தூய்மை செய் நாகத்தையுருக்கு. அதனெடைக்கு இலிங்க ரசம் எடுத்துச்சேர். வீரம் ஒரெடை அத்துடன் சேர். திராவகம் ஊற்றி எட்டு நாள் கழித்துப்பார். நீர் வாங்கியிருக்கும். ஒருபலம் துரிசினைக் கரியில் வைத்து ஊது. வெளுக்கும். எடுத்து மேற்படி நாகச்செயநீரில் தோய்த்துக் காயப்போடு. எட்டுநாள் தோய்த்துக் காயப்போட்டெடுத்துச் சட்டியிலிட்டு எரி. நாற்சாமம் எரித்துப் பின்பு பிரித்துப் பார். சிவக்கும். அது குருவாகும்.

மூலிகையிலிட்டு முறுக்கிப் பிழிய நீர் வரும். ரசம் தாளகம் வீரம் எல்லாம் கட்டும். இலிங்கம் பூரம் முதலியனவும் கட்டும். மாற்றாகும்.

**552 - 561 அறிவுரை**

# வெள்ளிவித்தை

சொன் னேனொரு வெள்ளி வித்தை சொற்பமாய்க் கேளு
நன்னயமாய் வெள்ளி நலமாகும் - பின்னே
வெள்ளைப் பாடாணம் வேண்டி யொருபலந்தான்
வள்ளல் பலம்நாலு வாங்கியே - மெள்ள 562

வண்ணா னிடங்கொண்டு வகையான வெள்ளாவி
தன்னா விதன்னி லேதான் வைத்துக் - கண்ணாளா
எரித்து எடுத்து இன்பமாய்த் தானும்
வரித்துப் படிசெய்ய மாட்டு வேன் - வருத்தப் 563

பட்டு எருக்கம்பால் பாடுபட்டுத் தோய்த்துக்
கட்டு மேயெட்டுநாள் காரியமாய் - இட்டுச்
சுக்கானீர்க்குள் ளே சுருக்கா யெரிக்கவே
பிக்காகக் கட்டி விதமாகச் - சிக்கி 564

யிருக்கு மெடுத்து இப்படி யேயைந்துதிரம்
பருக்க எரித்துப் பதம்பாரு - பொருக்க
நிற்கு மதையெடுத்து நேரான திராவகத்தால்
பற்கு மதையரைத்துப் பரிவாகச் - செற்கச் 565

சீனச் சுண்ணம் பண்ணிச் சிறப்பா யதின் பேரில்
ஆன கவச மடைவாக - வானோர்
கொடுத்துப் புடமிடு கூடியேநீறி
யடுத்து இருக்குமது பண்பாகும் - நடுத்து 566

வெள்ளீயம் நூறில் விருப்பமாய்த் தான்கொடுக்கத்
துள்ளி யெடு வெள்ளியாம் சோதியாம் - மெள்ள
நாகத்தில் தான்கொடுக்க நல்ல வெள்ளி யாகும்
போகத்தை வாங்கிக் கொடுத்தூத - பாகம் 567

மாகமாய்ச் செய்து மயங்காமல் தான்பண்ணி
யேகமா யொன்றா யிருந்துவிடும் - ஏகமாய்ச்
சுடுபாதி சுட்டுச் சூச்சமாய்ப் பொன்னில்லாப்
படுவாதிக்கி வெள்ளி பலிக்குங்காண் - திடுவாதி 568

யேழையாம் வாதிக்கிரங்கி வெள்ளி சொன்னேன்
பாழையில் லாம லேபாரு - வாழை
வைத்தால் பயிராகும் வைக்கா தேபோனால்
சத்தாய்ச் செழித்து தானுண்டோ - மெத்த 569

இருக்குமே வெள்ளி யின்பமாய்த் தானாகும்
வருக்கும் பகுந்தால் வகையாகும் - செருக்க
சிவயோகம் பாரு சிவகதியே யென்று
நவ லோகம் பாச்சியே நலமாகும் - பலமாகும் 570

நெஞ்சுதனில் நினைத்து நேராக வெள்ளி வித்தை
தஞ்சமாய்ச் செய்து தவமாகும் - வஞ்ச
ஆமைமுட்டை கரையில் அப்பா லேயிட்டு
வா மைப்பட நினைப்பில் வைத்து மே - சாமை 571

பயிரிட்டால் குருவி பறந்து வந்து விழும்
தயிரிட்டால் தான்சாதம் தான்ருசிக்கும் - வயிரிட்டால்
ஆனைக் கரும்பு தின்றால் ஆனருசியாகும்
பானை யரிசியிட்டால் பாகமாம் - யேனோ 572

## 562 - 572 வெள்ளிவித்தை

வெள்ளைப் பாடாணம் ஒருபலம் அல்லது நாலு பலம் வாங்கு. வெள்ளாவியில் வைத்து எரித்துத் தூயதாக்கு. எருக்கலம்பாலில் தோய்த்து உலரப்போடு. எட்டுநாள் தோய்த்து உலரவைத்த பின்பு சுக்கான் நீற்றுக்குள் வைத்து எரி. கட்டும். இங்ஙனம் ஐந்து முறை எரி. எடு. திராவகம் விட்டு

அரைத்து உருட்டு. அதன்மேல் சீனச் சுண்ணக் கவசமிடு. காய்ந்த பின்புடமிடு. நீறும், வெள்ளியத்தில் நூற்றுக்கு ஒன்று கொடு. வெள்ளியாகும். நாகத்தை உருக்கிக் கொடு. அது நல்ல வெள்ளியாகும்.

568 - 572 அறிவுரை

## கெந்திநீறு - அதன்பயன்

சொல்லிக் கேள் வாதிக ளேசொல் பெரிய கெந்திநீர்
அல்லக் கேள் சொல் வேன் அடைவாக - நல்லக் கேள்
நாறும் பூநீறு நலமாகச் சொல்லுகி றேன்
வாறுகேள் வாதி வடிவாக - ஆறும் 573

தில்லை மரபாலைத் திறமா யொருபடியும்
நல்ல சுயகெந்தி நடமாகச் - செல்ல
ஆட்டித் துவைத் தெடுத்து ஊத்த வேவாயில்
மாட்டி யேபோடு வளமாகத் - தாட்டிகமாய்ப் 574

போடவே மஞ்சள் போய்ப் பொருத்த வெள்ளை யாகும்
ஆடவே யெடுத்து அடைவு கேள் - நாடச்
சீயக்காய்க் குள்ளே செலுத்திக் கவசமிட்டு
ஆயமா யரைத்து அதின் பேரில் - நாயமாய் 575

செலுத்தி யே கொல்லச் செயமாகக் கேளும்
வலுத்திக்கமுதைநீர் வாங்கியே - தனித்துப்
பானைதனி லிட்டுப் பதறா யதின் பேரில்
சேனைகிழி கட்டச் செயமாகும் - வானை 576

யெரித்து யெடுத்து இதமாய்க் கவசத்தை
அரைத்துப் பிழிந்து அலம்பி யே-வருத்திக்
கெந்தியைத் தான் பீங்கானில் கிரை ரவிதனிலே
சுந்தரமாய் வைத்துத் தொகையாக - மந்திரமாய்த் 577

தாட்டிகமா யெட்டுத் தடையற வேவைத்து
பாட்டிகமாய்ப் பூக்கும் பதமாகும் - நாட்டியே
பூக்கா தே போனால் பின்பு மறுதிறந்தான்
தாக்கி யே முன்போல் தயவாகப் - பாக்கியமாய்ச் 578

செய்திட வேநீறும் செயமாகத் தானிருக்கும்
பைதிட வே மாத்துப்பகரு வேன் - நைய
தங்க மொன்று நாக மொன்று தப்பா தே சேர்த்துருக்கு
பங்கப் படாம லேபாய்ச்ச - பங்கம் 579

வராம லிருக்கும் வகையா யரைத்து மே
பராமுகமாய்த் திராவகத்தால் பாரு - சிரா போகம்
அரைத்துப் புடமிட்டு அனரவி நூறில்
தரைத்துட னே தங்கமாம் தாக்கி னேன் - மறைப்பு 580

இல்லாமல் சொன் னேன் இன்பரச வாதிகளே
யெல்லாஞ் சிதம்ப ரத்தையே - நல்லாகப்
பாரு சபாபதியைப் பாகமாய்க் கெந்தகநீர்
தாரு வுருக்குமுனை தாக்கினால் - வாரும் 581

நடேசர் தானுருவாய் நாட்டி லே நின்றார்
படபடத்தா லாமோ பரிவாகச் - சடமானார்
கெந்தகத்தின் மார்க்கங் கிருபை ரசவாதி
அந்தக்கை பாகம் போ லாகுவீர் - முந்தமுந்த 582

பாலி லேசாகும் பரிவான கெந்தகமும்
சாலில் கழுதைநீர்தான் கொல்லும் - மேலாக
சீயக்காய் கெந்தியெண்ணெய் சீக்கிரமாய் வாங்குறா
பாயமா மிந்த வித்தை பார்மீதில் - நாயமாம் 583

செய்து முடித்துத் திடமாகத் தின்றாக்கால்
பைய வேகுட்டம் பறந்தோடும் - மெய்யாம்
வாத மெல்லாம் போகும் வந்திடுமே சொர்ணமயம்
சேத மெல்லா மத்த வேலை போம் - காதம் 584

நடந்தான் வழிதொலையும் நடக்காதே போனால்
படந்தால் வழிக்கென்ன பாருமே - திடந்தான்
அலைந்தாவ தென்ன அன்பாய்ப் புவிமீதில்
துலைந்து உலாவைத் துடியாக - மலையாமல் 585

படித்து மே பார்த்துப் பதையாமல் செய்து
முடித்து மே தின்றால் முடிவாகும் - தடித்து
நோயெல்லாம் போகும் நுணுக்கமாய்த் தாது புஷ்ட்டி
தாயகமா யாகுந் தனியா தே - பேயாய் 586

## 573 - 586 கெந்திநீறும் பயனும்

தில்லைப்பாலில் கெந்தியைத் தோய்த்துத் தோய்த்துக் காயப்போடு. வெள்ளையாகும் வரைக் காய்ந்த பின்பு சீயக்காயை அரைத்து அதன்மேல் கவசமிட்டுக் காயவைத்துப்பானையில் கழுதைநீர் விட்டுக் கந்தகத்தைக் கிழிக்கட்டித் தொங்கவிட்டு நீர் சுண்ட எரித்து எடுத்துப் பிரித்துப் பீங்கான் தட்டில் வைத்துவிடு. கெந்தி பூக்கும். பூக்காவிட்டால் மீண்டும் ஒருமுறை செய். பத்தி நீறாகும். தங்கமொன்று நாகமொன்று சேர்த்துருக்கிக் கெந்தி சேர்த்துத் திராவகம் விட்டரைத்து புடமிட்டுச் செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. தங்கமாகும். உண்ண நோய் போகும். தாது வலுக்கும்.

580 - 586 அறிவுரை

## தாமிர பற்பம்

திரிந்து அலைந்தால் திறமாக வென்னபலன்
பரிந்து உலாவைநீ பார்த்து - வரிந்து

தாம்பூர பற்பந் தயவாகச் சொல்லுகிறேன்
காம்பூர பற்பங் கனமாக - வாம்பூர 587

பண்ணில் ரசங்கட்டும் பண்ணா தேபோனால்
யெண்ணினா லென்ன பலனுண்டு - திண்ணிதமாய்ச்
செம்பைப் புளியிலை போல் செப்பமாகத் தட்டி
வம்பாய்க் கரி நெருப்பில் வைத்தூது - தெம்பாக 588

எலிவர்ணம் போல வெடுத்து மேவைத்து
நலியாத வின்ன-மொன்று நாட்டு வேன் - பலியாக
அஞ்சு மேகாய்ச்சல் அழகா வெடியுப்பை
மஞ்சு மே கத்தநீர் மயமாகத் - தஞ்சமாய்க் 589

கரைத்துக் குழம்பில் கனிவாகத் தோய்த்துப்
பரைத்து வெட்டை யாகமட்டும் பண்பாய்ப் - புரைத்துத்
தோய்த்து எடுத்துத் துணிகரமாய் மேல் கவசம்
பார்த்து மேசொல் வேன் பதிவாகச் - சேர்த்து 590

புண்ணாக்கு மேல்கவசம் போட்டுக் கசபுடத்தில்
நண்ணா எடுக்க நலமாகும் - வெண்ணிறமா
யிருக்குமது தாம்பூர மினிய தொருரச த்தை
நருக்கு மேகட்டும் நலமாகும் - பெருக்க 591

வெந்துச் சுண்ணம் நாலி லொன்று இன்பமாய் வீரம்
அடுத்து மே அரைத்து அன்பாகக் - கடுக்க
அரைத்துத் திராவகத்தால் ஆனதங்க மேலே
பரைத்துக் கவசமிட்டுப் பார்த்து - நரைத்துப் 592

புடம் போடத் தானீறும் போக் கேடே யெல்லாம்
தடம் போடத் தங்கந் தனிவேதை - நடம் போடு
செம்புதனில் நூறு செப்பமா யொன்றிடவே
நம்புமது தங்கமாம் நாடியே - நம்பி 593

யிருக்க வே தங்க மினிய தொரு, செல்வம்
பெருக்க ரசவாதம் பிலப்படு மே - நருக்கும்
செம்பைப் போல் வேதை தேசங் கிடையாது,
நம்புமது தங்கமாம் நாடி யே - தென்பாய்ச் 594

செய்து முடித்தால் செயமாக வாகும்
பைய வே செய்து பலம்பெறுநீ - நய்ய
வுறுதியாய்ச் செய்ய வுணமைரசங் கட்டும்
அறுதியாய் நின்றா லாகுமே - வறிதியாய் 595

அட்டகுண+ மெல்லா மகலு மே யுடலெரிவும்
பட்டபா டெல்லாம் பலிக்குமே - கிட்டர் புகழ்
காணாத காட் சியந்தான் காணலா மிப்புவியில்
பேணாத பொன்னும் பெரிதல்ல - நானாமல் 596

+ குன்மம் என்றிருக்கலாம்

## 587 - 596 உரை - தாமிர பற்பம்

செம்பைப் புளியிலைபோல் தகடாகத் தட்டிக் கரி, நெருப்பில் வைத்து ஊதி எலிக்குஞ்சுநிறம் வரும்போது எடுத்து "வெடியுப்புச் சீனக்கழுதை நீர்க்குழம்பில்" தோய்த்துத் தோய்த்து எடு. வெட்டையாகும். அதற்கு எள்ளுப் பிண்ணாக்குக் கவ்சமிட்டுக் கெசபுடதியிலிடு. வெண்ணிறமாக இருக்கும். ரசம் கட்டும்.

இந்தச் செம்பு நீற்றொடு காற்பாகம் வீரம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துத் தங்கத்திற்குக் கவசமிட்டுப் புடமிடத் தங்கம் நீறும். செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. தங்கமாம். நம்புதலாம் இவ்வேதை. நாடு.

### 594 - 596 அறிவுரை

## பூகிமுனிவர் சிவயோகஞ்செய்து சிவபெருமானருள் பெற்றுக் கெந்தகத்தயில் முறைபெற்றதும் - அதன் வேதையும்

இருந்து சிலகால மின்பமது தின்றேன்
வருந்துஞ் சிவயோக மார்க்கமா - யருந்தி
நின் றேன் தபசில் நெடுநாளிருந் தேன்யான்
கண் டே னெடுநாளாய்க் காட்சியாய் - அன்றே 597

கெந்தகத்தின் தன் பெருமை கேட் டேன் கெடிபடவே
பந்தனையாய்ச் சொன்னார் பரமனார் - சிந்தனையாய்ச்
சொன்னா ரவர்தான் சோதித்து நாலுயுகந்
தன்னா லுலாவி லேசாத்தி னேன் - பின்னே 598

தயில வகை சொன் னேன் தயிலத்தைத் தானறிந்து
அபில மெல்லா மீடா யடைவாக - மயில் போல்
அழகாகச் சொல் வேன் ஆதிரசங்கட்டு
பழகாகப் பாஷா ணம்பதைக்க - ஒயிலாகக் 599

கட்டுமெனச் சொல் வேன் காதலாய் நண்டு ரொம்ப
பட்டுடனே பால்விட்டுப் பதமாகத் - தட்டி
யிடித்து மேஆவி னிளம்பாலை விட்டு
வடித்துப் பிழிந்து வளமாகப் - படியாய் 600

உரை மோரு குத்தி வுள்ளபடி தான் கடைந்து
தரமாக வெண்ணெய் தானெடுத்துக் - கரமெனவே
யெடுத்து வுருக்கி எடைநாலு கெந்தகமும்
அடுத்து மே நெய்சுவற அடைவாகப் - படுத்து 601

நாத்தமிகு குப்பியடை நாரால் முகந்துணிந்து
பார்த்து மேபூப்பிடத்தில் பத்த வே - நேத்தியாய்
தயிலமது வாங்கு தாழ்ச்சி சிகப்பாகும்
அகிலம் விலை கொடுத்தா லாகு மே - பயிலாக 602

அயக்கரண்டி யிட்டு ஆனதொரு தயிலத்தைப்
பயப்படா தூற்றியே பாரு - நயமாகச்
சூதமிட்டுக் காய்ச்சு சுப்பிரமாய்க் கட்டும்
பாதகமில் லாமலே பாய்ச்ச - நாதமாய் 603

செம்பு பழுக்குஞ் செய வேதை யாகும்
நம்பு லிங்கத் தான் மெழுக்காம் நாடி யே - பம்பரமாய்
வீர மெழுகாகும் வேதையினிச் சொல்ல வொண்ணா
கார மெழுகாகும் கனகமாம் - பாரம் 604

தாளகத்தில் தானூற்றத் தாண்டி மெழுகாகும்
பாளமது தங்கம் பரிவாகும்-ஏளதமா
யெல்லா மெழுகாகு மின்ப ரசவாதம்
சொல்லால் பெரியவர் நாம்சூட்ட - முல்லை 605

அரும்பு போ லுண்டாகும் ஆடகமு மாகும்
இரும்பு பழுக்கு மிதமாம் - அரும்பாய்த்
துரும்புதான் தூணாகும் துப்புரவாய் வாதம்
வரும்பொன் மிகப்பழுக்குங் காரணமாய் - நரும்பு 606

செய்வாத மாகும் செப்பமாய்ச் சேரு
மெய் வாதங் கெந்தி விரும்பிப்பார் - வைய
மெழுகுக்கு ஆதிவிரும்பித் தயிலமது
நழுகாமல் பார்த்து நலம் பெறுவீர் - மெழுகாகும் 607

கதையாய் நினையா தேகள்ளமட நெஞ்சே
பதையாமல் கட்டும்பரிவாகச் - சதையாகக்
குட்டம் பதினெட்டுங் கோளனையாய் போகும்
வட்டமுலை மார்பர் வழுத்தினார் - செட்டாகச் 608

சொல்லி யேவைத்தார் சொற்பெரிய தயிலத்தை
வுல்லாச மாக வுலாவி லே - சல்லாப
மாக வே சொன்னேன் மலைத்துத் திரியாமல்
ஆக வே சொல்ல அருளாகத் - தாகமாய் 609

வாழ்த்தினார். (பா.வே.)

## 597 - 609 உரை கெந்தகத் தயிலம்

.நண்டு நிரம்பக் கொண்டுவந்து பால்விட்டுப்பதமாகத் தட்டி இடித்து பசுவின்பால் விட்டு வடித்துக் காய்ச்சி உறைகுத்தித் தயிரான பின்பு காய்ச்சிக் கடைந்து வெண்ணெய் எடுத்து உருக்கி அந்நெய்யில் நாலுபலம் கெந்தகம் போட்டு அரைத்துக் குப்பியில் போட்டு அதன் வாயில் நார்ச்சுருணை வைத்துப் பூப்புடத்தில் தைலம் வாங்கு. உலகினையே விலையாகக் கொடுத்தாலும் ஈடாகாதே. இரும்புக் கரண்டியில் தயிலமிட்டுச் சூதம்பிட்டுக் காய்ச்சக்கட்டும். செம்பு பழுக்கும். வீரம் காரம் இலிங்கம் இவை மெழுகாகும். தாகம் முதலிய எல்லாமும் மெழுகாகும். செம்பொன்னாகும்.

கதையாய் நனையாதே. மலைத்துத் திரியாதே. குட்டம் பதினெட்டும் நீங்கும்.

### பஞ்சபதச் செந்தூரம்

தயிலம் வகை சொல்லித்தாரணியி லெல்லார்க்கும்
பயில வே கைபாகம் பாடி யே - ஒயிலாகப்
பஞ்சபூதஞ் சொல் வேன் பச்சையாய் வேதைநலம்
பஞ்சமில்லாத தங்கம் பதிவாகும் - தஞ்சமாம் 610

வேதை நலமாகும் வேதாந்தத் துட் பொருளாம்
பாதைநல மாகுமினிப்பந்த வே - வாதைப்
படாமலே பண்ணிப்பதிவான ஞானத்தைத்
திடமாக நற்கருத்தாய்ச் செய்ய வே - படமாக 611

அயத்தில் பல மொன்று ஆனரவி நாலிலொன்று
பயமாகச் சேர்த்துருக்கு பாகு போல் - நயமாகும்
உருகி மணியாகு முள்ளபடி தங்கம்
பருகி யே தெளிவாகப் பாச்சி - உருக 612

நாக மொன்று பாய்ச்சி நலமா யெடுத்துடைத்துப்
பாகமாய் வீர மொன்று பாய்ச்சி யே - ஏக
லிங்கபற்ப மொடன்று நேராய்த் திராவகத்தால்
பங்கமாய்ப் பனிரெண்டு சாமந்தான் - துங்க 613

அரைத்துரவி காய வைத்து ஆனவில்லை மேல்கவசம்
பரைத்து அப்பி ரேகம் பதமாக - வரைத்து
ஆட்டி நவநீதம் அடை வாக மேல்கவசம்
பூட்டிரவி காய வைத்துப்பின்பு கேள் - தாட்டிகமாய் 614

புடம் சிறுகப் போட்டு போர யெடுத்துட னே
நடம் சிகப்பு செப்பாகத் தானிருக்கும் - திடமாக
எடுத்துரவி நூறி லேத்தமா கக் கொடுக்க
அடுத்ததங்க மாகும் அதுசயமாம் - படுத்து 615

இருக்க வே யோகமா மெடுத்த ரசவாதம்
பருத்து மே வந்து பதமாகும் - வுருத்தாக
இருக்கும் ரசவாத மினிதான வாதிகளே
சிரித்துத் திரிந்து திரியா தே - பெருக்க 616

## 610 - 616 உரை. பஞ்சபூதச் செந்தூரம்

அயம் ஒருபலம் செம்பு காற்பலம் உருக்கு இவற்றுடன் தங்கம் நாகம் பாய்ச்சி உருக்கி வீரமொன்று பாய்ச்சி இலிங்கபற்பம் ஒன்று தாக்கித் திராவகம் விட்டரைத்து அப்பிரகக் கவசமிட்டுச் சிறுபுடமிடு. சிவக்கும். செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. செம்பொன்னாகும்.

## அயச்செம்பு

நினைத்து இரும்பை நேராகப் பாரு
அனைத்து மேதங்கம் அடைவாகும் - பனைத்து
துரும்பு தான் தூணாகுந் தேறுமட நெஞ்சே
அரும்பு தான்வாத மதுவுண்டோ - திரும்ப 617

அயமதனைச் சோதி அடைவாகத் தங்கம்
நயமாகவிப்பு வியில் நாடுவீர் - பயமாகச்
செய்து முடித்துச் சிறப்பா யிரும்பு தனை
வையகத்தில் வாழ்ந்து மனமகிழ - மெய்யாய் 618

அந்தரத்திற் காளாகி ஆடித் திரியாமல்
சுந்தரமா யிரும்பைத் துப்புரவாய் - முந்தப்
பாருமே யென்று பரம ரருள் செய்யத்
தேருமே தங்கந் தெரிசினையாம் - காரு 619

புடசய மே யாகும் போதமட நெஞ்சே
அடமில்லை காயம் அடைவாகும் - படபடத்துச்
செய்யா தே யென்று செப்பினார் யூகிமுனி
பைய வே திங்கள் பதைக்கா தே - மெய்யா 620

யிரு மென் றுள்ளார இன்ப ரசவாதி
பொருமென் றுலகத்தில் போதித்தார் - வருமென்று
சொன்னார் கைபாகஞ் சோதி மயமாகும்
அன் னேரம் வாதம் அடைவாக - முன்னே 621

சொன் னேன் அயச் செம்பு சுகமாகப் பார்த்து
என் னேரம் சீவனங்க ளெய்தி யே - பின்னே
கொடுக்கு மே தெய்வம் குறைவற்ற பாக்கியமும்
அடுக்குஞ் சிவ யோகம் ஆண்மையால் - தொடுத்து 622

ஞானத்தை நம்பி நலமா யிருந் தக்கா
லேனொத்த வாத மிதமாகும் - பானத்தால்
கெட்டு அலைந்து கிரகத்தை யேவிட்டு
முட்டத் திரிந்து மொழியா தே - பட்டு 623

நூல் சாயம் போலே நுண்ணிமையாய்ப் பாரு
போல் ரசவாதம் பொறுமையாய்ச் - சால்பு
வருகு மே யேழை வடிவான வாதிக்கி
பெருகும் அயமதுதான் பின்பாக - வருகு 624

மென்று நினைத்து விரும்பி அயமதனை
நன்று மேநல்லாய் நாடி யே - வென்று
ரசம் தன்னைக் கட்டி நலமாக யோகம் பார்
பசப சென்று தான்முழித்துப் பாரா தே - வசமாக் 625

இருத்தினால் வாத மேழைமட நெஞ் சே
பெருக்கினால் பொன்னாகும் பண்பார - உருக்கினால்
அயம் வேதை யாகும் ஆடி மிகப்பாரு
நயமாகும் தங்கமது நாடுவீர் - பயமில்லை 626

**619 - 626 அறிவுரை**

## தாளகம்

அரியைத் தானெடுத்து ஆனவுப்பு நேரே
பரிகாச மில்லாமல் பாய்ச்சி யே - விரிவாக
அரைத்துத் திராவகத்தால் ஆனவுண்டை பண்ணிப்
பரைத்துரவி காய வைத்துப்பண்பாய் - வரைத்துமே 627

சுக்கானீறு தன்னில் துடியா நடுவில் வைத்து
மிக்கவே தானெரிக்க விந்தையாய்ச் - சிக்க

எரித்து எடுத்து இதமாக அஞ்சுதிறம்
பரைத்து எடுத்துப் பக்குவமாய் - வரைத்து 628

எடுத்து மே பார்த்ததாலிதமாய்ச் சிகப்பாகும்
அடுத்து மே செம்புக் கதிலிட வே - கடுத்துச்
சொர்ணமய மாகும் துப்புரவாய்த் தானிருக்கும்
வர்ண மெல்லாந் தாளத்தில் வாதமாம் - சொர்ணம் 629

விளையுமென் றேமுனிவர் வேதையிதில் சொன்னார்
உளையவே தாளகத்தை யுற்றுப்பார் - பளைய
ரசத்தை யொருவருந்தா னாடிப் பிடித்தாலும்
வசப்பட வேநில்லாது வாகாக் - கசல் போல 630

ஓடியே போகும் உற்றரச வாதிகளே
பாடி யொருசரக்கில் பரவாது - நாடி
கட்டுப் படாது கடுகி யே ஓடிவிடும்
முட்டு மே ஓடு முடிவாகத் - திட்டு 631

முட்டன வே ஓடும் முதல்வருட விந்து
கட்டுப்பட்டால் தங்கங் காரணமாம் - பட்டு
விட வே துரிசை வேதையாய் நீத்து
படு மோ ரசமுருண்டு பாவிக்கும் - திடமெனவே 632

## 627 - 632 உரை

தாளகமும் உப்பும் சமஎடை சேர்த்துத் திராவகம் விட்டு அரை. உருண்டையாக்கு. காயவை. சுக்கான் நீற்றுள் வைத்து எரி. ஐந்து முறை எரி. செம்பினை உருக்கு. கொடு. நிறம் வரும்.

## மாமேருச் செந்தூரம் ஐந்துப்புத் திராவகமும் பயனும்

என்றிப் படி செய்ய இயம்பினார் யூகிமுனி
அன்றிரச வாதிக்கி அடைவாக - வென்று
மலையிலிருந்து மாமேருச் செந்தூரம்
அலையாமல் சொல்வேன் அடைவாகக் - கலைபோலக் 633

காழகண்ட மேரு கனத்த தொரு செந்தூரம்
வாழமட நெஞ்சே வலுமை கேள் - பாழாகப்
போகாமல் சொல் வேன் போக் கோடேபாரு
காகக்கறியுப்பு வகை யொன்று - பாகமாய் 634

வெடியுப்பு ரெண்டு வேதாந்தம் சீனம்
படியாகப் பால் ரெண்டு பாரையாம் - முடியவே
கார மொன்று கெந்தியுப்பு கனக்க வேயொன்று
பாரமா யிதுஐந்து பாகமாய் - வாரப் 635

படஅரைத்துச் சட்டி பாகமாய் - வாலை
அடவாக மூடி அதின்பின்பு - திடமாக
உளுந்து மண்சீலை யுண்மையாய்ச் செய்து
வளுந்து மே அடுப்பில் வளமாக - நளுந்து 636

ளிக்கநீர் தான்வருகு மேத்தமுள்ள முன்னீரைத்
தரிக்க வே வூத்தித் தயவாகப் - பிரிக்கப்
பின்னீரை வாங்கிப் பிரபலமாக் குப்பியடை
யின்னொன்று சொல்வேன் புகலக்கேள் - நன்னயமாய் 637

சங்குத் திராவகமாம் சங்கதனைத் தானிட்டால்
பங்க மாகக் கரைக்கும் பரிவாகச் - சிங்கமாம்
பாழாணம் நீறும் பரிவாய் ரசங்கட்டும்
தாழான வுப்பெல்லாந் தானீறும் - வாழ்மனமே 638

## 633 - 638 உரை. ஐந்துப்புத் திராவகம்

கறியுப்பு ஒன்று. வெடியுப்பும் சீனமும் வகைக்கு இரண்டு பாறையுப்பும் கெந்தியுப்பும் வகைக்கு ஒன்று ஆக ஐந்தும் வாலையில் இட்டுத் திராவகம் இறக்கு. பின்னீர் நலம். சங்கு இதில் கரையும் பாடாணங்களும் உப்புக்களும் நீறும். ரசம் கட்டும்.

### காளமேகநாராயணச் செந்தூரம்

என்று திராவகத்தை நயியம்பி யுலா தனிலே
நன்றுமுனி சொன்ன நயமிதுகாண - அன்று
ஆதியாய்க் காள மேகநாராயண னைப்
போதித்துச் செந்தூரம் புகலக் கேள் - நீதியாய் 639

ரசமுப்ப தாகும் நலமான லிங்கரசம்
வசமாய்ப் பதினைஞ்சு மாகும் - நிசமாக
தார மேபத்து தனியான கெந்தகமும்
பாரமில்லை பனிரெண்டு பாகமாய் - நேராக 640

சிலையதுவு நாலு சிறப்பா யிவை ஐஞ்சும்
அலையாமல் பொடித்து அடைவாக - மலையாமல்
குப்பி தனி லிட்டுக்குளிர வேகைபாகத்
தப்பிதமில்லாம லேதானிருக்கு - இப்புவியில் 641

வாலை யடுப்பில் வளமாகச் சொல்லுகி றேன்
கால மயக் குப்பிமண் கட்டி யே - சாலையே
எழுசீலை செய்து யேத்தமாய்ச் சட்டிதனில்
பழுதாகச் செங்கல் படியொன்று - நழுகாமல் 642

உப்புவது நாலும் உண்மை யிவைரண்டும்
தப்பித மில்லாமல் தானொக்க - இப்போது

இடித்துப் பொடித்து இனிய சட்டி தன்னில்
நடித்து நடுக்குப்பி நடு வைத்துத் - தடுத்து 643

சுத்தி யே செங்கலுப்பு சீக்கிரமாய்த் தானிட்டு
பத்திக் கழுத்தளவு பண்பாகச் - சுத்திச்
செலுத்திக் கழுத்தளவு செம்மையாய்த் தான்போட்டு
வலுத்தவே மேலே வளமாகப் - பலுவாய் 644

திரிந்து மே குப்பிவைத்துத் திறமாக மேல்சட்டி
வரிந்து மே மூடி வலுவாக - நிரந்தரமாய்ப்
பொருந்த வே மூடிப் பெல்மா - யுழுந்துமண்
அருந்த வேக்ட்டி அடைவாகத் - தருந்த 645

யெரிக்க வே பனிரெண்டு இன்பமாய்ச் சாமம்
வரிக்க யெடுத்து வகைபாரு - பரிக்க
வுசர வே யேறி வுள்ளபடி சிகப்பாம்
அசர வே சேர்ந்து அதில் நிற்கும் - வசமாய் 646

இருக்குமதைச் சுரண்டி யின்பமாய்க் கேளு
திருக்கத் திராவகத்தால் திரமாக - வருக்க
அரைத்து வறுத்து ஆனதொரு குப்பியினில்
பரைத்துக்கல் லுப்புமுன் போல் - நிரைத்து 647

எரிக்க முன்சாம மிதமாக அஞ்சுதிறம்
பரிக்க எரித்துப் பதம்பாரு - நெருக்கி
யெடுத்து மே பாரு இன்பமாய் நாலுதிறம்
படுத்து மே யடியில் பதமாக - நடுத்து 648

இருக்கு மடியி லின்பமாய்ச் செந்தூரம்
பருக்க இருக்கும் பதிவாக - வருந்திப்
பத்துக்குத் தங்கம் பதிவாக ஒன்று சேர்
முக்தியுட நாகமொன்று முக்கியமாம் - சேர்த்து 649

உருக்கி யுடைத்து ஒன்றாகச் சேர்த்தரைத்து
பருக்க வே குப்பியினில் பாகமாய்ச் - செலுத்தி
வலப் பக்கல் மூடி பலமாகத் தானெரிக்க
பலக்க வே செந்தூரம் பவளமாம் - துளக்க 650

எடுத்து ரவியிலிடு இன்பக் குடவனிடு
படுத்து மதிதன்னில் பாய்ச்சிவிடு - விடுத்து
தனித்தனி யேதங்கமாம் தானூறுக் கொன்றிடவே
செழித்து மேயோகஞ் செயமாகும் - முழித்து 651

செந்தூர மெல்லாஞ் செயமாகு மிப்படியே
வந்து மேசெய்து வளமைபார் - சிந்தாமல்
செய்து முடித்துச் செயமாகப் பாரு
பைய வேகாள மேகம்பார் - வையகத்தில் 652

செந்தூரஞ் செய்வார்கள் சிக்க மணலில் வைத்துச்
சந்து எரித்து சயமில்லா - கந்தியே
ஆகாமல் போக்கி அடைவா யினெந்தல்
பாகாமல் பின் னேபறப்பித்து - வாகாக 653

இல்லாமல் போனா லேங்கித் திரிவாகும்
நல்லா யெரிப்பு நலமில்லை - சொல்லாக
சொல்லித் திரிந்து தொடர்ந்து திரிவோரும்
வல்லமைகள் பேசி வளப்பமாய்ப் - பொல்லாச் 654

செந்தூரமா மோ சிறப்பாகப் பொய்யென்பார்
சிந்தையில் லாமலே சொல்வாரும் - முந்த
வைத்த செந்தூரம் வகையில்லை யென்போரும்
சித்த மில்லாமல் திரிவாகும் - பத்தி 655

பாஷாண்டி தன்னிடத்தில் பதைத்துத் திரி வோரும்
வேஷங்கள் செய்து விருப்பமா - யேழா நாள்
ஓடியே போவாரும் ஒட்டமிகத் தானடைந்து
பாடி யேபிட்சை யெடுத்துத் துண்போரும் - நாடி 656

யிப்படியாகத் திரிந்து யேங்கி முகம்வாடி
மைப்படியுங் கண்ணாள் மேல்மயக்கமாய் - எப்படியும்
அலைந்து வகைகெட்டு ஆடித்திரி வோரும்
தலைந்து வினைகெட்டுத் திரிவோரும் - கலைந்து 657

போகாமல் செந்தூரம் போக் கோடேபாரு
வாகாகக் கைபாக மாடுவாய் - போகாமல்
உலகத்தார்க் கிந்த வுயர்ந்த செந்தூரமாம்
பலகத்துத் தங்கம் பரிவாகும் - நலம் பெறுவீர் 658

## 639 - 658 உரை

தூயரசம் முப்பது இலிங்கரசம் பதினைந்து அரிதர்ரம் பத்து கெந்தி பனிரெண்டு மனோசிலை நாலு ஆகிய ஐந்தும் பொடித்துக் குப்பியிலிட்டுச் செங்கல் மாவுப்புச் சட்டிக்குள் வைத்து எழுசிலை செய்து பன்னிருயாமம் எரி. சிவந்த பதங்கமாகும். எடு. திராவகம் விட்டு வறுத்துக் குப்பியிலடை. எரி. இங்ஙனம் ஐந்துமுறை பத்துக்கு ஒன்று நாகமும் அந்த அளவு தங்கமும் உருக்கியுடைத்துச் செந்தூரத்தோடு சேர்த்துத் திராவகம் விட்டரைத்து எரி. பவளநிறம். செந்தூரம் வெற்றி. ஒவ்வொன்றிலும் நூற்றுக்கு ஒன்றிடு. செம்பொன்னாகும்.

### துரிசுச் செந்தூரம் செய்யுமுறைமை

வைப்புச் சரக்கெல்லாம் வாகாகக் கல்மூடி
செப்பி லெரித்தால் செயமாகும் - இப்புவியில்
வாதத்துச் செந்தூரம் வகையா யடியில் நின்றால்
சேதப்படா பொன்னும் செயமாகும் - நீதமாய்த் 659

துரிசைச் சிவக்க வைத்துத் துப்புரவாய்த் திராவகத்தால்
வரியா யரைத்து வளமாக - யெரியவே
யெரித்து எடுத்து இயல்பாக வைத்து
பரித்துஇனிச் சொல்லுகி றேன்பாரு - சரியாக 660

லிங்க ரசமெடுத்து நேரான திராவகத்தைப்
பொங்கிட வேயூத்தி வைக்கப் பூக்குமே - யுங்கள்
சட்டியிட்டு வுள்ளே சரியான செங்க லொண்ணு
வட்டியா யுப்புப் படிநாலு - செட்டியாய் 661

அரைத்துப் பொடித்து அதிலிட்டிரண்டு விரல்
மரைத்து மேகுப்பி மயங்காமல் - புதைத்து
சந்தெல்லாம் விட்டுச்சதியாய்க் கழுத்தளவு
முந்த வேயிட்டு முறமை கேள் - பிந்தாமல் 662

மேல்மூடிச்சட்டியிட்டு மேன்மைபெற மண்கவசம்
வால்மூடிக் கெட்டிவலுச்செய்து - சால்மூடி
யெரிக்கப் பனிரெண்டு ஏத்தமாய்த் தானே
பரிக்க வேமேலொட்டிப் பக்குவமாய்ச் - சரிக்க 663

சிகப்பாகத் தானிருக்கும் செப்பமாய்த் தானெடுத்து
வகப்பாக முன்துரிசு வகைசேர்த்து - நகைக்க
எடுத்து எடைபாகம் ஏத்தமாய்ச் சேர்த்து
கடுத்துத் திராவகத்தால் காட்டியே - யெடுத்து 664

அடைத்து மேமேரு அடைவாகக் கல்மூடி
கடைத்து எரிக்கத் தாக்கியெடு - தொடைபோல்
செம்பரத்தம் பூப்போல் சேருமேதான் துருசு
வம்பா யெடுத்து வடிவாகத் - தெம்பாக 665

கோசபீசஞ் சேர்த்துக் கோரமாய்த் தானெரிக்க
ஆசையா யெரித்து அடைவாகப் - பாசையாய்
ரவியிலிட நூறு ஒன்று வாகாகத் தங்கமாம்
கவிய வேஞானங் கனிவாகுந் - தவியாதே 666

யெப்படித்தா னென்றா லியல்பான கல்லுப்பு
அப்படி யேரசத்தைக் கட்டுவிக்கும் - இப்படியே
திராமுகமும் சேர்ந்தால் தீரவே கொல்லும்
பராமுகமும் வேதையாம் பாரு - சராபாக 667

கைபாக மெல்லாங் கனிவாக விப்படியே
மெய்பாக மாக விதமாகச் - செய்பாகம்
இப்படிச் செய்யாம லேத்தமணல் கொட்டி
தப்படி யேயெரித்துத் தடுமாறி - மைப்படிந்து 668

அலைந்து கெட்டுத் தேறி அலைந்து தவித்துத்
துலைந்துரச வாதத்தில் துன்பமாய்க் - கலைந்து
பணம் போச்சு தென்று பதிவா யொருவருடன்
கனமாகச் சொல்லுகளைக் காட்டி - யினமாகச் 669

செய்து முடித்துச்சிவ யோகம் பாரு
வை யகத்தில் மானுடர்க்கு மாகுருவாம் - மெய்யா
யிருக்கலா மென்று இயம்பினார் யூகிமுனி
பெருக்கப் பெருஞ்செல்வம் பேராகும் - வருத்தப் 670

படாம லிருந்து வகையான கைபாகம்
பெருக்க வேபாரு புனிதமாம் - வருத்திச்
சரக் கெல்லாங் கட்டச்சாத்தி னேனுலாதனிலே
பரக்க வேபாகத்தைப் பாரு - இருக்கும் 671

## 659 - 671 உரை

வைப்புச் சரக்குக்களைக் **குப்பியி**லிட்டு வளக்கக்கல்லால் மூடி எரிக்க அடியில் நின்றால் வெற்றியாகும். துரிசைச் சிவக்கச் செய்து திராவகம் விட்டு அரைத்து எரித்து எடுத்துவை. இலிங்கரசத்தில் திராவகம் ஊற்றி வைக்கப் பூக்கும். செங்கல் மா ஒன்று கல்லுப்பு நாலுபங்கு பொடித்துச் சட்டியிலிடு. குப்பியில் பூத்த ரசவுப்பிடு. குப்பியை இரண்டு விரற்கடை மணல் மேல் வைத்து மணலிட்டுப் புதைத்துச் சந்துவாய்மூடிச் சீலை மண்செய். சால்மூடிப் பன்னிரண்டு யாமம் எரி. எடு. முன்செய்து வைத்த சிவந்த துரிசினை ஒன்றாகச் சேர். திராவகம் விட்டு அரை. முன்போல் குப்பியில் வைத்து எரி. செம்பரத்தம் பூப்போலாகும். எடு. கோசமும் பீசமும் சேர்த்து அரைத்து மீண்டும் எரி. செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. செம்பொன்னாகும். இது எப்படியாயிற்று என்பாயோ? கல்லுப்பு ரசத்தைக்கட்டும். திராவகமும் சேர்ந்து கட்டும். ஆகவே நெருப்புக்கு ஓடாமல் வலுத்து அடியில் நிற்கும். உருக்கு முகத்திற்கும் ஓடாமல் வலுத்து உருகிப் பாயும் உயர் பொன்னாகும்.

**669 - 671 அறிவுரை.**

### சரக்குக்கட்ட

பாழான மெல்லாந்தான் பதையாமல் கட்ட
வாழ்வான கைபாகம் வகைசொல் வேன் - ஆழாமல்
திராவகத்தை வாங்கு திறமாகப் பீங்கானில்
பரா முகமாய்ப் பச்சை கற்பூரந்தான் - உரப்போடு 672

பொடித்து மேபோட்டுப் போக்கோடே சொல்லுகிறோம்
அடுத்துமே மூன்று அடைவாக - எடுத்து
வைத்துமே கேளு வகையான லிங்கத்தைப்
பத்தில் பழச்சாறு தேன்விட்டு - முத்தி 673

சாமந்தா நாலு சாத்திச் சுருக்கிட்டு
வாமந்தா னெடுத்து வகையாக -
திராவகத்தை நாலு தடையாய்ச் சுருக்கிடவே
பராமுகமாய்ப் பூநீறில் பதமாக - நராமுகமாய்ச் 674

சுருக்கிட் டெடுத்துச் சுருக்கான பூநீறில்
நெருக்கி நடுவைத்து நாடியே - பெருக்கப்
படியொன்று போட்டுப் பதமான பூநீர்மேல்
துடியான லிங்கமதை துப்பரவாய் - நொடியாக 675

வைத்து அதின்பேரில் வாகாயதின் மேலே
சித்தமாய்ப் பூநீறு சிறப்பாக - முத்தி
அமுத்தி யெரிசாமம் அன்பா யெடுத்து
வமுத்தி மறுபடியும் வாகாக - அமுத்தி 676

புகைநீரைத் தாக்கு போக்கோடே அஞ்சுதிறம்
வகையா யெரித்து வளமாக்கு - தகையா
யெரிக்க மடிக்க இன்ப ரசஞ் சாகும்
பரிக்க வேரேக்குத் தொகைபாய்ச்சு - நருக்க 677

வெடுத்துரவி நூறு இன்பமாகக் கொடுக்க
அடுத்து மேதங்கம் அடைவாகும் - கொடுக்க
இப்படியாய்ச் செய்து இயல்பாக வாங்கு
மைப்படியுங் கட்டு வகையாகும் - எப்படியும் 678

கல்லுப்புக் கட்டு கருத்தாகச் சொல்லுகிறேன்
நல்லொத்த கட்டியாய் வாங்கி யே - சொல்லக்
கடல் நுரையை யூதிக் கனக்கவே தானெடுத்துப்
படமாகச் சட்டி தனில் பரப்பி - நடமாட 679

படியொன்று இட்டுப் பகர்ந்த கல்லுப்பை
வடிவா யதின் மேலே வைத்துமே - துடியாக
வைத்து அதின் பேரில் வாகாய்க் கடல் நுரைநீர்
பத்து மேலிட்டுப் பதமாகச் - சித்தமாய்ச் 680

சட்டிமேல் மூடிச் சரியாகச் சீலைமண்தான்
வட்டியாய்ச் செய்து வலுவாக - இட்டமுடன்
எரிக்கப் பனிரெண்டு இன்பங்கா டாக்கினிதான்
பரித்து எடுக்கப் பதமாக - இருக்கும் 681

## 672 - 681 உரை சரக்குக்கட்ட

எல்லாவகைப் பாடாணங்களுங்கட்ட வகைகேள். திராவகத்தை வாங்கிப் பீங்கானிலிடு. பச்சைக்கற்பூரம் பொடித்துப் போடு. மூன்று நாள் வை. பழச்சாறும் தேனும் கலந்து இலிங்கக்கட்டிக்கு நாலு சாமம் சுருக்கிடு. பின்பு எடுத்து நாலு சாமம் திராவகம் சுருக்கிடு. ஒருசட்டியில் ஒருபடி பூநீறிட்டு அதன் நடுவில் சுருக்கு வாங்கிய இலிங்கக் கட்டியை வைத்து மேலும் பூநீறிட்டு அழுத்தி வைத்து எரி. ஒரு சாமம் எரியிட்டெடு. புகைநீர் சுருக்கிடு. முன்போல் எரி. இங்ஙனம் ஐந்து முறை எரித்தபின்பு ரசம் சாகும். அதனில் தங்கரேக்கைப் பாய்ச்சு. செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. தங்கமாகும்.

## 679 - 681 உரை கல்லுப்புக்கட்டு

கடல்நுரையைக் கரியில் வைத்து ஊதி எடுத்து ஒருபடி அளவு சட்டிக்குள் போட்டு அதன் நடுவில் கல்லுப்புக்கட்டியை வைத்து அதன்மேல் கடல்நுரை நீர் போதுமளவு விட்டு மேற்சட்டி மூடிச்சீலைமண் செய்து எரி. பன்னிரண்டு யாமம் எரிக்க வலுவாகக் கட்டுப்பட்டிருக்கும்.

## நாகச்செயநீர்

வெடிப்படங்கும் நீர்சுருங்கும் வேதையாம் நல்ல
தெரிப்படங்கும் பின்பு தெரியக் கேள் - படிப்படியாய்
நாகச்செயநீரு நலமாகச் சொல்லுகிறேன்
பாகமாய் நாகம் பலம்நாலு - ஏகமாம் 682

ரசம்நாலு விட்டு நாட்ட வேவட்டாம்
பசவீரம் அந்திடைக்கிப் பாச்சியரை - வசமாய்த்
திராவகத்தை விட்டுத் தளர வேபீங்கானில்
பராமுகமாய் நாளெட்டும் பார்த்துமே - நிராபோகம் 683

எடுத்து மே வைத்து இதமாக கல்லுப்பை
அடுத்து மே தோய்க்க வதில்வாங்கும் - அடுத்து
இழுக்கு மே நீரை யிதமாகக்கல்லுப்பு
தழுக்கு மே முன்சுண்ணந் தாக்கியே - இழுக்க 684

சட்டியிட்டுத் தானெரித்துச் சாத்தி யெழு சாமம்
கட்டியா யெடுத்துக் கனிவாக - முட்ட
அஞ்சுதிறம் நாகம் அடைவான திராவகத்தில்
கெஞ்சுமே தோய்த்துக் கெடிபடவே - நஞ்சு 685

யெரிக்கக் கடல் நுரையில் இன்பச் சிகப்பாகும்
அரித்துமே செம்பு அடைவாகப் - பரித்துக்
கொடுக்கவே நூறு குணமாக வொன்றிடவே
படுக்கவே மாத்தென்ன பத்துமாம் - முடுக்கி 686

யெடுக்கவே மான இன்ப வுப்புக் காவிக்கும்
அடுத்துமே நிற்கு மடைவாக - எடுத்து
வித்துச் செலவு செய்து வோதாந்தந்தான்பாரு
பத்துமே ஞானம் பலிக்கும் - சித்து 687

ஆடியதோ ராட்டம் அடைவாகக் கல்லுப்பை
நீடியே பார்த்து நிலவரமாய் - நாடி
பார்த்து எனக்குப் பக்குவமாய்ச் சொன்னார்
சேர்த்துப் பிடித்துச் செயம்பார்த்து - நேர்த்தியாய் 688

## 682 - 688 உரை நாகச்செயநீர்

நாலுபலம் நாகமும் நாலுபலம் ரசமும் சேர்த்துருக்கி அந்த எடைக்கு வீரம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்துப் பீங்கானிலிட்டு எட்டுநாள் வை. பின்பு கல்லுப்பை எடுத்து அதில் தோய்த்துப்பார். கல்லுப்பு நீரை இழுக்கும். சட்டியில் முன்சொன்ன கடல்நுரைச் சுண்ணமிட்டுக் கல்லுப்பை உள்ளேயிட்டு ஏழுசாமம் எரி. இங்ஙனம் ஐந்துமுறை நாகத் திராவகத்தில் தோய்த்துக் கடல்நுரையில் வைத்து எரி. சிவப்பாகும். செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. பத்தாகும்.

திருமூலர் வாதகாவியம் ஆயிரத்திலும் நாகச் செயநீர் காண்க.

## உப்புக்கட்ட

கைபாகங் கண்டு கனகமாய்ச் சொல்லிவிட்டேன்
மெய்யா வுலாவில் விரும்பியே - செய்பாகம்
உப்பென்றா லெளிதோ வுண்மை ரசவாதி
அப்புக்கடல் நுரைதா னாச்சுதே - இப்புவியில் 689

கல்லுப்பு லோகத்தைக் கவ்வியே கொல்லும்
நல்லுப்புக் கடல்நுரையு மாச்சுதே - வெல்லுப்பு
கட்டினால் பொன்னுண்டு கட்டாதே போனால்
முட்டுமே யென்ன பலனாகும் - வட்டி 690

கொடுத்தால் பணம் விளையும் கொடுக்காதே போனா
லெடுத்தா லோவென்ன பலனாகும் - தொடுத்த

கல்லுப்பைக் கட்டிக்கனக்க வேவதாதம்பார்
நல்லுத்த வாருதியில் நாதங் காண் - வெல்லும் 691

வேலை முனி மூத்திரமாம் வேண்டு ரசங்கட்டும்
வாலை ரசமட்டும் வளமாகும் - சோலை
குளிபோ லேயாகும் குளறிமன செஞ்சே
துளியான விந்து துடியடங்கும் - நெளியாது 692

வேதைமுகம் ஓடுமது வெற்றிதரும் ஞானம்
பாதைமுகம் வாதம் பலிக்குமே - ஆதரவாய்
அடிக்கலாங் கட்டிய தோர் ஆனவுப்பினாலே
நொடிக்க லாஞ்சரக்கு வகை நுண்மையாய் - படிக்கலாம் 693

வேதாந்தங் கூட்டமாய் விரும்பித் திரியாமல்
ஆதரவாய் ஞானம் அடைவாகும் - போதமாம்
சாரமென்ற வேதை தாக்கியே சொல்வேன்
பாரமா யில்லை பதமாகும் - வாரமாம் 694

**689 - 694 உரை. உப்புக்கட்ட**

கல்லுப்பு லோகத்தைக் கவ்விக் கொல்லும். அதனைக் கட்டு. கடலாகிய முனியின் மூத்திரந்தான் கல்லுப்பு. ரசம்கட்டும். வெற்றிதரும். மற்றவை அறிவுரை.

## நவச்சார வேதை

நவசாரம் நாலு நலமாகச் சுண்ணநீறு
தவமாய்ப் படிரண்டு தான் போட்டுப் - பவமாகச்
சாரமேல் வைத்துச்சாத்த அதின் பேரில்
பாரமாய்க் கல்சுண்ணம் படிரண்டு - பேராய் 695

அமுக்கி அடுப்புதனில் ஆகவேயிட்டுத்
தமுக்கி ஒருசாமந் தானெரித்து - அமுக்கி
யெடுத்துமே பார்க்க யியல்பாக நீர்சுண்டிப்
படித்து வெளுத்துப் பதமாகும் - தடுத்து 696

சீனம் ஒரு சேரு செப்பமாய் ஆதி
ஆன நவசார மதினெடைக்கிப் - பானம்
அரைத்துத் திராவகத்தால் ஆனவுண்டை பண்ணி
நிரைத்துச் சுக்காநீரில் நிலவரமாய்ப் - புதைத்து 697

எரித்து எடுக்க எடைபோகா தானிருக்கும்
பரித்துமுன் னாகநீர் பாலித்துக் - கரித்து
எரித்துமே அஞ்சு இதமாக அஞ்சுதிறம்
பரித்து எடுக்கப் பதஞ்சிகப்பாம் - தரித்து 698

இருக்கும் நவசாரமினிய தொரு கட்டாகும்
தருக்கும் ரவிசெம்பில் தானூறு - பருக்கத்
தாக்கவே தங்கந்தனி வேதை யாகும்
பாக்கியமும் வந்து பலிக்குமே - நோக்கமா 699

யென்னவே செய்து இதமா யமைத்தபின்பு
நன்னயமா யோகத்தை நாடுவீர் - சொன்ன
எல்லாம் நிசமாகு மேறியே வாசிமுதல்
சொல்லாப் பெரியோ ராய்ச் சோதிப்பார் - நல்லா 700

யிருக்க நவசார மிருக்க வேபாரு
நருக்க வழலையது நாடுவீர் - பெருக்கச்
சாரமென்றா லெளிதோ சாத்திரிய ஒன்பதுநீர்
பாரமாய் வைத்தார் பாங்கியே - பாரில் 701

**சலக் கூர்மை யானதுகள் சஞ்சலப் படாமல்**
**பலப்பட்வே** யிப்படியே பாரு - பலமாகும்
**ஆங்கால** மெய்வருத்த வேண்டாமருங் கொம்பில்
**தேங்காய்க்** கிளநீர் போல் சேருமே - போங்காலம் 702

காட்டானை யுண்ட கனியது போலாகுமே
தேட்டாளன் தேடுந்தனமெனவே - பாட்டாகப்
பாடினா ளவ்வை பதறாதே கைபாகம்
தேடி யுலாதனி லேசிக்கிரமாய்ப் - பாடினேன் 703

எண்ணமற்று யோகமுற்று இன்ப ரசவாதி
பண்ணவே தங்கம் பலிப்பாகும் - வண்ணம்
காணவே யுப்பை விட்டுக் கலக்கமாய் வாதி
வேணவே கெட்டான் விருப்பமாய் - மாணிலத்தில் 704

கன்னிதனைக் கண்டு கலங்கித் திரிந்துசெய
முன்னியே கண்டு முயற்சியாய் - நன்னியே
சாரங் கட்டவென்று சலதிச் செயநீரில்
பாரமாய்த் தோய்க்கப் பதிகரைத்து - நீராய்க் 705

கரைந்து எடுத்தெரிந்து கண்கலக்கப்பட்டு
வரைந்து திரிந்து மயங்கியே - நிரைந்து
பட்டபா டெல்லாம் பலனில்லை யென்று சொல்லிக்
கட்டளையா கப்புலம்பிக் கதறு வோரும் - முட்டத் 706

திரிந்து மேமூலிகையில் திட்டமாய்க் கட்டிப்
பரிந்து அலைந்து பரதவிப் போர் - செரிந்து
போகாமல் சாரத்தைப் போக்கோடே கட்டி
வாகாகத் தங்கமயஞ்செய்த - பாகுபோல் 707

## 695 - 707 உரை. நவச்சார வேதை

ஒரு சட்டியில் இரண்டுபடி சுண்ணநீறிட்டு அதன்மேல் நாலுபலம் சாரம் வைத்து அதன்மேல் இரண்டுபடி கற் சுண்ண நீறிட்டு அமுத்தி அடுப்பேற்றி ஒருச்சாமம் எரித்து எடு. சாரம் நீர் சுண்டி வெளுத்துப் பதமாக இருக்கும். அதனெடை சீனம் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து உருட்டிக் காயவைத்துச் சுக்கான் நீற்றுக்குள் முன்போல் வைத்து எரி. எடைபோகாது. நாகச்செயநீர் விட்டரைத்து ஐந்து முறை எரி. சிவப்பாகும். நவச்சாரம் கட்டிவிடும். செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. தங்கமாகும். தனியே மாற்றாகும். எல்லாம் உண்மை.

700 - 707 அறிவுரை

### வெள்ளி வித்தை

சொன்னே னுலகத்தில் சோதிமயமாக
என்னே கைபாகம் இயம்பியே - நன்னயமாய்
வெள்ளி களும்பண்ண விருப்பமாய்ச் சொல்லுகிறேன்
நல்லாக இக்குருவை நாடியே - சொல்ல 708

வெங்கலத்தைத் தானுருக்கு வெள்ளை யென்றபாஷான
முங்கலத்தில் போடமுரியுமே - யுண்கலத்தில்
கொடுக்க வுடையுங் குணமாகும் நெஞ்சே
யெடுத்து அப்பாலே யிதமாக - அடுத்து 709

வைத்துமே அப்புறந்தான் வண்மையாய்க் கேளு
கைத்துமே பூத்தரசங் கட்டியே - பத்துவீர்
எடைசமனாய்ச் சேர்த்து இனமான பன்னிரண்டு
அடைவாகத் தான் கொடுத்தரைக்க - நட்மாடு 710

திராவகத்தை விட்டுத் தப்பாமல் தானரைத்துப்
பரா முகமா இளக்கம் பதமாக - சிரா போகம்

அரைத்து ரவி காயவைத்து அப்பிரக மேல்கவசம்
நிரைத்துப் புடம் கொஞ்சம் நேராக - வரைத்து 711

புடமிட்டெடுக்கப் பெரியகுரு வாகும்
நடமிட்டு வெள்ளீயம் நாற்பதொன்று - இடமிட்டுக்
கொடுக்க வேயெட்டா மேகுற்றிம்லே நெஞ்சே
அடுக்க வெள்ளி அதில் நாலு - தொடுக்கப் 712

போட்டுமே நாலிலொன்று போக்கோடே தானுருக்க
வாட்டுமே வெள்ளி வடிவாதம் - தேட்டு
வருமே வயதுபத்து வடிவான வெள்ளி
தருமே யினிவங்க ந்தானூதப் - பெறுமே 713

ஓடாதே நிற்கும் ஒருவருடன் பேசாதே
பாடாதே யோகமெனப் பாருநீ - நாடாத
பேருடனே சொல்லாதே போக்கோடே - வித்து
ஆருடனே யோகம் அறிகுவீர் - பாரு 714

வெங்கல மென்றாலெளிசு வேதையொன்று **மில்லை**
பங்கபடச் சொல்லிப் பத்தியேயு - ளங்கள்
கலங்கித் திரிந்து காட்டிலே சென்று
நலங்கிச் சுருக்கு நலமாக - விலங்கினமாய் 715

பொலிந்து திரியா தேபோதமட நெஞ்சே
அலுத்துமே நின்று அலையாதே - சலித்துச்
சொல்லா தொருவருடன் சோம்பியே யென்னேரம்
நல்லா யொருவிடத்தினாடியே - வல்லாய் 716

யூகிமுனி நூலை நுட்பமாய்ப் பார்த்து
ஆகியே யெல்லா மடைவாகத் - தியாகி
வாத வுலாவில் வருந்தியே பார்த்துச்
சேதப் படாமலே செய்து - போதம் 717

வருமெனவே பொன்னும் வண்மைத னைப்பாரு
இருமெனவே யோகம் எளிதுகாண் - பெறுமெனவே
வெள்ளிதனைச் செய்து விரும்பியே வித்து
துள்ளியே ஞானத்தைத் துப்புரவாய் - மெள்ள 718

பார்த்து ரசவாதம் பாருலகில் மானுடர்க்குச்
சேர்த்துமே சொல்வீர் செயமாகும் - நாத்து
நட்டுவிளையும் நாடாதே ஒப்பறையாய்ப்
பட்டுப் பகலெடன்னப் பாருலகில் - பட்டுத் 719

## சித்தர்கள் நூல் செய்தது

திரிந்து ரசவெள்ளி சீர்தூக்கிப் பார்த்துப்
பரிந்து நினைவுதனில் பாலித்து - இருந்து
பதினெட்டுப் பேரும் பதிவான சித்தர்
கதிபெறவே வாதங்க சிந்து - விதியாக 720

சோதியைப் பூங்கொடியைச் சூழயுகம் பார்த்து
வாதமெனச் சாத்திரங்கள் பண்ணினார் நீதியாய்க்
காசிபர் வண்ணம் கலக்க மறப் பாடி
நேசமாய் வாதம் நிலைநிறுத்திப் - பாசமாய் 721

ரோம முனிவடுகு நோக்கினார் பாடவே
ராமதே வர்சந்தப் பாநூற்று - தாமியற்ற
நாதிசந்தம் பாடினார் நலமான சங்கமுனி
ஆதிக் கலித்துறையு மன்பாக - ஓதிடவே 722

கொங்கணரும் ரொம்பக் கொட்டி யேபாடினார்
பங்காகச் சட்டைமுனி பாலித்தார் - இங்காகத்
திருமூலர் மந்திரங்கள் திரமாகச் சொன்னார்
பெருநூலாய்க் கோரக்கர் பெந்தனமாய்த் - திருநூலாய்ப் 723

பதஞ்சலியுங் காண்டம் பத்தியுடன் சொன்னார்
நிதமான காலாங்கி நீத்தாரம் - பதமாக
இத்தனை பேரு மிதமாகச் செய்தவகை
முத்திபெறப் பார்த்து முன்னிலையாய் - சித்தமாய் 724

அறிந்து கைபாகம் அன்பா வுலாதனிலே
தெரிந்துமே பாகந் திரட்டியே - அறிந்து
சொன்னேன் அண்ணாமலையில் சீர்தூக்கிப் பார்த்து
அன்னே உலாதனிலே ஆண்மையாய் - என்னே 725

யிருந்து சிலகால மின்பமா யூகிமுனி
அறிந்து மேபாடினேன் அன்பாகப் - பிரிந்து
பாகமெல்லாஞ் சொன்னேன் பத்தியாய்ச் சீர்தூக்கில்
ஆகமத்தி லுள்ள அடைவுதான்வி - வேகமாய் 726

**708 - 719 உரை. வெள்ளிவித்தை**

வெண்கலத்தை உருக்கு. அதில் வெள்ளைப்பாடாணம் போடு. முறியும். உடையும். பூத்தரசம் சேர்த்துத் திராவகம் விட்டுப் பனிரெண்டு யாமம் அரை. காயவை. அப்பிரகக் கவசமிடு. புடமிடு. குருவாகும். வெள்ளீயம் உருகுமுகத்தில் நாற்பதுக்கு ஒன்று கொடு. எட்டுமாற்றாகும். நாலுபங்கு வெள்ளி சேர். பத்துமாற்று வெள்ளியாகும். வங்கங் கொடுத்தூதவோடாது. வில். செலவிடு. ஞானம்பார்.

715 - 719 அறிவுரை.

720 - 726 உரைவேண்டாம்

**நாகச்சுண்ணச் செயநீர்**

நாகத்தின் சுண்ணம் நலமாகச் சொல்லுகிறேன்
பேதப்படாமல் பின்புதான் - ஆதலால்

கைபாக மாய்ச் செய்து கட்ட வேபாரு
மெய்பாகம் நாகம் பலமாறு - செய்யில் 727

கரியில் வைத்தூது கருத்தாக வெள்ளையாம்
பொரி போலே பொரிந்து புகழாகக் - கரியாக
இருக்குமா நீற்றை யிதமா யெடுத்தப்பால்
செருக்குமே வீரந்திரமாய் - அரைக்கப் 728

பச்சைக் கற்பூரம் பதமாகத் தானிறுத்து
இச்சையுடன் வகைக்கு இன்பமாய் - தச்செயமாய்
வகைக்கு ஒன்று சேர்த்து வளமாய்த் திராவகத்தால்
தகையாகத் தானரைத்தால் தாட்டிகமாய்த் - தொகையாய் 729

அரைத்து ரவிதனி லே அடைவாகத் தான்காயும்
பரைக்கு மேசுண்ணத்தில் பதித்து - வரைக்க
ளிக்க இருசாம மெடுத்து மெள்ளக் கேளும்
தரிக்கத் திராவகத்தைத் தானூற்றி - முறைக்க 730

மூன்றுநாள் வைத்து முக்கியமாய் லிங்கமுதல்
ஆண்டுமே வீரம் அடைவாகச் - சென்று
தாளகமு மெல்லாந் தனித்தனியே சுருக்கிட்டுப்
வாளகமாய்ப் பூநீறில் வைத்தெரிக்க - நாளாக 731

இப்படியே அஞ்சுதிறம் ளிக்கவே கேளு
அப்படியே கட்டு மடைவாகத் - தப்பாமல்
செம்பு மதிதனிலே சேர்த்துக் கொடுத்தூது
தெம்பாக மாத்துச் செயமாகும் - வம்பா கேள் 732

பத்துமே மாத்துப் பதிவாகு மிப்புவியில்
நத்து ரசவாதம் நாடுங்காண் - பித்துப்
பிடித்தவன் போலே புலம்பித் திரியாதே
அடித்தவன் போலு மழுகாதே - படித்து 733

கத்து உலாதனிலே காரியங்கள் பாரு
நத்து ஒருபொருளை நாடுவீர் - வித்தகமா
மூன்றுதிறம் பாரு முக்கியமாய்ச் சோதித்து
வான்றுமே நாகம் வளமாக்கும் - ஏன்று 734

சரக்கெல்லாங் கட்டித்தனி வேதையாக்கு
பரக்கென்று முழித்துப் பாராதே - வரக்கப்
பேசாதிருந்து பிரணவத்தை நோக்கு
ஆச்சாரமாக அதில் நின்று - பாசம் 735

நாகச்செயநீர் போல்நானறி யேன் கேளு
பாகமா யூகிமுனி பாவித்தார் - வாகமா
யென்று செயநீரை யின்பமாய்ச் சோதிச்சு
அன்று சரக்கை அடைவாக - நன்றி 736

கட்டினால் வாதங் கனக்க வருமெனவே
கொட்டினால் தேளாகுங் கொள்கை போல் - திட்டிகமா
யிருந்து தவியாதே மின்ப ரசவாதம்
அறிந்து ஒருபொருளை ஆடுவீர் - பொருந்தி 737

வருமெனவே யென்று வழிபார்த்து நில்லு
பொருமெனவே செல்வம் புகலும் - இருமனமே
சொன்னாரே யூகிமுனி சொற்பெரிய அப்பொருளை
நன்னயமாய்க் கைபாகம் நாடுவீர் - முன்னே 738

## 727 - 738 உரை.

நாகச்சுண்ணச் செயநீர், ஆறு பலம் நாகம் எடுத்துக் கரியில் வைத்து ஊது. வெள்ளையாய்ப் பொரிபோலேயிருக்கும். இதனொடு வீரம்சேர். பச்சைக் கற்பூரமும் சேர். திராவகம் விட்டு அரை. காயவை. சுண்ணத்துக்குள் வைத்து எரி. மூன்று-நாள் எரித்து எடுத்துப் பீங்கானில்

போட்டுத் திராவகம் ஊற்றி மூன்று நாள் வை. இலிங்கம் வீரம் தாளகம் இவற்றிற்குத் தனித்தனியே சுருக்கிடு. பூநீற்றுக்குள்வைத்து ஐந்து முறை எரி. கட்டும். செம்பில்கொடு. தங்கமாகும். மாற்று பத்தாகும்.

733 - 738 அறிவுரை.

## ரசநாக செந்தூரம்

செந்தூரஞ் சொன்னேன் சிறப்பான பாகமெலாம்
விந்தை கடைசிதனில் விளம்பினேன் - சுந்தரமாய்ப்
பச்சைரசம் வாங்கிப் பதியபலம் போட்டு
யிச்சையுட னாகம் யிரண்டுபலம் - தச்செயமாய் 739

உருக்கக் கரியாகும் உற்றமடநெஞ்சே
பெருக்கவே குப்பிதனில் போட்டுச் - செருக்கத்
தாரமரை யுடைத்துத் தக்க கெந்தி நாலிலொன்று
பாரமாய் நிறுத்துப்படி போடு - நேராகக் 740

குப்பிதனி லிட்டுக்குணமா யெழுசீலை
தப்பிதமில் லாக்குப்பி தானரையாம் - இப்புவியில்
இட்டு மருந்தை யின்பமாய்க் கேளும்
தட்டுமே சட்டி தனில் கேளும் - பட்டவரே 741

உப்புபடி நாலுவுசந்த செங்கல் மாவொன்று
தப்பித மில்லாம லேதானரைத்து - இப்புவியில்
அரைத்துமே சட்டியிடு அன்பாகக் குப்பிநடு
பரைத்துமே வைத்துப் பதிவாகச் - திசைத்து 742

மூடியே செங்கலுப்பை முத்தி பெறக்குப்பிக்கு
அடியே மூடஅது வேண்டாம் - பாடி
மேல்சட்டி மேன்மை மேன்மை பெறச்சுத்தி
ஆல்சட்டிச் சீலை அடைவாக - மேலே 743

மண்சீலை செய்து மயங்கா தேகேளு
பண்ணிப் பரியப் பனிரெண்டு சாமமெரி - உண்ணாசிலை
யெரிக்கப் பனிரெண்டு யின்பமாய்ச் சாமம்
பரிக்கவே யேறிப் பயிராகும் - இருக்கும் 744

மஞ்சள் போலேறி மயங்காமல் தானிருக்கும்
தஞ்சமயிர்க் குச்சியால் தான்வழித்து - எஞ்ச
அரைத்துத் திராவகத்தா லான வெட்டு சாமம்
பரைக்கரவி காயவைத்து பன்பாக - நிரைக்க 745

அடைத்து முன்போலே ஆனவுப்புச் செங்கல்மா
படைத்துமே மூடியே பக்குவமாய்த் - திடைத்து
எரிக்கவே யேறும் இன்பரச வாதிகளே
அரிக்கவே மேல்சட்டி அதில்நிற்கும் - பரிக்க 746

எடுத்துமே நாலுதரம் எரித்திடவே கேளு
அடுத்துமே நிற்கும் மடியில்தான் - எடுத்துத்
தங்க மொன்று நாகமொன்று தப்பாமல் சேர்த்து
மங்கல மாயரைத்து வலுவாக - உங்கள் 747

குப்பியிட்டுத் தானடைத்துக் குமுறகுப்பி வாய்தனிலே
தப்பித மில்லாமல்கல் தான்மூடி - இப்புவியில்
எரிக்க வேசெந்தூர மின்பமுருக்கினுட
அடுத்துமே பூப் போலேயாகுமே - படுத்து 748

நூறுரவி தன்னில் நுணுக்கமா யிட்டால்
பேறாமே மாத்துப் பிரபலமாம் - பாராய்
தங்கமயமாகும் தாய் சொல்ல யான்கண்டேன்
உங்கள் தவமீடேறு முண்மையாம் - தங்க 749

செந்தூர மெல்லாஞ் செயமாக விப்படியே
முந்தவே செய்து முடித்தேன் - சிந்தையாய்க்
காயசித்தி பண்ணக் கடிதான செந்தூரம்
நாயமாய்த் தின்று நலம் பெறுவீர் - தாயகமாய் 750

மண்டலத்தி லுண்டால் வலுவாகும் வாசிதான்
கண்டவிடத்தில் கருதாதே - மண்டபத்தில்
நாய்போலெழுதி நலமாகத் தானிருக்க
காயமுள்ள நாய்தானுங் கண்டுமே - போயி 751

குலைத்துமே யூளையிட்டுக் குக்கலைப் போல
மலைத்துமே நூல்பார்த்து மயங்கி - வலைப்படா
மீன்போல வாடிஅழுது தரியாதே
வான் காற்றை போலும் வளையா தே - ஏன்காணும் 752

பண்டோர்கள் பாடினதைப் பார்த்து மேகைபாகம்
பண்டாகச் செய்து பதம்பாரு - தண்டாக
அடித்து மயங்காதே ஆனரசம் பாரு
பிடித்து மேசெந்தூரம் பின்புகேள் - வடித்து 753

பண்ணிமுடித்துப் பதிவாகச் செம்புதனில்
ஒண்ணிக் கொடுத்தா லுயிருமாம் - கண்ணில்
கண்டால் தெரியு மெனக் கருத்தில்லார் சொன்னால்
முண்டான பேச்சால் முடியாது - துண்டாகச் 754

செய்துமே பார்த்தால் தோன்று மெனநீதி
பைய வுலாவிலே பத்துவீர் - மெய்யா
சித்த ரென்ற நாமம் சீக்கிரமாய் வந்தபோர்
அத்தனையு மவிந்தா லடைவுகாண் - பெத்தனைதான் 755

சொன்னால் தெரியாது சொற்புவியில் மானிடரே
உன்னால் விளம்பர வுயர்வாகும் - என்னால்
முடியாது என்று முயங்கித் திரியாதே
படியா உலாவதனை பற்றி - யடியாக 756

சாத்திரத்தைப் பார்த்துச் சரியாகச் செய்துகொள்ளு
பார்த்து உலாவைநீ பற்றுவாய் - நேர்த்தியாம்
தங்கமுண்டு வெள்ளியுண்டு தக்க பணங்களுண்டு
திங்களைப் போல் வாழ்வீர் திறமாக - மங்கலமா 757

யிருப்பீரென முனிவரின்ப ரசவாதிக்குப்
பெருக்கவே சொன்னார்கள் பின்புகேள் - பருக்கா
ரசத்தை யினிப்பாரு நல்லாகு ஞானம்
துசப்பட வேவந்து துடியாகும் - நிசமாக 758

## 737 - 758 உரை. ரசநாகச் செந்தூரம்

நாகம் இரண்டு பலம். ரசம் ஒரு பலம். நாகத்தை யுருக்கி இறக்கி வைத்துக்கொண்டு அதன்மேல் ஓட்டைக்கண் சிரட்டையை வைத்துக் கொண்டு அதன்மேல் ரசம் ஒருபலம் ஊற்று. சேரும். எடுத்துக்குப்பியிடு. பாதி அரிதாரம் பொடித்திடு. நாலில் ஒன்று கெந்தி பொடித்திடு. ஏழு சீலை மண் செய். நாலுபடியுப்பும் ஒருபடி செங்கல் மாவும் சட்டியிலிட்டு அதற்குள் குப்பிவை. மேற்சட்டி கவிழ் சட்டியாக இட்டு மண்சீலைசெய். பன்னிரண்டு யாமம் எரி. மேலேயேறிப் பதங்கமாகும். மஞ்சள் நிறமாகும். எடுத்துத் திராவகம் விட்டரை. எட்டுச் சாமம் அரைத்துக் காயவை செங்கல்-உப்பு இவற்றின் தூளிட்டு முன்போல் எரி. நாலு முறை இப்படி எரி. எடு. தங்கம் ஒருபங்கு நாகம் ஒருபங்கு உருக்கியுடைத்துச் சேர்த்துத் திராவகம் விட்டரை. காயவை. குப்பியிலிடு. குப்பி வாய்மூடு. எரி. செந்தூரம் முருக்கம்பூப்போலாகும். செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடு. தங்கமாகும். தாய்சொல்ல யான் கட்டேன். உங்கள் தவம் ஈடேறும். உண்மை.

750 - 758 அறிவுரை

## துருசு குரு

இருக்கவே செந்தூர மின்பமாய்ச் சொன்னேன்
பெருக்க ரசவாதி பேசுவீர் - நருக்காய்த்
துருசு செயகுருவாய்ச் சூழ்ச்சமாய்ச் சொல்லுகிறோம்
பரிசான போகம் பதமாக - உரிசையாய்ச் 759

சொன்னா ரெனக்குச் சுருக்கமாய்க் கைபாகம்
பன்னாளில் ரோமம் பக்குவமாய் - அன்னாளில்
கூப்பிட்டுச் சொன்னார் கோரமாய்க் கைபாகம்
வாய்ப்பிட்டுச் செய்ய வள்மாகச் - சேப்பிட்டு 760

கைபாகங் கண்டு கனக்கவே நானுலகம்
மெய்பாக மாக விரித்துமே - செய்பாகஞ்
சொல்லக் கேள்வாதி செயமாய்த் துரிசதுதான்
மெல்லக் கேள் பூநீறு பலமொன்று - நல்லக்கேள் 761

நவசாரம் ஒன்றுநாட்டி எடைசமனாய்ப்
பவமாகச் சேர்த்துப் பரிவாகத் - தவமாக
அரைத்து உடுநெருப்பில் ஆட்டி வறுத்துத்
தரைத்துமே வுப்பாக்கித்தான் கேளும் - பரைத்துச் 762

சுண்ணத்தில் வைத்துத் துருசாய்ப் புடமிடவே
தன்னால் செயசுண்ணந் தானாகு - மின்னே
யெடுத்துப் பனியில் வைக்க ஏத்த சல மாகும்
அடுத்து மேஇந்துவுடன் அதுரண்டு - கடுத்து 763

அதில் ரொம்பவிட்டு ஆட்டிவில்லை செய்து
பதிவாய் ரவிதனி லேபத்தியாய் - வதிலாகப்
போட்டுச் சுண்ண நடுவில் போக்கோடே வுள்வைத்துக்
காட்டுப் புடமிட்டுக் காதலாய் - நாட்டு 764

எடுத்துமே பீங்கானி லிட்டுமே கேளும்
அடுத்துத் திராவக மதிலிட்டுக் - கடுத்துப்
பார்க்கவே பொங்கும் பதிவீரன் போகர் சொன்ன
ஏற்கவே வீரமிதில் போட்டு - ஆர்க்கப் 765

பச்சசைக் கற்பூரம் பதிவாகக் கால்பலந்தான்
இச்சையுடன் போட்டு இதமாக - நிச்சயமாய்த்
தயிர் போலே ஆகுந்தண்மையாத் தான்துரிசை
ஒயிலாய்த் துவைத்து உறுதிகேள் - பயிலாகத் 766

தோய்த்து ரவியிலிட்டுத் தொன்மை பெற வெட்டுநாள்
வாய்த்த ரவியில் வளமாகப் - பாய்த்துப்
போட்டு எடுத்துப் புகலரிய அண்டத்தை
வாட்டுக் கரியில் வளமாகச் - சாட்டி 767

யூதியெடுக்க வுயர்வான சுண்ணமாம்
பாதிமதியணிந்த பரமனார் - சேதி
கேட்டுமே சொன்னார் கிருபையாய் அந்நேரம்
வாட்டுமே சீனம் வளமாகப் - போட்டு 768

ஊதியெடுத்து உண்மையாய் ரண்டையுந்தான்
பாதித் திராவகத்தைப் பாய்ச்சி - ஒதி
அரைத்துப் புடமிடவே அன்பாகச் சுண்ணமாம்
பரைத்து முன்துரிசு பதியவே - வரைத்து 769

பெருக்கம் கவசமிட்டுப் போக்கோடே காடை
தருக்கப் புடம் போடத்தானீறும் - வருக
எடுத்து விராலியிட்டுமே கேளும்
படுத்த தண்ணீர் போல்பாலாகும் - தடுத்து 770

## 759 - 770 உரை. துரிசு குரு

பூநீறு ஒருபலம். நவாச்சாரம் ஒரு பலம் சேர்த்து அரைத்து உமி நெருப்பில் வறுத்து உப்பாக்கிச் சுண்ணத்துக்குள் வைத்துப் புடமிடச் செய சுண்ணமாகும். பனியில் வைக்க நீராகும். அத்துடன் இந்துப்பு இரண்டு பங்கு சேர்த்து அரைத்து வி.த.கா. சுண்ணத்தின் நடுவில் வைத்துப் புடமிட்டெடுத்துப் பீங்கானில் போட்டுத் திராவகம் விட்டுப் பார்க்கப் பொங்கும். அதில் வீரமிடு. காற்பலம் பச்சைக் கற்பூரமும் போடு. தயிர் போலாகும். அதில் துரிசைத் வைத்துக் காயப்போடு. எட்டுநாள் போட்டு எடு. அண்டவோட்டைக் கரியில் வைத்து ஊதிச் சுண்ணமாக்கு. சீனத்தை ஊதி எடு. இரண்டையும் சேர்த்துத் திராவகம் விட்டரைத்துப் புடமிடு. சுண்ணமாகும். எடுத்தரைத்துத் துருசுக்குக் கவசமிட்டுக் காடைப்புடமிடு. நீறும். விராலியிலையில் போட்டுப் பிழிந்து எடுத்து மேற்செய்முறை முன்போற் செய்க.

### விர மெழுகு

பாழான மெல்லாம் பதைத்து ஒரு நொடியில்
தாழாகக் கட்டுந் தளமாகும் - வாழ் ஆகும்
லிங்கத்திலே சுருக்கு நேராகப் போடு
அங்கமாய்க் கட்டி அது மெழுகாம் - தங்கம் 771

ஆகுமேபாரு அடைவாக இன்னமொன்று
தாகுமே சொல்வேன் தான்மெழுகாய் - ஆகும்
வீரமெழுகாகும் விந்தையாய்க் கேளு
பாரபில்லைக் கரண்டி பாய்ச்சியே - நீராய்ச் 772

சுருக்கியிடு மெழுகாம் சுத்தரவி தன்னிலே
பெருக்க இறுகப் பெலத்தங்கம் - இருக்கும்
தங்கமய மாகும்தாய் சொல்ல யான்கண்டேன்
பங்கமில் லாமலே பாருநீ - திங்கள் 773

பேரால் நிலவரமாய்ப் பேரான நேசமெல்லாம்
வாரா யிருக்கும் வலுமையாய்ச் - சீராக
இருக்கும் ரசவாத மின்ப ரசவாதி
பெருக்க மிகச் செல்வம் பெருக்கியே-பருக 774

## 771 - 774 உரை. வீரமெழுகு

முன்செய்த துரிசுகுரு நீரால் பாடாணமெல்லாம் கட்டும். இலிங்கம் கட்டி மெழுகாகும். அதனால் தங்கம் ஆகும். வீரத்தைக் கரண்டியில் வைத்துச் சுருக்கிடு. மெழுகாகும். தூய செம்பிற்கொடு. வலுத்த தங்கமாகும். தாய்சொல்ல யான் கண்டேன்.

### தாளக வேதை

இருக்குமே தாளகத்தை யேத்த சுண்ணநீரில்
அருக்குமே கோதிட்ட லம்பி - வருக்க
எடுத்துக் கரண்டி தனிலின்பமாய் வைத்துப்
பருத்துச் சுருக்கிடுநீ பார்த்து - நருக்க 775

மாகிமெழுகாகும் வல்லமையாய்க் கேளு
பாகு போல் தானிருக்கும் பார்த்துமே - யோகி
யெடுத்துரவி நூறி லின்பமாய்த் தான்கொடுக்க
அடுத்து மேஅணி அதிலெட்டாம் - எடுத்து 776

வித்துச் செலவு செய்து வேணசிவ யோகம்
நத்துமே பாருநலமாக - மத்தி
தருகுமே யோகம் தண்மையாய் ஞானம்
பெருகுமே வந்துபிலப்படுமே - தருகும் 777

துன்பமாய் வாசியிருக்கு மேஅந் நேரம்
தென்பாக வந்து செயமாகும் - இன்பமாய்

தாளகத்தின் தன்பெருமை சதாசிவனார் சொல்லத்தான்
வேள்மதனைப் போலே விருப்பமாய் - ஏழாய் 778

இருக்குமே தங்கமினிய நவ லோகம்
பெருக்குமே வாய்க்கும் பிலப்படுங்காண் - நருக்க
இருந்துமே தாளகத்தை யின்பமாய்ப் பாரு
அருந்துமே பொன்னும் அடைவாகும் - வருந்தி 779

பார்த்தால் தெரியும் பதிவான நெஞ்சகமே
போத்தியே பாரு பிலப்படுத்தி - வாழ்த்தி
யிருந்து மனத்தை மிருத்திமிகப் பாரு
அருந்து மேபொன்னும் அடைவாகுந் - தருந்த 780

அரிதாரப் பொன்னுக்கு ஆணியுண்டோ என்மனமே
பரிவான தங்கம் பதமாகும் - நெறிவாக
இருக்கா தேபாரு ஏழைமட நெஞ்சே
பெருக்கவே தாளகத்தைப் பிரபலமாய்ச் - செருக்க 781

## 777 - 781 உரை. தாளக வேதை

தாளத்தைச் சுண்ணநீரில் தொங்கட்டங்கட்டி எரித்து அலம்பிக் கரண்டியிலிட்டுச் சுருக்கிட்டுச் செம்பில் நூற்றுக்கு ஒன்றிடு. எட்டு மாற்றாகும். அரிதாரப் பொன்னுக்கு ஆணியில்லை. அறிக.

## துரிசு வேதை

பார்த்து மே கட்டும் பதப்படுத்திப் பாரு
சேர்த்துமே தங்கஞ் செயமாகும் - பேர்த்துத்
திரியாதே யென்று திரமாக யூகிமுனி
சரியாகக் கைபாகந்தான் சொன்னார் - வரியாகப் 782

பார்த்துத் துரிசைத்தான் பதப்படுத்திக் கொள்ளு
சேர்த்து ரசங்கட்டுஞ் சீக்கிரமாய் - வாதி
தேகமனித்திய மாந்தேற்றிக் கோவுன்மனசைப்
பாகமாய்ச் செய்தால் பதமாகும் - வேகம் 783

நீதியாய் வாழ்ந்து நிலவரமாய்த் தானிருக்கப்
பாதிமதி யணிந்து பரமனார் - சோதி
பார்த்துமே செம்பு பழுக்க வைத்துக் கேளு
சேர்த்துக் கவச குண்டலஞ் செய்து - காத்துக் 784

காதிலே போடுகனக்க வேருத்ராட்சம்
பாதிமதி யணிந்த பரமனைப் போல் - போதி
வுருச் செவித்துப்பாரு உண்மையாய்த் தான்காணும்
வருச் செவித்தால் யோகம் வளையுமே - கருப்போ 785

லுருவாகத் தோணு முத்தரச வாதம்
பெருகவே தானே பெலப்படுங்காண் - வருக
வேட்டுவனைப் போலே வேண்டிப் புழுவெடுத்து
நீட்டை செய்யத்தான் புழுவு நேசமாய் - மூட்டத் 786

தன்னுருவு போலத் தாக்கிக் குளவியாம்
பின்னையொன்று சொல்வேன் பிரபலமாய் - என்னே
யுலாவில் மனதூணி யுண்மையாய்ச் சோதித்துப்
பலாபலங்க எல்லா நீபார்த்து - நிலாப்போல 787

பார்த்து எடுத்தால் பதமாகுந் தங்கம்
சேர்த்து நவலோகஞ் சேரில் - மாத்து
ஆகும் ரசக்காடு அடுத்துத் துரிசைப்பார்
யோகம் விளையுமொரு நொடியில் - பாகம் 788

**782 - 788 உரை**

துரிசுநீர் செய்துகொள். ரசம்கட்டும். பொன்னாகும். கவசகுண்டலஞ் செய்து காதில் அணி. உருத்திராக்கமணி மாலையணி. மதியணிந்த பரமன்போல் இருந்து உருச்செவி. தவம் உண்டாகும்.

## வங்கவேதை

வங்கத்தைப்பாரு வளமாய் வெடியுப்பைத்
திங்கள் பேர லஞ்சு திரங்காச்சு - பொங்கமாய்ச்
சீனத்தைப் பாரு சிறப்பாகப் பூநீற்றை
வானத்த சாரம் வகையாக - யேனொத்த 789

சுண்ணத்தைப் பண்ணு சூட்சமாய்த் திராவகத்தில்
முன்னொத்துப் போட்டு மொலுமொலுங்கும் - பின்னொத்துத்
துரிசைநீ தோய்த்துத் துடியாய் ரவிதனிலே
வரிசையாய்ப் போட்டு வண்மைபார் - தரிசனமாய் 790

வேதையாம் பாதைவிளக் கொளியு மாகும்
பாதையாம் தங்கம் பதிவாகும் - தேதையாம்
காரியமு மாகும் கடியவே யெல்லாம்
வாரிமா மெல்லாம் வளமாகும் - போரியாம் 791

பத்திமுத்தியாகும் பாடவருள் பெருகும்
சித்திமுத்தி யாகுஞ் செயமாகும் - வித்தகமாம்
அருள்பெருகும் யோகமான துரிசியினால்
பெருவாழ்வுதந்து பெலப்படுங்காண் - நிருபருட 792

னெல்லாரும் வந்துயென்குருவே யென்பார்
சொல்லா தேயென்று துடியாக - வல்லாரை
இருக்குமிடந் தேடியின்ப வுலாவில்
பெருக்க நினைந்து பிரபலமாய் - வருக்கப் 793

பார்த்து எடுத்துப் பதிவாகத் தங்கஞ்செய்
வாழ்த்தி யிருந்து வடிவாகும் - போத்தி
யிருமன மேயென்று இயம்பினார் யூகிமுனி
தருவுலா வில்லதனைத் தான்நம்பு - பெருக

## 789 - 794 உரை

வெடியுப்பை ஐந்துமுறை காய்ச்சு. சீனத்தைச் சுண்ணம் செய். சாரமும் பூநீறும் சுண்ணம் செய். திராவகத்தில் போடு. துரிசினைத் தோய்த்துக் காயவை. திரவகமாக்கு. மாற்றாகும்.

### தங்கநீற்றினம்

தங்கமது நீறத் தாக்கி யேசொல்லுகிறே
னுங்கள் மனது ஒருமித்து - மங்களமாய்ப்
பாருமே கைபாகம் பார்த்து எடுக்கச்
சேருமே தங்கந்திரமாகும் - பேறு 795

உழுதாற் பயிராகு முண்மை யிதுநிசமாம்
பழுதாகப் போகாதுபாரு - வழுவாது
சீனத்தை யூதுசிறப்பாகச் சுண்ணமாம்
பானத்தால் நின்று பதியாதே - யேனத்தை 796

பார்த்து வைத் தூதிப்பதிவா யொருபலந்தான்
சேர்த்துக் கலுவத்தில் சீராகச் சாத்துத்
திராவகத்தை விட்டரைத்துத் தண்மை யுமி நெருப்பில்
பராமுக மாகப் பதையாமல் - தராதரமாய் 797

வறுத்து வில்லை செய்து வளமாய் ரவியிலிடு
பரித்துச் சுண்ண மேற்கவசம் பாலித்து - நிறுத்துப்
புடமிட் டெடுத்துப் பேறான சூடனெடை
தடமாய்த் திராவகத்தால் தானூட்டி - யடைவாக 798

வில்லை ரவியில் விதமாகக் காயவைத்துச்
சொல்லாற் பெரிய சுண்ணஞ் சூட்டியே - மல்லாகக்
கவசமிட்டுக் காயக் காடைப்புடம் போட்டுத்
தவமா யெடுக்கத் தவளம் போல் - நவமாக 799

இருக்குமே சூடனின்று கடுஞ்சுண்ணம்
செருக்க இருக்குஞ் செயமாகும் - நருக்க
எடை யேக மாட்டா திருக்குமே கேளு
நடை சேரு பூத்தரச மாண்மையாய் - இடைசேரு 800

சேர்த்துத் திராவகத்தால் செப்பமாய்த் தானரைத்துப்
பார்த்ததுமே தங்கம் பதிவாகச் - சேர்த்து
அடுத்துமே பையா அதின்மேல் கவசமெடை
படுத்து ரவிகாயப் பண்பாகத் - தடுத்து 801

காயவைத்துக் காடை கவுதாரி தன்புடத்தில்
உபாயமாய்ப் போட அதுகுருவாம் - நபாயமாய்
போடவே நிறமும் பெருமை பெறத்தான் குருவாம்
ஆடவே நூறு ரவியிலிடு - பாடியே 802

மாத்துத்தான் பத்தா மயங்காமற் பாரு
சேர்த்துமே செல்வஞ் செயமாகும் - பார்த்து
யேமமதுநீறிலேத்த ரவிசிறக்குந்
தாமமது தங்கந் தயவாகும் - வாமமென்று 803

சூதமது கட்டச் சுயமாகச் சொல்லுகிறேன்
சேதமில்லாமல் செயமாக - போதும்
வருகும் ரசநூறு வாங்கி அயக்கரண்டி
பெருகு மேவிட்டுப் பிரபலமா - யுருகும் 804

சுண்ணமொன்று போட்டுச் சுகமாக நீர்பிழிந்து
நன்னயமாய்க் காய்ச்சி நலமாக - இந்நேரம்
கட்டுநல்ல வெள்ளி போல் காரணமாய்த் தானிருக்கும்
பட்டுநூல் தன்னில் பதமாக - போட்டுக் 805

கோத்துமே போட்டுக் குலாவு சிரந்தன்னில்
பார்த்ததுமே அஞ்செழுத்துப் பாவிக்க - ஏத்தி
வுருச் செவிக்க மாரணமா முண்மைரச யோகம்
பெருக்கவே வந்து பிலப்படுங்கான் - வருகவே 806

அட்டகர்ம மெல்லாம் ஆகுமே யோக
மெட்டெட்டுச் சித்தியா மின்பமாய் - முட்ட
வருந்தத் தவயோகம் வந்திடுமே தானே
பெருகும் ரசவாதம் பிரபலமாய் - வருகும் 807

சீனத்தைப் பாரு சிறப்பாய் திராவகத்தை
வானத்தைப் பாரு வகையாக - யேனோ
சூடனைத்தான் பாரு சுருக்காகத் தங்கத்தைப்
பாடாகப் பார்த்து பதமாக்கு - வேடாக 808

சூதத்தைக் கட்டு சுருக்காய்ப் பிரிவிளங்கை
வாதத்தைப் போட்டு வகைபண்ணு - போதம்
என்றிப் படியே யிதமாகப் பண்ணிவெகு
மன்று நடனத்தை மாத்திவிடு - சென்று 809

காயசித்தி பண்ணு கடிதான செந்தூரம்
பாயவைத் துறுதியாய்ப் பாரு - சேயமாம்
மண்டலத்தில் தின்று மயங்காமல் கைப்புவுப்பு
தண்டமாய்த் தள்ளு திடமாகச் - சென்று 810

நல்லெண்ணெய் விட்டுநயம் பெறவே சாதித்து
மெல்ல வேஞான மெனநாடு - வல்லமையாய்
வேதாந்தத் தோடு விரும்பியதில் நில்லு
பாதஞ் சிவனடியைப் பாரு - நாதமாய் 811

நின்று தவசு நெடு நாளிருந்து விட்டுச்
சென்று சிவபூசையிலே தேட்டமாய் - நின்று
இருந்துநலம் பெற்று இன்பரசம் தன்னைப்
பொருந்திக் கொன்றா லேபிலப்படுங்காண் - அருந்தச் 812

செந்தூரஞ் செய்து சிறப்பாய் ரவியிலிடு
விந்து போல் தங்கம் விளைவாகும் - முந்த
காசிமகா மேருபோல் கனக்கக் குடமதனை
ஆசையாய் வைத்து அதிலெரிநீ - மோசம் 813

வாராது மாகும் வல்லமையாய்ச் செந்தூரம்
காராகு மிப்போ கருணையாய் - நிராதார
மாகநீ செய்தால் புரளாதே யோடிப்போ
மெல்லாமுன் கைபாகம் வேணுங்காண் - சொல்ல 814

திரிந்து ரசவாதஞ் சிக்குமே போங்காண்
பரிந்துமே செய்து பதமாகும் - வருந்தி
திரிந்து அலையாமல் செயமாகுந் தங்கம்
பருந்து போல் தானலைந்தான் பதமாக - இருந்து 815

பார்த்துமே தங்கம் பதியான வாழ்வை
யேத்தியே விரத மெழுசீலை - போத்திக்
கட்டிச் சயப்படுத்து காரியமாய் - வைத்து
பட்டு வருமே பண்பாக - முட்டவே 816

பார்த்து முடியும் பதிவான யூகிமுனி
சேர்த்துமே சொன்னார் செயமாகப் - பார்த்து
வருகும் ரசவாதிகளே வல்லமையாய்க் கேளு
தருமே பொருளதுதான் தாட்சியிலை - பெருகும் 817

என்றிப் படித்தா னியம்பினார் யூகிமுனி
யன்றிப் படித்தா ரனேகமுமாய்ச் - சென்று
இருந்தண் ணாமலையி லின்பமாய்ப் போகமுனி
வருந்தியே வந்து வலதா - யிருந்துமே 818

யெங்கே போகிறீ ரென்றா ரின்ப ரசமேரு கிரி
அங்கே போவோமென்றழைத்துப் போய் - எங்கள்
நூனாதி தேவருமே நேர்வடக்கே சென்று
யேனாதி கயிலைக்கி யேகியே - போனாரே 819

போயிக் கயிலைகிரி போக்கோடே சென்று
யோகியே கயிலையுரை நாதரே - வாகி
கண்டு சேவித்துக் கனகக் குளிகையிட்டுப்
பண்டுமே கவுனம் பறக்கயிலே - சென்று 820

மூலிகையி லெல்லா முக்கியமாய்ப் பேசிவர
மாலிகை யிலுள்ள மலரதுவும் - கோலிவர
மலையிலுள்ள பாஷாணம் வகையாகக் கொண்டு
தலைமையான யெடுத்து மேதான்கட்டி - நிலையாக 821

வந்து திரு வண்ணாமலையின் குடிதனிலே
சிந்துமே கருநெல்லிச் சித்தடியில் - வந்து
இருந்து சிலகால மின்ப ரசவாதம்
பொருந்து மேதங்க மென்முடித்து - வருந்தி 822

யிருக்கின்ற போது இன்பமாய்ப் போகர்
நருக் கென்றொரு பேச்சு நாட்டியே - பெருக்க

அய்ய ரேயூகிமுனி அடைவாகச் சொல்லு கிறோம்
பய்யக்குரு ·முன்றையும் பாலிப்பான் - மெய்யா 823

## 795 - 823 உரை. தங்கநீற்றிமை

சீனத்தைக் கரியில் வைத்து ஊது. சுண்ணமாகும். திராவகம் விட்ட ரைத்து உமிநெருப்பில் வறு. வி.த.கா. சுண்ணக் கவசமிடு. புடமிட்டெடு. சீனச் சுண்ணம் நன்றாகும். சூடனுடன் சமஎடை சேர். திராவகம் விட்டரை. வி.த.கா. சுண்ணக் கவசமிட்டுக் காடைப் புடமிடு. தவளம் போலாம். இது கடுமையான சூடச் சுண்ணம். இதனொடு பூத்திரசம் சேரு. திராவகம் விட்டரை. தங்கத்தின் மேல் கவசமிடு. காடையல்லது கௌதாரிப்புடமிடு. குருவாகும். செம்பில்நூற்றுக்கு ஒன்றிடு. செம்பொன்னாகும். தங்கம் நீறினால் செம்பிற் பாயும். பழுக்கச் செய்யும்.

ரசம் நூறுபலம் கரண்டியில் எடு. விராலி இலையில் துரிசுச் சுண்ணமிட்டுப் பிழிந்து ஊற்றிக்காய்ச்சி மணி செய்து கோத்துத் தலையில் அணிந்து செவி. அட்டகர்மமெல்லாம் ஆகும்.

807 - 823 அறிவுரை

### துரிசுச்சுண்ணம் - ரசமணி

துரிசு சுண்ணஞ் சொல்வேன் சோதி போலாகும்
பரிசைக் கவனம் பதமாக - வரிசையாய்த்
துருவனைத்தான் தாண்டுந் துய்ய கமலினியாம்
வரிசையாய்ச் சொல்வேன் மகிழவே - உரிசையாய் 824

வெள்ளீய மொன்று விரும்பி ரசமொன்று
துள்ளியிந்து வொன்று துடியாக - வள்ளி
வெடியுப்பு ஒன்று வேத மென்ற திராவகத்தால்
படியா யரைத்துப் பதமாகத் - துடியாக 825

அரைத்து ரவி காயவைத்து அன்பா யெடுத்துப்
பரைத்துச் சுண்ணம் கீழ் மேலும் பாய்ச்சியே - வுரக்கப்
புடமிட்டுக் காடை பெரிய குருவாகும்
நடமிட்டு முத்தரசம் நாடியே - எடையாக 826

சேர்த்து அரைத்துச் செயமா ரவியில் வைத்துப்
பார்த்துப் புடமிட வேபக்குவமாம் - நேர்த்தி
யெடுத்துமே வீரமிதமாக நாலிலொன்று
படுத்துமே அரைத்துப் பதமாகத் - தடுத்துத் 827

திராவகத் தாலரைத்துத் தக்க துரிசின் மேல்
பராமுகமாய்க் கட்டிப் பதியவே - நிராமயமாம்
கட்டி ரவியில் காயவைத்துப் போட
முட்டுக் கடுஞ் சுண்ண மேன்மையாம் - வெட்டுமென 828

இருக்குந் துரிசுதா னேத்தமுள்ள சுண்ணமதை
நருக்கி விராலியிட்டு நாட்டியே - யிருக்கும்
அயக்கரண்டி தன்னி லரன் பீசந் தன்னைப்
பயப்படவே கொதிக்கப் பாவித்து - நயப்படவே 829

கட்டி மணியாகுங் காதலாய்ச் சூடனுடன்
கட்டியே நீயதனில் தாட்டிகமாய்ப் - பூட்டித்
தீதனிலே வாட்டத் திரமாய் மணியாகும்
பாயமிகு வுபர சத்தைப் பாய்ச்சியே - நாயமாய் 830

மயில் சத்து ஊட்டி மனதாக அப்பிரகம்
பயில் சத்து ஊட்டிப் பதமாக - வெயில்போக
மண்டுகச்சத்தை வளமாகக் கட்டியெடு
பண்டுகச் சேவட்டைப் பாலித்துத் - தொண்டாக 831

ஊட்டித் தமரிட்டு உத்த நரம்புதனில்
ஆட்டியே கோத்து அடரக்கேள் - தாட்டிகமாய்க்

கரத்திலென்று வாயிலொன்று கணக்காக வைத்திடவே
பரத்து வுயரவே பக்குவமாய்த் - துரத்தம் 832

தூக்கி யெழுப்புந் துடியாக ஓடுமே
பாக்கிய மாய்ச் சத்துப் பதிவதாம் - நோக்கி
அண்டரண்ட மெல்லாம் அடுக்கடுக்கா யாடுமே
பண்டாக மண்டலம் பறக்குமே - முண்டாக 833

ஓடுமே ஓட்டம் ஓடையிலே கித்தரவர்
பாடுமே கேட்பார் பதிவாக - நாடிக்
கொடுக்கவே வேண்டாம் கொடுத்தால் கொடுக்கார்
அடுக்குமே பேச்சு அறையுமே - தடுக்க 834

மில்லாது போல புரளா தேசொல்லும்
சொல்லாப் பெரியோர் சுரூபமணி - மல்லாக
கொடுத்தார் குருமுனிவர் குலமாக வேதங்கள்
அடுத்தேன் கொடுத்தார் அறையுநீ - தொடுத்துக் 835

கைவேட்டிக் காவியிது கனக்கவே தான் போட்டார்
மெய்வேட மென்று விளம்புவீர் - செய்ய
தருவே ணென்பார்க்குத் தாக்கவே வேண்டா
இருவாக வுன்னையவ ரேய்ப்பார் - பெருவாகக் 836

கொடுக்கவே வேண்டாங் கொடுத்தாலுயிர் போகும்
அடுக்கவே விரவீர் அருளுவீர் - தொடுத்து
நில்லுமே யென்று நினைவாகப் போகமுனி
சொல்லுமே யேறத்திரமாக - வெல்லவே 837

யிருமென்று வானத்தி லின்பமுள்ள போகர்
திருமென்று தென்பழனி சென்றுமே - யுருவாக
இருந்தார் மலையடி யிலின்பமா யூகிமுனி
பொருந்த வேகைபாகம் போத்தியே - அருந்திச் 838

செய்து முடித்துந் திருத்தமா யுலகர்
வையகத்தி லிப்பொருளை வாழ்த்தியே - பைய
வுலகர் பிழைக்க ஓங்கும் ரசவாதம்
கலகமில்லாமலே காட்டிப் - பலகத்து 839

பாடியே கைபாகம் பக்குவமாய்ச் சொன்னேன்
தேடி வயித்தியங்கள் சீர்தூக்கி - மோடி
சொல்லியே பின்பு சுகமாகப் பொய்கைதனில்
துள்ளியே போகதுணையாக - மெள்ள 840

இருந்து சிவபூசை யின்பமாய்ச் சொன்னேன்
பொருந்து மதிதனிலே புக்கியே - வருந்தி
வாசி யோகம் பெற்று வண்மைபெற ஞானங்கள்
பேசி மிக நூனாதி தேவருடன் - வாகி 841

யிருக்குநிலை சொல்லி யிருப்பான ஆறுதலம்
பெருக்கவே சொல்லிப் பிலப்படுத்து - பருக்காய்ப்
பதிந்து கொடுத்தேன் பதிவா யுலகமெலாம்
வதிந்து மேயூகியென்று வாழ்த்தினார் - சதிந்து 842

**824 - 842 உரை. துரிசுச்சுண்ணம் ரசமணி**

வெள்ளீயம் ரசம் இந்துப்பு வெடியுப்பு ஒத்த அளவு எடுத்துத் திராவகம் ஊற்றியரை.காயவை. சுண்ணத்துக்குள் வைத்துக் காடைப்புடமிடு. குருவாகும். அதனெடை ரசம் சேர்த்து அரைத்துக் காயவைத்துப் புடமிடு. பக்குவமாகும். பின்பு நாலில் ஒன்று வீரம் சேர்த்துத் திராவகம் ஊற்றி அரைத்துத் துரிசின்மேல் கவசமிட்டுக் காயவைத்துப் புடமிடு. கடுஞ்சுண்ணமாகும். விராலியிலையிலிட்டு நீர் வாங்கு. கரண்டியில் விட்டு ரசம் சேர்த்துக் கொதிக்கவை. கட்டி மணியாகும். சூடனுட தீயில் வாட்டு. மணியாகும். உபரசம் பாய்ச்சு. மயில் சத்து ஊட்டு.

அப்பிரகச்சத்து ஊட்டு. மண்டுகச் சத்துக்கட்டி எடு. செவ்வட்டைக் கவசமிட்டு எடு. இவ்விரண்டும் ஊட்டியபின் துளையிட்டு நரம்பில் கோத்து கையில் ஒன்றும் வாயில் ஒன்றும் வைத்துக் கொள்ளத் தூக்கி எழுப்பும். வானில் ஓடும். அண்டர் அண்டமெல்லாம் அடுக்கடுக்காய் ஆடும். எல்லா மண்டலத்திலும் பறக்கும். சித்தர் கண்டு கேட்டால் குளிகையைக் கொடுக்காதே. கொடுத்தால் தரமாட்டார். கொடுத்தால் உயிர்போகும். கொடுத்தலாகாது.

**834 - 842 அறிவுரை.**

## ஐந்து சுண்ணம்

வயித்தியங்கள் பண்ணி வளமா யிருந்திடவே
தயித்தியருக்கு பசாரஞ் சாத்தி னேன் - நயத்தில்
அஞ்சு சுண்ணஞ் சொல்வேன் ஆதரவா கக்குருவை
வெஞ்சச் சிமிழிட்டு விருப்பமாய்த் - தஞ்சமாய் 843

வைத்தால் கடுஞ்சுண்ணம் வாதிக்க வேணுமது
மெய்த்தா லிதுவைத்தால் மேன்மையாம் - செய்து
முடித்தாலோ சுண்ணம் முறையிதுதான் கேளும்
படித்தாலோ வெல்லாம் பரிவாகும் - நடித்து 844

அவன் மட்டினத்தை அண்டத் தோடிப்புவியில்
கலக முடன் னாகரத்தின் வண்டு - பிலமாகும்
அரைத்தஞ்சு தானும் ஆனதிராவகத்தால்
பரைத்துப் புடமிட்டுப் பத்தியாய் - நிரைத்து 845

எடுக்கக் கடுஞ்சுண்ணம் ஏழை ரசவாதி
அடுத்துத் திராவகத் தாலாட்டியே - படுத்துப்
புடம்போடு அஞ்சு போரக் குருவாகும்
தடம்போடு அஞ்சுத ரந்தாக்கியே - நடமாட 846

போட்டெடுக்கச் சுண்ணம் புகழ் சுண்ணம் வந்தவிடம்
வாட்டுமே வைத்து வரிசையாய்ப் - போட்டால்
காத்துப் போகாது கடிய சுண்ணமாகும்
வீரம் போல் காரம் விளைவாகும் - பாரமாய் 847

**843 - 847 உரை**

அண்டத்தோடும் நாகரவண்டும் திராவகம் விட்டரைத்துப் புடமிடு. ஐந்துமுறை இப்படிச் செய்யச் சுண்ணமாகும். சுண்ணம் வந்த இடங்களில் சேர்த்துப்புடமிடு. வீரம்போல்காரமுள்ள சுண்ணமாகும்.

## போகர் தாளகச் சுண்ணம்

எல்லாங் கடுமையா மேத்தமுள்ள வாதிகளே
பொல்லாத அஞ்சுசுண்ணம் பூட்டினேன் - நல்லாகத்
தாளத்தின் சுண்ணம் தயவாகப் போகர் சொன்ன
வாளகத்தைச் சொல்வேன் வகையாக - மாளவே 848

செய வேதை யாகும் செப்ப வுலாதனிலே
நயமாகச் சொல்லுகி றேனாடு - நிசமாக
சீனம்பல மெட்டுச் சிறப்பாய்க் கரிதனிலே
வானமா யூது வரிசையாய்த் - தானே 849

யூதக் கடுஞ்சுண்ண முண்மையாய்த் தானெடுத்து
பாதக மில்லாம லேபத்தியே - வேதை
யெடுத்துப் பலமொன்று யேத்தமாய்க் கேளும்
நடுத்துமே சூடலை மெடைக்குத் - தொடுத்து 850

அரைத்துத் திராவகத்தால் ஆட்டி வில்லை செய்து
நரைத்துரவி காயவைத்து நல்லாய் - பரைத்துச்
சுண்ணம் நடுவைத்துத் துப்புரவாய்ச் சீலைசெய்து
பின்னைப் புடம் போட்டுப் போட - நன்னயமாய் 851

நீறியே தானிருக்கும் நித்தரே கேளும்
ஆறியெடுத்து அதின்பின்பு - தேறியே
சுண்ணம்பல மொன்று சுப்பிரமாய் வீரம்
நன்னயமாய் நாலி லொன்று நாடியே - முன்னே 852

அரைத்துமே சாமம் ஆனரவி தனிலே
தரைத்துமே காயத்தான் வைத்துப் - பரைத்துமே
காடைப் புடமிட்டுக் கலர அதைத்தா னெடுத்துப்
பேடைபோல் செய்யப் பின்கேளும் - வாடை 853

தாரமதை யெடுத்துத் தாக்கவே சுண்ணநீர்
பாரமதி லிட்டுப் பாகமாய்ச் - சேரவே
யெரித்து எடுத்து இனியிய நல்ல சுத்தி
அரித்து எடுத்து அதின் பேரில் - பரிக்க 854

எடுத்துமே தாளகமே லேத்த அங்கி மேலிட்டுத்
தடுத்துமே வுலரத் தான்வைத்துப் - படுத்துக்
காயவைத்து மேலே கனக்க வே சுண்ணமிடு
நாயமாய்க் காய நலமாகத் - தாயமாய்க் 855

காடைப் புடமிட்டுக் கட்டாகத் தானெடுத்து
பேடை போலாகப் பிலப்படுங்காண் - வாடி
தாளகமு நீறும் தனி வேதையாகும்
பாரமிகு சுண்ணம் பதையரமல் - நேராக 856

அரைத்துத் துருசியின் மேல் ஆன அங்கி தானிட்டுப்
பரைத்துரவி காயவைத்துப் பண்பாக - நிரைத்து
சேவல் புடமிட்டுச் செப்பரிய தாக
ஆவலா யெடுக்க அது நீறும் - தேவையாய்ப் 857

துரிசுச் சுண்ண நீறரைத்துத் துப்புர வாயெடுத்து
வரிசையாய் வீரம் வளமாக - நரிசையாய்
நாலிலொன்று வீரம் நன்மையாய்ச் சேர்த்து
காலாய்த் திரார்வகத்தை காட்டியே - மாலாக 858

எடுத்துமே தாளகத்தி னேகக் கவசம்
அடுத்துத் துரிசு அடைவாகக் - கொடுத்து
காடைப்புடம் போடு காட்டாய தாரம்நீர்
வடையிலே செம்பு மதி பழுக்கும் - மேடை 859

அன்னமே உனக்கு அடைவாகச் சொல்லுகிறேன்
தன்னில் மெத்த பாக்கியந்தானாகும் - தன்மைபோல்
தாளகத்தைப் போலே தங்கமொன்றுமில்லை
பாளாகப் போகாமல் பதமாகும்-வாளாகும் 860

சீனத்தைப் பாரு சிறப்பாய் வழலையது
யேனமாய்ச் சூடனிதம்பாரு - வானோர்
போற்றுவார் சூடனைத்தான் போதமடநெஞ்சே
ஆற்றுவார் அலாத்தியாகும் - பார்த்து 861

தாரத்தை நீத்துத் தப்பாதே பொன்னாகும்
பாரத் துரிசைநீ பார்த்துக்கோ - பாரா
மன்னவனே யாகு மழுங்காத யோகமுமாம்
தன்னவனே குளிகை தானாக - மின்னே 862

கொடுக்க ரசவாதம் குத்தமில் லாமலே
அடுத்துமே பார்த்து அலுவல்பார் - தொடுத்து
நிற்றால் ரசவாதம் நீறாகி ஆகும்
சென்றால் கயிலாசம் தான் பதவி - நின்று 863

துரிசு போல் பின்னுந் தப்பா மலாகும்
பரிசுக்கு மொத்தப் பதமாகும் - பரிசையாய்
எண்ணம் போல் செய்து இன்பமாய் வாசி
கண்ணம் போல் சரக்கைத் துறைமருவீர் அன்னமாய் 864

இருந்துசிவ யோக மின்ப ரச வாதம்
அருந்துமே சிந்தூர மடைவுகேள் - இருந்து
சமாதியி லேகு சத்திய மாய்ச் சொன்னேன்
வமாதியிலே வாசி வளமாக்கு - அவமாய்த் 865

திரியாதே யென்று செப்பினார் யூகிமுனி
அறியாயோ யுலாவை யடைவாக் - பரியாச
மில்லாமல் சொன்னே னேழை ரசவாதி
சொல்லால் பெரியவனா ஒட்டவே - பொல்லா 866

வருத்தப் படாமல் மயங்கித் திரியாமல்
தருத்துடனே ஞானந்தானே பாரு - இருத்தி
ஓங்காரங் கொண்டு யெழுப்பி யெழுதலத்தில்
ஆங்கார வாயு அழுத்தியே - நீங்காமல் 867

வாசிநீயூது வளமாகக் கும்பித்து
ஆசையாய் வாயு அடைக்கியே - நேசமாய்
ஞானமய நில்லுநாலி லொரு பொருளைப்
பானமா யடைத்துப் பதமாக - யேனோ 868

என்று திரிந்து யேங்கி முகம் வாடிச்
சென்றுமே வாதஞ்சுட வேண்டா - மன்று
தில்லைநட ராசனையும் சேவித்து நில்லு
மெல்லவே ஞானம் விரும்பியே - எல்லாம் 869

சிவன் செயலே யென்று சோதிச்சுப் பாரு
அவன் செயலாய்த் தோணு மடைவாகக் -கவன் செயலாய்
அரிந்தால் ரசவாதம் சீக்கிரத்திலாகும்
திரிந்தா லுலாவை யறிந்து - தெரிந்துமே 870

முடியப் படித்து முக்கியமாய்ச் செய்தால்
படியான வாதம் பலிக்குமே - துடியாக
இருக்கவே யென்று யின்பமா யூகிமுனி
செருக்கவே சொன்னார் திரமாகப் - பெருக்க 871

நினைத்துமே சூதம் நிலவரமாய் வைத்து
அனைத்துமே செந்தூர மருள - வனைத்தும்
எல்லா முயிர் போல வெண்ணியே செய்து
நல்லாகச் சூதந்தனை வைத்து - நல்லாய் 872

சொன்ன பின்னஞ்சு சொற் பொருளை வென்ற
நன்னயமாய் தேரரென்று பேர் படைத்துப் - பின்னாள்
தட்சனா மூர்த்தியிடம் தன்மையா யானும்
பட்சமாகப் பணிவிடைகள் பண்ணினேன் - நிச்சயமாய் 873

தாம்பூரச் சுன்னந் தயவாகச் சொன்னா
ரேம்பினார் யூகிமுனி கேளும் - தாம்பினிடங்
கூப்பிட்டார் யூகிமுனி கூட்டமாய்த்தான் போக
வாய்ப்பிட்டுச் சொன்னார் வகையாகக் - காப்பிட்டு 874

கடை தலையுஞ் சொல்லிக் காட்டியே கைபாகம்
படவெனவே சொல்லிப் பதிவாகத் - திடமுடனே
இருத்திமனஞ் சொன்னாரியல்பாகச் சொல்லி
வருத்தி பின்னஞ் சொல்வேன் வகையாகப் - பொருத்தி 875

செம்பு நிறஞ் சொன்னார் சிறப்பா யுலாதனிலே
தம்பமாய்ப் பார்த்துத் தடையறவே - தெம்பாகச்
செய்து முடித்துச் செயலான கைபாகம்
மெய்யாகச் சொல்வேன் மேதினியில் - வையகத்தில் 876

உலகத்தோர் கேளு முண்மை ரச வாதிகளே
பலகத் துமென்ன பலனுண்டோ - பலமாக
வுலாவை யழைத்து உறுதியாய்ப் பார்த்தால்
பலாபலங்க ளெல்லாம் பலிக்குங்காண் - நிலாப்போல் 877

தெரியும் ரசவாதிகளே சேர்ந்து அலையாதே
பரிபோல தங்கமாம் பாருமே - நரிபோல்
கத்தித் திரியாதே சூட்ச வுலாவை
பத்தியே பாரு பரிவாகச் - சித்தமா 878

இருக்கும் ரசவாத மின்பமாய்த் தோணும்
பெருக்கவே யோசனைகள் பிலப்படுத்து - நெருக்கி
வெடித்துமே பாரு பிடிபட்டுப் போகும்
படித்துமே செய்பாகம் பார்த்து - வடித்துச் 879

சொன்னே னுலாவில் சோதி பெறத் தாம்பூரம்
என்னே யிதுலகுவு இன்பமா - முன்னே
தெரிய அலைந்து திரமாக யான் கண்டு
பரிபாஷை நீக்கிப் பதம்படுத்தி - பிரியமாய்ச் 880

செய்து முடித்துத் திரமாகச் செய்துமென
நய்துமுன் யூகிமுனி நாடியே - செய்கையால்
பாகமாய்ச் செய்து பரிவாய்ச் சரக்குவகை
யேகமாய்ச் செய்து உறுதியாய் - வாகமாம் 881

## 848 - 881 உரை. போகர் தாளகச்சுண்ணம்

எட்டுப்பாகம் சீனம் எடுத்துக் கரியில் வைத்து ஊது. சுண்ணமாப் எடுத்து அதனெடை சூடன் சேர்த்துத் திராவகம் ஊற்றியரைத்து வி.த.க சுண்ணத்துக்குள் வைத்துப் புடமிடு. நீறிவிடும். ஒருபலம் சுண்ணம் நால லொன்று வீரம் சேர்த்து அரைத்துக் காயவை. காடைப்புடமிடு. எடு. பின்பு தாளத்தைச் சுண்ண நீரிலிட்டெரித்து எடு. தாளத்தின்மேல் கவசமிடு. காயவிடு. காடைப்புடமிடு. தாளகம் நீறும். தனியே மாற்று உண்டாக்கும். தாளக நீற்றைத்துரிசுக்குக் கவசமிடு. சேவற் புடத்தில் வை. நீறும் அதற்கு நாலிலொரு பங்கு வீரம் சேர்த்துத் திராவகம் விட்டரைத்துத் தாளத்துக்குக் கவசமிட்டுப் புடமிடு. காடைப்புடமிட நீறும். இந்த மனத்துக்கே செம்பு பழுக்கும்.

850 - 881 அறிவுரை

## புலத்தியர் அயச்செம்பு வெள்ளியில் சேர்க்க

புலத்தியருஞ் சொன்ன போக்கு பரிவாகத்
தலத்துடனே சொல்வேனான் தண்மையாய்ப் - பிலமாக
செம்பொன்று சொல்வேன் சுருக்கான தங்கமாம்
நம்பியே பார்த்து நலம்பெறுநீ - யெம்பிரான் 882

சொன்ன சொல் போல சொல்லுகிறேன் செப்புதனை
நன்னய மாய்த்தட்டி நலமாகப் - பின்னே
கெந்திபல மொன்று கிருபையுள்ள வீரங்கால்
நந்தியே சீனம்நல மொன்று - பந்தியாய் 883

வெடியுப்பு ஒன்று வேதையிது நாலும்
படியால் நிறுத்தெடுத்துப் பார்த்துப் - பிடியாப்
பழத்தைப் பிழிந்து பதமா யரை குழம்பித்
தடுத்துக் குழம்பாக்கித் தண்மை கேள் - படுத்துக் 884

குழப்பி வைத்துக் கொண்டு குணமாக வெட்டுநாள்
தழைத்து எடுத்துமே தண்மை கேள் - உழைத்துப்
பரவி நெருப்பில் பதமாய் நலமாகக்
கரியில் வைத்தூதியே காய்ச்சி - விரியச் 885

சிகப்பா யெடுத்துச் சீக்கிரமா யாற வைத்து
வகப்பாக வெட்டையே யாகமட்டும் - தகப்பாகத்
தோய்க்க வெடுக்கத் துப்பரவாய் வெட்டையாம்
பார்த்துமே நொறுக்கு வெள்ளை பலநாலு - வாய்த்து 886

ஒன்று கொடுத்து உறுதியா யூதியெடு
அன்றுமே பொன்னெடைக்குச் சேரு - வென்று
வுருக்கித் தகட்டித்து உற்று மேகேளு
நருக்கிப் புடம் வரிசை நாட்டக் கேள் - உருக்கியே 887

## 882 - 887 உரை

கெந்தி யொருபலம் சீனம் ஒரு பலம் வெடியுப்பு ஒருபலம் வீரம் காற்பலம் சேர்த்து அரைத்துப் பழச்சாற்றில் குழப்பி எட்டுநாள் கழிந்தபின் செப்புத் தகட்டைக் காயவைத்து எலிக்குஞ்சு நிறத்தில் எடுத்துத் தோய்த்து வெட்டையாக்கி, நொறுக்கு வெள்ளியில் கொடு. தங்கம் பாதி சேர். நலமாகும்.

### மட்டப் பொன் மாற்றுயர

செங்கல் பலநாலு சிறப்பான லிங்கம்
அங்கமா யொன்று அடைவுகேள் - சிங்கம்
பெரரிக்காரி யொன்று பொரித்து எடுத்து
வரியா யிதுமூன்றும் வாகா - நெரிவாக 888

வாக்கினால் மனத்தால் வகையாகத்தான் பிரித்து
ஆக்கிமுன் த்கடு அதில்வைத்துத் - தாக்கக்கேள்
புடம்போடத் தங்கமாம் போர எடைரண்டும்
வடமாகத் தானிருக்கும் வண்மையாய் - நடமாக 889

வெடுத்துச் செலவு செய்து இன்பமா யோகம்
அடுத்துப் பதிவா யதில் நின்று - படுத்து
வாசியோ கம்பாரு வண்மையிது வாதம்
ஆதிபுலத்தி யகத்தியரு மன்பாகப் - போதிக்க 890

முன்பாகப் பார்த்து முக்கியமாய்த் தான் வேதை
தென்பாகப் பார்த்துச் செயப்படுத்து - அன்பாக
குடவனைத்தான் பாரு குணமாகச் செம்புபோல்
அடைவாகத் தான்பாரு அன்பாய்த் - திடமாகச் 891

செய்து முடித்துச் சிறப்பான வேதைமுகம்
நையவே செய்தால் நலமாகும் - மெய்யாய்
தங்கமது வேதை தாக்கவே செம்பாகு
முங்கள் குலமீ டேற வுற்றுக்கேள் - நங்கள் 892

## 888 - 892 உரை

செங்கல் நாலு பலம் இலிங்கம் ஒருபலம் பொரி காரம் ஒருபலம் சேர்த்துத் தூளாக்கிச் சட்டியிலிட்டு மட்டப் பொன்னை நடுவில் வைத்து எரி. தங்கமாகும். எடுத்து வில். செலவிடு.

### செம்பு வெள்ளி செய்பாகம்

செம்பொன்று தங்கமொன்று சேர்த்துருக்கித் தகடாய்
நம்பி யனைத்து நலமாக - வெம்பியே
வீரமொன்று கெந்தி யொன்று விரும்பிக் கழுதைநீர்
பாரமா யரைத்துப் பத்தியே - சார 893

அரைத் தெட்டுநாள் வைத்து ஆன தெளிவிறுத்துப்
பரைத்துமே முன்தகட்டைப் பாகம் - நிரைத்து
வருணம் போல் காய்ச்சி வகையா யெடுத்துக்கேள்
தருணமா கத்துவைக்கத் தாட்டிகமாம் - வருத்து 894

ஒட்டி யொடியமட்டு மொக்க வொடித்துப்
பட்டியா வெள்ளி யொடு பாச்சிடுநீ - முட்டியே
யூதியெடுத்து உண்மைப்புடம் போடப்
பாதியாய் முன்புடத்தில் பாய்ச்சிடவே - நாதியே 895

தங்கமிறங்குந் தப்பாதே வேதையாம்
பொங்கமென ஞானம் பொசியுமே - இங்கிதமாய்
வாசி யோகம் வருகும் வண்மை நலஞ் சேரும்
காசி பணங்கள் கனமாம் - வாசி 896

யெல்லாமுன் சொன்னேன்ப ரசயோகம்
சொல்லாற் பெரியோர் துணை செய்வார் - வல்லார்
செய்து முடியார் செயமாகும் நற்பொருளாம்
பைய அயச் செம்பைப் பாருமே - மெய்யாய் 897

**893 - 897 உரை.**

வீரம் ஒன்று கெந்தி யொன்று சேர்த்தரைத்துக் கழுதை நீரில் கரைத்துக் குழப்பி எட்டுநாள் வை. பின்பு தங்கம் ஒன்று செம்பு ஒன்று சேர்த்து உருக்கி தகட்டித்து நெருப்பில் காய்ச்சி அக்குழம்பில் தோய்த்து வெட்டையாக்கி வெள்ளியில் கொடு. தங்கமாம்.

## அயச்செம்பும் வெள்ளியும் சேர்க்கும் முறை

சித்தர் மறைத்த செயமாக பாகத்தை
முத்தி பெறச் சொல்லுகிறேன் முக்கியமாம் சித்தர்

சொல்லக் கேள் வாதிகளே சொல்லும் அயந்தான்
நல்லா யொரு பலந்தா னாடியே மெல்லவே 898

யெடுத்து அரைத்து இன்பளடை அரையும்
படுத்துமே சூடன் அரைபணியால் - தடுத்து
அரைத்து இருசாம மரைத்து வில்லை கட்டிப்
பரைத்து ரவியிலிடு பண்பாக - நிரைத்து 899

மூணுநா விட்டிடவே முக்கியமாய்ப் பூத்திருக்கும்
ஆணவே யெடுத்து அப்பால் கேள் - நாணயமாய்
வீரமொன்று இட்டு விரும்பி யரைத்துநீர்
பாரமாய் நேர பரிந்துமே - சீராக 900

வம்பாகச் செம்பை வலுவாத் தகடடித்துத்
தெம்பாக வண்ணமாம் திட்டமாய் - நம்பியே
காய்ச்சி யிதில் துவைக்கக் காஞ்சனம் போல் காணும்
பாக்கியமாம் வெள்ளி தனில் பாய்ச்சிடவே - நோக்கி 901

யெட்டுக்கு ஒன்று இன்பமாய் பாய்ச்சிரண்டு
வட்டமுள்ள தங்கத்தை வண்மையாய்த் - திட்டமுடன்
பாய்ச்சி யெடுக்கப் பத்து வயதாகும்
தாழ்ச்சியிலை வாதியிது சத்தியமாம் - நேர்த்தியாம் 902

படபடத்துச் செய்யாதே பக்குவ மாய்ப்பாரு
தடதடென யோகந்தனைப் பாரு - திடமாகும்
என்று புலத்தியரு மின்பமா யூகிமுனி
சென்றுமே கேளுஞ் செயமாக - நன்றியாய்ச் 903

சொல்லி விடை கொடுத்துச் சொற்பெரிய யோகத்தை
மெல்லவே சொன்னார் விருப்பமாய் - நல்லா
இருமெனவே சொல்லி யின்பமாய்த் தானனுப்பி
பெருகுங் கவுனத்தில் போய்மறைந்தார் - வரிசையா 904

யிருந்து சிலகால மின்பமா யூகிமுனி
பொருந்தியே கைபாகம் புக்கியே - அருந்தியே
பார்த்துச் சயமாக்கிப் பக்கு வத்திற் சொன்னார்
ஏத்த வுலகோர்க்கு இன்பமாய்ச் - சேர்த்துமே 905

சொல்லினார் யூகிமுனி சொற்பெரிய வாதிக்கிப்
புல்கியே பாகமெனப் பிரித்து - நல்கியே
அடுத்துக் கைபாகம் ஆனதொரு செய்பாகம்
தடுத்துமே யெல்லாந்தனைச் சொன்னார் - விடுத்துமே 906

## 898 - 906 உரை

இரும்பு ஒருபலமும் சூடன் அரைப்பலமும் சேர்த்துப் பாணிவிட்டரைத்து மூன்றுநாள் கழித்து சீரம் ஒன்று சேர்த்து அரைத்துக் குழம்பாக்கிச் செம்பைத் தகடாக்கிக் காய்ச்சித் துவைத்து வெள்ளியில் பாய்ச்சித் தங்கமும் சேர். வெற்றியாகும்.

### தங்கக்குரு

சொல்லி யிருந்து சுயம்பெறவே யந்நேரம்
புல்லியே யின்னம் புகலுவேன் - நல்கியே
தங்கக் குருச் சொல்வேன் தாழ்ச்சி வாராதுஅருள்
எங்குந் திரிந்து எளிய வனாய்ப் - பொங்கியே 907

போகாமல் சொல்வேன் போக்கா ரசவாதி
ஆகவே பாரும் அடைவாகும் - தாகமாய்
வாலை ரசமெடுத்து வண்மை எடைதங்கமால்
மாலை வொன்றாகக் கலந்துமே - சோலை 908

யுருட்டி யெடுத்து உண்மையாய்க் கேளு
வருட்டிக் கரியோட்டில் வாட்டக் கேள் - திரட்டி

அப்பிரக நவநீதம் ஆகவே பண்ணித்
தப்பியே மேலேதனைச் செலுத்திக் - கப்பியே 909

கரியிலே வாட்டிக் காயவைத்துக் கேளு
பரியா யெலுமிச்சம் பழமதிலே - வரியாகச்
செலுத்தி யெடுத்துச் செப்பமாய் நூறு
வலுத்த வுமிநெருப்பில் வைத்திடவே - பலமா 910

யெடுத்துமே கேளு இன்பக் கவசமதை
அடுத்துமே தள்ள அடைவாக - வலுக்க
அரைக்கத் திராவகத்தால் அன்பா யுருட்டி
பரைத்து அப்பிரக பதக்கவசம் - வரைந்து 911

பழத்துள்ளே வைத்துப் பரிவாக நூறுபுடம்
தளத்துடனே தானெடுக்கத்தான் சிவக்கும் - அன்பா
யிருக்குமா விழுப்பத் திட்டிடவே தங்கம்
பெருக்கமிருக்கப் பிலமாகும் - வருக்காய் 912

**907 - 912 உரை**

வாலை ரசமும் தங்கமும் சமஎடை சேர்த்து உருட்டி அப்பிரக நவநீதக் கவசமிட்டுக் கரியோட்டில் வாட்டி எலுமிச்சம்பழத்துள் வைத்து நூறு புடமிட்டெடுத்துத் திராவகம் விட்டரைத் துருட்டியப்பிரகக் கவசமிட்டு எலுமிச்சம்பழத்துள் வைத்து நூறு புடமிட்டெடுத்துச் செம்பில் உருக்கிக் கொடு. தங்கமாகும்.

## அயச்செம்பைக் காரீயச் செம்பு செய்து வெள்ளியில் கொடுக்க

இராச யோகம் பெறுவீர் நல்ல பதவியாம்
திராச நடனந் திடப் படுங்காண் - உரோசனமாய்ச்
சொல்ல முடியாது சுருதியுள்ள காரீயம்
நல்லாக வேதை நலமாக - வெல்லவே 913

சொல்லக் கேள் வாதிகளே சுகமாகும் தங்கமாம்
வெல்லக் கேள் செம்புவிதமாக - வல்லக்கேள்
செம்புகட்டுச் சொல்வேன் செயமா யொருபலந்தான்
நம்பியே காரீயம் நாலிலொன்று - தெம்பாகச் 914

சேர்த்து உருக்கிச் செயமாய்த் தகடடித்துப்
பார்த்துக் கரி யோட்டில் பக்குவமாய் - நேர்த்தியாம்
காயவைத்துக் கேளு கனக்க வெடியுப்பு
பாயவே கெந்தி பலமொன்று - நியாயமாய் 915

பொட்டளையு மொன்று பொடித்துக் கலுவமதில்
நட்டளையாய்ப் பொடித்து நம்பியே - திட்டமாய்க்
கத்தநீர் விட்டுக் கனக்கக் குழப்பியதைப்
பத்தக் கொதியிட்டுப் பாகமாய் - வித்தகமாய்க் 916

கால்வாசி காய்ச்சிக் கனக்க விருந்து கேள்
வேலாகக் காய்ச்சி விதமாக - மேலாகக்
காய்ச்சிப் பதம் பார்த்துக் கத்தநீரில் தோய்த்து
பாய்ச்சியே வெட்டையாய்ப் பாகமாய் - வாய்ச்சு 917

செத்துஞ் சாகாததாய்ச் செப்பமாகத் தோய்த்து
பத்தியுடைத்திடவே பாங்கு கேள் - சித்தியாய்ச்
சாணாரக் காசை சடுக்கென்றுடைத்தாப் போல்
வாணா கிருந்து வளம்போல் - ஏனோகேள் 918

பக்குவத்தைப் பார்த்துப் பதமாய் நொறுக்கு வெள்ளி
விக்கவுருக்கி விதமாகத் - தொக்கவே
எட்டுக் கொன்றிட்டு இதமாகப் பார்வையிட்டு
மட்டம் போலாகும் வளமாகும் - முட்டவே 919

யேழான மாற்றை யிதமாகச் சேத்துருக்கத்
தாழான யேழாகுஞ் சத்தியமாம் - வேளாளர்
செய்தது போல்செய்து சிறப்பியெடுத்து வித்து
பையவே ஞானத்தைப் பற்றுவீர் - மெய்யா 920

யிருக்கவல்லோ சொன்னேனின் பமாய்த் தங்கம்
பெருக்கவல்லோ சொன்னேன் பின்புகேள் - பருக்கக்
காரீயச் செம்பு சொன்னேன் காதலரே கேளும்
பாரியாய்ச் சொல்வேன் பலனாக - ஆதியாய் 921

**913 - 921 உரை.**

செம்பு ஒருபலம் காரீயம் காற்பலம் சேர்த்து உருக்கித் தகடாகத் தட்டி எடுத்துவை. வெடியுப்பும் கெந்தகமும் பொடித்துக் கழுதை நீரில் போட்டுக் குழப்பிக் காய்ச்சு. முற்கூறிய செம்புத் தகட்டைக் காய்ச்சிக் கழுதைநீர்க் குழம்பில் தோய்த்துத் தோய்த்து வெட்டையாக்கு. ஒடியும் பருவமாக ஆக்கி நொறுக்கு வெள்ளியில் எட்டுக்கு ஒன்றிடு. ஏழு மாற்று.

## அயச்செம்பு வெள்ளியில் கொடுக்கும் பாகம்

அயச்செம்பு சொல்வேன் ஆதிமுனி சொன்ன
நயப்படா வெள்ளம்போல் நாடுமே - பயப்படா
செய்துமே பாருதிடமா அயச்செம்பு
நைதுமே சொல்வேன் நயமாக - எய்து 922

செம்புமே நாலு சிறப்பாய் அயமொன்று
நம்பி யிருக்கு நலமாகத் - தெம்பாக
வுருக்கித் தகட்டித்து உற்றுமே கேளும்
பெருக்கவே கெந்தி யொன்று பேசக்கேள் - நிறுக்க 923

வீரங்கால் சூடனரை வித்தகமாய்க் கேளும்
பாரமாய் வெங்காரம் பலமநிறுத்துச் - சேரவே
பொரித்துப் பொடிபண்ணிப் போக்கோடே செவ்வல்லிக்
கரித்துப் பூச்சாறு கலவாடு - திரித்து 924

சாறு விட்டுத் தளரச்சாந்தமா யெட்டிலொன்று
வாறாகக் காய்ச்சி வளமாக - நேராகக்
குழம்பாகக் காய்ச்சிக் கோதைமட வாதிகளே
துளம்பா யிருந்துமே சொல்லக்கேள் - நளம்பாய் 925

தகடுகாய்ச்சித் தோய்ச்சுத் தட்டியே பாரு
பகமாகத் தானுடையும் பத்துக் கேள் - விதமாய்ச்
செத்து இருக்குஞ் செயமாய்ப் பருவத்தில்
வித்தகரே யெடுத்து வித்தையாய் - பத்து 926

வெள்ளிக் கொன்றிட்டு விருப்பமாய்த் தான்பாரு
துள்ளிபசுமை போல் சொல்லவே - நள்ளி
லிருக்குமே பீர்க்கிலைச்சாறு போல்
பருக்குமே யெடுத்துப் பாகங்கேள் - வருக்கில் 927

பதிந்தாற் போல்காரி பார்வை விரகனையு
முதிரஎடை சேர்க்க முடிவுகேள் - வதிலாகச்
சேர்த்து உருக்கச் செயமுள்ள தங்கமாம்
பார்த்து எடுத்துப் பதமாக - வாழ்த்தி 928

குற்றமில்லாத் தங்கம் கூறுவர வேயாடும்
பத்தனென்றால் காண்பான் பதமாவான் - வித்தாகச்
சேர்த்தால் செய்த்தங்கம் சேர்க்காதே போனால்
பார்த்துத் தவிப்பான் பதியில்லா - சாத்துவீர் 929

எல்லாமுங் கைபாகம் இன்பமாய்க் கேளும்
பொல்லாத பாகம்புகலு வேன் - மெல்லவே
காய்ச்சித் துவைப்பாகுங் கருத்து வைத்துக்கேளு
பாய்ச்சவே வர்ணம் பலனாகும் - வாய்ச்சுதே 930

யிப்படித் தானிருக்க வின்பரச வாதம்
எப்படிகாணப் போரீரென்று காண் - சொற்படிக்கிச்
செய்து முடித்தால் செயமான தங்கமாம்
பையவே யிச்செம்பைப் பார்த்துமே - மெய்யாகக் 931

கொடுக்குமது வாதம் கொடுக்காதே போனா
லிடுக்காக விச்செம்பைப் பாரு - முடுக்கியே
பார்த்தால் ரசவாதம் பாலிக்கு மென்று
எத்துமே சொன்னாரினிக் கேளு - நேர்த்தியாய் 932

**922 - 932 உரை**

பொரித்த வெங்காரம் ஒரு பலம் கெந்தகம் ஒரு பலம் சூடன் அரைப்பலம் வீரம் காற்பலம் எல்லாம் பொடித்து அரைத்துச் செவ்வல்லிப் பூச்சாறு விட்டு எட்டிலொன்றாக வற்றக் காய்ச்சி வைத்துக் கொள்க. செம்பு நாலுபங்கு இரும்பு ஒருபங்கு சேர்த்து உருக்கித் தகடடித்துக் கரியில் வைத்துக் காய்ச்சிச் செவ்வல்லிப் பூச்சாற்றுக் குழம்பில் தோய்த்திடுக. தகடு சாகும்வரைத் தோய்த்து வெள்ளியையுருக்கிக் கொடு. அதனெடை காரீயம் தூயதாக விராகனெடையும் சேர். தங்கமாம்.

**928 - 932 அறிவுரை**

**பித்தளைச் செம்பு கொடுக்கும் முறை**

அடுத்த செம்பொன்று அன்பாகச் சொல்வேன்
தொடுத்துமே பார்த்தால் துரியமாம் - கடுத்துப்

பித்தளையின் செம்பெடுத்துப் பேதமட நெஞ்சே
யித்துடனே செய்யு மின்பமாய் - முத்தி 933

தகட்டை யடித்துத் தண்மையாய்க் கேளும்
புகட்ட ஒருபலந்தான் புக்கியே - பகட்டாக
வெடியுப்பு ஒன்று வேதமா சீனம்
படியாய்ப் பலமொன்று பாகங்கேள் - வடியாக 934

குண்டுமணி ஒன்று குணமாக மூன்றறையுந்தான்
பண்டுமணி கத்தநீர் பதமாகச் - சென்று
அரைத்துக் குழப்பி அன்பாய்க் குடவனைத்தான்
பரைத்துமே தோய்த்துப் பதமாக - நிரைத்து 935

ஓடியமட்டுந் துவைத்து ஒக்க எடுத்து
படியாய்ப் பதம்பாரு பக்குவமாய் - நொடியாக
வெடுத்துமே வைத்து இன்பரச வாதிகளே
அடுத்துமே ஒன்று அறையக்கேள் - படுத்து 936

துரிசு பலமொன்று துய்யகெந்தி முக்காலும்
பரிசுமே பண்ணை பலமரையாம் - வரிசையாய்
வீரம் பலங்காலாம் விரும்பி இதுநாலும்
பாரமா யரைக்கப் பாகங்கேள் - சேரவே 937

கத்தநீர் விட்டுக் கருத்தாய்க் கொதியிட்டு
முத்தவே தளர முக்கியமாய் - சத்தோ
குளப்பி வைத்துக் கொண்டு குணமாகச்சொல்லுகிறேன்
வளப்பிமுன் செம்பை வளமாகத் - துளப்பி 938

காய்ச்சியே தோய்த்துக் கனக்கப் பதம்பாத்து
வச்சுதே யென்று வண்மைகேள் - தோய்ச்சு
எடுத்துமே வைத்துஇன்ப நொறுக்கு வெள்ளி
படுத்துமே யெட்டிலொன்று பக்குவமாய் - நடுத்துச் 939

சேர்த்து உருக்கச் செயமான தங்கமாம்
பார்த்துமே தங்கம் பதமாகச் - சேர்த்துமே
பார்க்க எடைரண்டும் பதிவான தங்கமாம்
யேர்க்குமே தங்க மிறங்குமே - மூர்க்கமாய்க் 940

காந்தியாய் நிற்கும் கனகமதனை
சேர்ந்து எடுத்துச் செலவுசெய்து - பாந்தமா
யோகமெனப்பாரு உண்மைரச வாதிகளே
போதமென நினைத்துப் போற்றுமே - வாதைப் 941

படாமலே செம்பைப் பதமாகப் பார்த்துத்
தொடாமலே கன்னிதனைத் துப்புரவாய் - வடாமாய்ச்
செம்பெல்லா மிப்படியே சேர்த்துமே முன்தோய்த்து
வம்பாக வெட்டை வலுவானால் - பின்பாக 942

## 933 - 942 உரை. பித்தளைச்செம்பு கொடுக்கும் வகை

வெடியுப்பு சீனம் குன்றிமணிப் பருப்புத்தூள் இம்மூன்றையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கழுதைநீர் விட்டுக் குழப்பி வைத்துக்கொள். பித்தளையில் இருந்து பிரித்தெடுத்த செம்பினைப் பழுக்கக் காய்ச்சி மேற்படி குழம்பில் தோய்த்து ஒடியும் பருவத்தில் எடுத்துவை. துரிசு ஒரு பலம் கெந்தகம் முக்காற்பலம் இலிங்கம் அரைப்பலம் வீரம் காற்பலம் இந்நான்கும் கழுதைநீர் விட்டரைத்துக் கழுதைநீரில் குழப்பி மேற்படி தகட்டைக் காய்சித் தோய்த்து எடுத்து நொறுக்கு வெள்ளியில் கொடு. எட்டிலொன்று கொடுத்துருக்கித் தங்கமும் சேர். நல்ல தங்கமாகும்.

941 -942 அறிவுரை

## செம்பை நொறுக்கு வெள்ளியில் கொடுக்கும்போது தோய்க்க வேண்டிய முறை

கெந்தியுடன் சூடன் கிருபையுள்ள வீரமுடன்
வந்துமே தோய்க்க வளமையாம் - பிந்தாமல்
செய்தால் பலனுண்டு செய்யாதே போனால்
நய்தாலுனக் கென்ன நாடுமே - பைய 943

முன்தோய்த்துப் பின்தோய்த்து முக்கியமாய்க் கட்டும்
சொன்னா லிதுசெம்பு சொர்ணமாம் - நன்மையாம்
இப்படியே தோய்த்தா லெளிசாகும் வாதம்
கைப்படியுங் கைபாக மாகுமாம் - எப்படியும் 944

தோய்த்து எடுத்துத் துப்புரவாய் வெள்ளிதனில்
பாய்ச்சவே பொன்னும் பலனாகும் - வாய்ச்சுமே
இருக்குமென யோசனைக ளெண்ணியே செம்பைப்
பெருக்கவே உப்பில் பலப்படுத்து - நருக்க 945

மின்னூதி யுப்புதனில் மாளாமல் தோய்ச்சு
நன்னயமாய்க் கெந்திதனில் நாடியே - முன்னே
பழுக்கவே காய்ச்சிப் பதமாகத் தோய்த்தால்
வழுக்கவே தங்கம் வளமாகும் - இழுக்கு 946

வராதின்னஞ் சொல்வேன் வல்லமையாய்க் கேளு
தராதரத்தில் தான்விளையும் தாம்பூரம் - பராமுகமாய்த்
தகடா யடித்துத் தாக்கவே கேளும்
பகடா வெடியுப்புப் பலநாலு - முகடாகச் 947

சீனமது ரண்டரையாம் சித்தமாகப் பொடித்துப்
பானக்கரண்டிதனில் பதமாகத் - தானுருக்கி
உருக்கியே கேளு உண்மைரச வாதிகளே
பெருக்கவே செம்பைப் பிலமாக - நருக்கவே 948

பழுக்கவே காய்ச்சிப் பதமா யெடுத்து
நழுக்கவே எடுத்து நலமாக - வழுக்காய்த்
தோய்ச்சு எடுத்துப் துப்புரவாய் வெட்டையாய்ப்
பாய்ச்சு மதிநொறுக்கு பாகமா - வாய்ச்சு 949

எடுத்துப் பதம்பாரு இன்பரச வாதிகளே
கடுத்துமதி எட்டிலொன்னு காரியமா - படுத்துமே
கொடுத்துக்கோ மாற்றாகுங் குற்றமிக வாராது
தடுத்துமே இந்தஇன்பந் தானே - படுத்துமே 950

செய்யவே வேதையாம் செப்ப முடியாது
பையவே யிப்பொருளைப் பார்த்துமே - மெய்யாம்
நொடிவித்தை யாகுமே நுண்மையாய் வேதை
படியாகப் பார்த்துப் பதமாகப் - பொடியாக 951

மட்டுமே தோய்ந்து மயங்கித் திரியாமல்
செட்டுமே பார்க்கச் செயமாகும் - விட்டுமே
முன்பார்த்துப் பின்பாரு முக்கியமாய் ஆகும்
பொன்மாற்றுப் போலே புகட்டுவீர் - தென்பாக 952

இருந்து முடித்து இதமாகத் தான்பாரு
அருந்தினா லாகும் அதன்பலந்தான் - பொருந்தினால்
பொருத்தங்க ளாகும் போதமட நெஞ்சே
பருத்ததினா லென்ன பலனாமோ - சிறுத்துப் 953

பார்த்துப் பலப்படுத்து பாகமாய்ச் செய்தால்
சேர்த்துமே தங்கம் சிக்குமே - நேர்த்தியாய்
அறிந்து ரசவாதம் ஆண்மையாய்ப் பாரு
பொருந்துமே நல்லாகப் புக்குமே - இருந்து 954

## தாமிர பற்பம்

இரவிநீறச் சொல்வேன் நலமாகக் கேளும்
பரிந்துமே பாக்கியங்கள் உண்டாகும் - சரியாகச்
சொல்லுவேன் வெள்ளீயம் சிறப்பாக நாலுபலம்
வெல்லவே வங்கத்தின் தானிமிளை - நல்லாக 955

உருக்கி அயக்கரண்டி ஊணப் பொடித்து
நருக்கென்று போடு நலமாகப் - பெருக்கப்
போட வுடையும் பின்புகேள் வாதிகளே
ஆட வரைக்க அடைவாகச் - சாடவே 956

வெண்கருவை யூற்ற வெண்மை எருக்லம்பால்
முன்னமே மூன்றுநாள் விட்டுவைக்கத் - திண்ணமாய்
முரிந்து இருக்க முதன்மைபெறச் செம்பாகி
நரிந்துமே மத்திட்டு நலமாகப் - பரிந்து 957

கடைந்து தெளிவிறுத்துக் காரியமாய் ஊத்தி
தடைந்து அரைத்துத் தனிரவியில் - உலர்ந்து
எடுத்துப் புடமிட்டு ஏத்தமாய்ப் பாரு
கடுத்துமே வெண்ணீறு கணக்காபடுத்து 958

இருக்காதே போனா லின்பரச வாதிகளே
திருத்தியே பின்பெருக்கால் தீருமே - வருத்திப்
புடமிட் டெடுத்துப் புகழாக வீரத்தை
நடமிட்டு நாலிலொன்று நாட்டியே - திடமாக 959

அரைத்துப் புடமிட்டு ஆனவெண்ணீறாகும்
பரைத்து எடுத்துப் பதம்பார்த்து - நிரைத்து
ஆட்டியே வீரத்தை அன்பாக நாலிலொன்று
மூட்டியே சேர்த்து முக்கியமாய்க் - காட்டியே 960

அரைத்துமே தாம்பூரம் ஆன தகட்டில்
வரைத்துமே அங்கி வலுவாக - நிரைத்துக்
காயவைத்துப் போடு கனக்க வெண்ணீறாகும்
சாயவைத்துச் சாத்திரத் தனைமறைத்தார் - உபாயமாய் 961

சொன்னார் சில சித்தர் சூழ்ச்சமாய்த் தான்மறைத்து
நன்னயமா யுலாவில் நாட்டினேன் - பின்னேகேள்
தாம்பூரநீறில் சகலசரக் கனையு
மேங்கியே தேடா திருந்திடுமே - ஆங்காணும் 962

தங்கமுதல் நீறும் தாழ்ச்சியில்லை வேதையாம்
மங்கலமா யென்றென்றும் வாழலாம் - இங்கிதமாய்
அரண்பீசங் கட்டும் ஆதிக் கவுனமாம்
பரன் போலச் சதாசிவமாம் பண்பாய் - வரம்அருள 963

துரிசதுவும் நீறும் தூயவே மாத்தாகும்
பரிசிக்குஞ் சேனை பதம் நலகும் - உரிசையாய்
தாளகமுநீறும் தாழ்ச்சியில்லாத் தங்கமாம்
மீளவே வாதமுடுக்கி வரும் - தோழாகேள் 964

வெடியுப்புக் கட்டும் வேதை மிகவாகும்
அடியோட வொன்னும் அளவாகும் பிடியாகும்
படிப்படியா யேறும் பத்தரச வாதிகளே
துடியான வாதம் சொலிக்குமே - முடியவரும் 965

இத்தனையுந் தான்வருகும் இயல்பான செம்பைப்
பத்தியாய் நீத்தும் பதமாகும் - முத்தியாம்
ஆங்கார மாகஅடைவுடனே செம்பைப்
பாங்காக நீக்கிப் பதமாக்கு - ஏங்காணும் 966

வாதமது வெல்லாம் வகையுடனே கேட்கும்
சேதப்படாது செயமாகும் - போதம்
வருகுமே சேரவலுமையாய்ச் செய்தோர்
பெருகுமே சொல்ல விதமாகத் - தருகுமே 967

யென்றுமுனி கேட்டு இயல்பா யுலகத்தில்
நன்றுமே சீடருக்கு நல்கினார் - அன்றுமுதல்
கேட்டா ருலகத்தோர் கீர்த்தியாய்த்தான் மகிழ்ந்து
தாட்டிகமா யூகிமுடின தக்காரஞ் - சூட்டியே 968

செயமான பாகம் செயமான தாம்பூரம்
நயமாக நீலகட்டனாடியே - பயமில்லாச்
செய்து பிலபடுத்து செயமாக வாழ்கவே
நைதுவிடை கொடுத்தார் நாடியே - மெய்யா 969

யிருமென்று சொன்னாரின்பமாய்ச் சுண்ணம்
திருமால் குகை பாகந்திட்டமாய்ப் - பெருகவே
யெரியினுட பாகமின்ப வர்ண மபிதானம்
பரிசேற வர்ணமுதல் பாடவே - சரியாகப் 970

## 943 - 970 உரை.

வசம்பினை மின்னல்போல் ஆகும் பருவம் வரை ஊதி எடுத்து உப்பில் தோய்ப்பது சிறப்பு. மற்றவை முன்கூறியவை.

(943 - 954 அறிவுரை)

## 954 - 970 தாமிரபற்பம்

வெள்ளீயம் நாலுபலம் அதனெடைநிமிளை இரண்டும் சேர்த்து உருக்கு. உடையும் எடுத்துக் கல்வத்தில் போடு. அரைக்கும் முறை அறி. எருக்கம்பாலின் முட்டையின் வெண்கரு விட்டு மூன்று நாள்வை.

கடைந்து தெளிவிறுத்து முன்கூறிய வெள்ளீய நிமிளை நொறுங்கலில் விட்டு அரை. உலர்த்திப் புடமிடு. நீறாகும். நீறாகாவிட்டால் பின்பும் முன்போல் செய்து புடமிடு. வெண்ணீறாகும். நாலில் ஒன்று வீரம் சேர்த்து அரைத்துத் தாம்பூரத்தகட்டிற்கு வலுவாக அங்கிபூட்டு. காயவை. புடம்போடு. வெண்ணீறாகும். சித்தர் நுட்பமாக மறைத்துச் சொன்னார். தாம்பூரம் நீறினால் எல்லாச் சரக்கும் ஓடாமல் கட்டும். தங்கம் நீறும். மங்கலமாக என்றென்றும் வாழலாம். ரசம் கட்டும். பறக்கலாம். துரிசு நீறும். மாற்றாகும். தாளகம் நீறும். வெடியுப்புக் கட்டும்.

**966 - 970 அறிவுரை**

## செயநீர் செய்யவேண்டிய காலம்

பாடுவேன் கேளும் பதியவே கைபாகந்
தேடுவீர் சொல்வேன் செயமாக - நாடுவீர்
செயநீரு செய்யச் சிறப்பான காலங்கள்
அபயமில்லா பங்குனியும் பற்றுவீர் - நயமாகும் 971

தையோடுயரம் தண்மையிது காலம்
மெய்யா யிருகாலம் விளைவாகும் - பொய்யல்ல
வுப்பு வுபரசமு முண்மையாய்ச் சுண்ணமாம்
நப்புநவ ரத்தனம் நவலோகம் - இப்புவியில் 972

சுண்ணமாம் வேதை சுருக்காகும் காரமாம்
நன்னயமாய்த் தண்ணீராம் நாடுவீர் - தன்னை
யெடுக்கச் சலமுடியா யின்பமா யுத்தாகும்
அடுத்துமே காரம் அடைவாக - இருக்கும் 973

சரக்கெல்லாங் கட்டுஞ் சத்தியமாய்ச் சொன்னேன்
உரக்கவே யாகு முறுதியாய் - கரைக்குஞ்

சொன்னேன் செயநீர்க்குச் சுருக்கான காலம்
நன்னயமாய்க் கட்டும் வகை நாட்டுவேன் - முன்னே 974

**971 - 974 உரை வேண்டாம்**

## சரக்குக் கட்ட

சரக்கென்ற தெல்லாஞ் சல்தியாய்க் கட்ட
நிரைக்கவே சுண்ணத்தால் நீகட்டு - வரைத்து
தயிலத்தால் கட்டு தண்மையாய்த் திராவகத்தால்
பயிலாகக் கட்டும் பதம்பாரு - ஓயிலாக 975

செயநீரால் சுருக்கு செப்பமாய்ப் போடு
நயமாகக் கட்டுமது நாடியே - பயனாகத்
தாக்கிச் சுருக்கிட்டுத் தடையறவே தானெடுத்து
பாக்கியமாய்ச் சுக்கான்பதக்கு நீர் - நோக்கியே 976

நடுவில் வைத்துத் தானெரிநீ நன்மையா யோடாது
பிடிபடவே பின்பு பிரியமாய் - திடமாக
சுருக்கிட் டெடுக்கசுக்காநீர் தன்னில்
பரிக்கிட் டெரிக்கப் பதமாகு - நருக்கிடவே 977

யெரித்துமே யிப்படியே யின்பமா யஞ்சிதிறம்
வருத்தி யெடுத்தால் வகையாகும் - கருத்தாய்ச்
சரக்கு மடிக்கும் தடைப்படுமே ஓடாது
பருக்க எடை போகாபண்பாகும் - நெருக்கும் 978

நவலோகம் பாயும் நல்ல தங்கமாகும்
சவம்போல சேர்ந்துமே சாகும் - தவமாகும்
இப்படிச் செய்யாம விதமாய்ச் சுருக்கிட்டு
வப்படியே நெருப்பில் வகையாகத் - துப்படியாய் 979

வைத்தால் புடத்தில் வகையில்லா தோடிவிடும்
செத்தால் சரக்கு செயமாகும் - பத்தவே
தாகட்டுஞ் சுண்ணநீர் தன்னி லெரித்திடுநீ
பாகமாய் நாளாகப்பாருநீ - யோகமாம் 980

கட்டுவகை சொன்னேன் காலமுதல் சொன்னேன்
மட்டு வகைக்கால மதிவு கேள் - முட்டவே
வழலை முடிக்கும் வகைகாலஞ் சொல்வேன்
பழகியிருந்து பதிவாகத் - தழலான 981

**975 - 981 உரை வேண்டாம்**

## வழலை முடிக்கும் காலம்

சித்திரை வையாசி சிறப்பான ஆனியாம்
பத்தியாய் சுக்கான் தனைநீத்து - முத்தியாய்
திராவகத்தை விட்டுத் தப்பாத் தெளிவிறுத்து
பராமுகமாய்க் காயும் பதமாகும் - நராபோகம் 982

கசியா திருக்குங் கலக்கமற்ற நெஞ்சே
பதியான நாளில் பலமாக்கு - சதியாக
காலமில்லாக் காலத்தில் கனக்கவே செய்து
சாலாகக் கசிவாகித் தானெடுத்து - ஏல 983

வெடுத்து எரித்து இதமான சாத்திரம் பொய்
யடுத்துமே சொல்லா தறிவுபார் - தொடுத்து
காலமறிந்து காலத்திற் கூடும்
ஞானம் புவியிலே நாடுவீர் - சோலாகும் 984

**982 - 984 உரை வேண்டாம்**

**இனி மேலுள்ள பகுதி வெளிப்படை. உரைவேண்டாம்.**

## செந்தூரம் வைக்கும் காலம்

சவுக்காரம் முடிக்கச் சாத்தினேன் காலம்
கவுக்காரச் செந்தூர காலங்கேள் - பவமாக
கனத்ததோர் செந்தூரங் கடிதாக வைப்பதற்கு
இனத்தையே சொல்வேனி னிதாக 985

சொல்லக் கேள்வாதிகளே சூழ்ச்சியாச் செந்தூரம்
அல்லக்கேள் காலம் அறிந்துமே - நல்லாய்
வைத்து எடுக்க வரிசையாய் மாதத்தை
சித்தான மேடமொடு சீக்கிரமாம் - பத்தியே 986

ஆடியொரு ஆவணியும் ஆனபுரட்டாசி தனில்
தேடியே திராவிதத்தைத் திட்டமாய்ப் - பாடியே
செய்து முடித்தால் செயமாகும் வேதை
கைது கனகமாம் காரியமாம் - மெய்யாய் 987

எரித்துமே நீபாரு ஏற்றநல்ல காலம்
அரித்துமே செந்தூரம் ஆகுங்காண் - சரித்து
ஆளலாம் யோகம் அடைவான ராசரீகம்
வாழலாம் செந்தூரம் வண்மையாம் - ஆளாக 988

வேளாளர் தாம்பயிரை விரும்பி யுழுததுபோல்
தாளான செந்தூரம் தளவாயாம் - கேளாய்
செய்தால் முடியாது சிறப்பாய்ச் சிவயோகி
பையவே தொட்டால் பலிக்குமே - மெய்யாகும் 989

## புடபாகம்

இத்தனையுஞ் சொல்லி யிதமாய் உரைத்தேன்யான்
பத்தனென்றால் கண்டு பலப்படுவான் - சித்தமாய்ப்

புடம்போடச் சொல்வேன் பேறான காடை
நடமாடு விராட்டிநல் ஒன்று - திடமாக 990

கவுதாரி விராட்டி கனமா யெருமூன்று
நவுதாரி சேவல் நலம்பத்துப் - பவமாகும்
பண்ணிப் புடவிராட்டி பதமாக ஐம்பதுதான்
எண்ணிக் கனபுடமே எழுநூறாம் - பின்னாம் 991

கசபுடமே விராட்டி கடிபடவே ஆயிரமாம்
தசமாக இப்படியே சாற்றுவீர் - நசமாக
இந்தப் படிபோட்டால் இன்பரச வாதிகளே
சுந்தரமாய்ச் சரக்கு சுகமாகும் - முந்தவே 992

காலகா லத்திலே காற்றடித்துத் தாழைமலர்
ஏலாகப் பூத்த இடமதைப்பார் - பாலிலே
நீர்கலந்த பாலை நினைவாகத் தான்பிரித்து
ஆராக வேகுடிக்கும் அன்னம்போல் - நேராக 993

செந்தூர காலஞ் செயமறிந்து செய்தால்
வந்துமே தங்கம் வரிசையாம் - பிந்தாமல்
செய்து முடித்துச் சிறப்பான காலத்தில்
பையஅந் நாளறிந்து பற்றிக்கொள் - மெய்யாய் 994

அந்தந்த மாதம் அடைவாகச் செய்யாமல்
சிந்தைதடு மாறித் திரியாதே - முந்தவே
காசி மகாமேரு கல்லுப்புச் செங்கல்மா
வாசனை யாயெரித்து வாங்கிக்கோ - தேசமெல்லாம் 995

## ஊத்துமுறை

ஊத்துமுறை சொல்வேன் உண்மையா கக்கேள்
பார்த்துமே சுண்ணமெனப் பண்ணக்கேள் - சேர்த்து

துருத்தியொன்று ஊத்துத் துப்புரவாம் சுண்ணம்
பருத்திபோல் பூத்துப் பதமாகும் - வருத்தி 996

சத்து உருக்கின்முடி சாத்தி யிருதுருத்தி
புத்தியினால் கண்டார் புகழ்பெறுவீர் - நித்தியமாம்
இரும்புசெம் பாகும் இன்பரச வாதிகளே
பொருந்தவே பார்த்தூதிப் பலப்படுத்து - வருஞ்செம்பு 997

கடுமையாய்ச் சத்துக்குக் காதலரே வாதி
அடுமையாய் நால்துருத்தி ஆகும் - படுமெனவே
இப்படிக்கு ஊதியே யெடுக்காதே போனால்
தப்பிக் கரடுதட்டித் தானாகும் - இப்புவியில் 998

சுண்ணமது ஆகாது சுகமான சத்தியில்லை
பின்னைரச வாதம் பிடியில்லை - நன்னயமாம்
வீணாகப் பாடுபட்டு விரும்பித் திரியாதே
சாணாகத் தான்வயிறு தான்வளர்ந்து - நாணாக 999

நாடித் திரிந்து நலம்கெட்டோ மென்று சொல்லித்
தேடும் படியாகச் சொல்வோரும் - காணிக்கு
இருந்தாலும் சொத்தாகும் இன்பரச வாதம்
பொருந்தாது என்று புலம்பியே - வருந்தி 1000

முடவன் கொம்புத் தேனுக்கு முன்னிலையாய் நின்றாற்போல்
படபடத்துச் செய்து பதைத்து - நடமாடித்
திரிந்து புலம்பித் திரியாமல் நீயும்
அறிந்துமே யூத்து அதையறிவுநீ - செறிந்து 1001

புடமாறிப் போட்டுப் பொல்லாத வாதிகளே
தடையறவே சரக்குத் தான்போச்சு - படபடென
சொல்லித் திரிந்து சொற்பெரிய வாதமில்லார்
முல்லை யரும்புபோல் முன்னகைத்து - இல்லை 1002

என்றுமே சொல்லி யேக்கங் கலக்கமுமாய்
நின்று தவித்துமே நிற்போரும் - நன்றாய்
இல்லையென்று சொல்லி இந்தநூல் பொய்யென்று
கல்லைப் படச்சொல் கதறுவோரும் - நல்லாய் 1003

இருந்தென் பணத்தை இயல்பான வாதத்தில்
பொருந்தச் செலவழித்துப் போபோரும் - வருந்திப்
புடத்தில் சரக்கு போக்கோடே போக
அடமாகச் சொல்லி யலைவோரும் - திடமாய் 1004

தங்கஞ்செய்து தாரேன் தாக்கெனவே சொல்லி
மங்காத தங்கத்தை வாங்கியே - யிங்கிதமாய்
எடுத்துக்கொண் டோடி இயல்பாகத் தேடிவரப்
பிடித்து மயிரைப் பிடிப்போரும் - அடுத்து 1005

நாதவிந்தை வாங்கி நல்கப் புடம்வைத்துப்
பாதகத்தைச் செய்து பதைப்போரும் - பேதமாய்
நின்று திரிந்து நினைவாகத் தங்கத்தைக்
கண்டுமே செய்து கதறுவோரும் - நன்முய் 1006

இருக்கப் புடத்தை யின்பமாய்ப் போட்டு
நருக்காய்ச் சரக்கொன்றாய் நாடியே - பெருக்கச்
சொன்ன படிபோலச் சூழ்ச்சிமாய்த் தான்போடு
நன்னயமாய்ச் சரக்கு நாடுமே - பின்னை 1007

தன்புத்தி யாற்செய்து தவித்துத் திரியாமல்
என்புத்தி சற்றே இயம்பியே - நின்புத்தி
திபிடம் புடம்போட்டுத் திடமாய் எடுத்தால்
பட்டபா டெல்லாம் பலிக்குங்காண் - முட்டவே 1008

## எரிப்புப் பாகம்

எரிப்பினுட பாகம் இதமாகச் சொல்லுகிறேன்
சரியாய் எரித்தெடுக்கத் தான்குணமாம் - பரியாக
ஒருவிறகு தீபம் உற்றரெண்டாம் விறகு
திருவாக கமலாக்கினி செப்பவே - பருக்கி 1009

அஞ்சுவிறகு அடைவாய்க் காடாக் கினியாம்
கொஞ்சுமே வாதி குணமறிவான் - வஞ்சமென
எரித்தாலோ மிஞ்சி யின்பரசம் போகும்
வருத்தால் கறுத்து வளமில்லை - சரித்து 1010

மிஞ்சினதீ யாகில் வெறும்பானை யாயிருக்கும்
கொஞ்சமது வானால் குறையாது - வஞ்ச
இரதமது சாகாது ஏத்தகுப்பி தானிருக்கும்
சிரதமே யொன்றுஞ் சிறப்பில்லை - வரதம் 1011

தெரியுமெனச் சொல்லித் தேம்பித் திரிவோரும்
பரிசாகப் பண்ணிப் பதைப்போரும் - சிரிப்பவனாய்
நித்தாடல் தானே நேசமாய்க் கைபாகம்
மிக்காகச் செய்தால் விளையுமே - மெய்க்கவே 1012

## உருக்குக்குக் குகை செய்வதை

வாதியறிந்து வகையாகச் செய்தாக்கால்
பேதிக்குஞ் செந்தூரம் பெலப்படுங்காண் - சேதிதனை
நவலோகச் சத்து நலமாக வேயருக்கப்
பிலமாய்க் குகைவகைகள் பிரபலமாய் - நலமாகச் 1013

சொல்லுகிறேன் கேளு சொற்பெரிய மூசைதனை
வெல்லவே சொல்வேன் விழுப்பமாய் - நல்லாய்

களிப்பொறுக்குப் பத்து காரணமாய்க் கொல்லன் கிட்டன்
தளிப்பலம் பத்து தாகியே - வளியாக 1014

கழுதைலத்தி ரெண்டு காரணமாய் வெண்கல்லும்
பழுதாய்ப் பலம்ரெண்டு பார்த்துமே - வழுவாதே
சீலைசுட்ட சாம்பல் சீராய்ப் பலம் ரெண்டு
வாலைக் கடுக்காய் வகையாகக் - காலத்தில் 1015

கியாழமிட்டு விட்டரைத்துக் கட்டவே மூசை
தயாளி நிழுலுலார்த்தித் தான் பாரு - வியாழமாய்
இட்டுருக்கச் சத்து இன்பமாய் உருகுமென
பட்டுமே நல்ல பதமிதுகாண் - கட்டும் 1016

உபரசங்க ளெல்லாம் உருகுமே மூசைதனில்
அவசரத்தில் செய்து அலையாதே - உவசமாய்
ஒன்றைவிட் டொன்று உறுதியாய்ச் செய்து
என்றைக்கும் நின்றலைந்தும் ஏங்காதே - நின்றே 1017

உருக்குமுகம் பாரு உருக்கினத்தைத் தானெடுத்துப்
பெருக்கவே கீழே பெலமாக - இருக்க
எடுக்கையிலே கோலாடு இன்பமாய் ஒன்றாகத்
திடுக்கிட் டெடுத்தூது செயமாகும் - அடுத்து 1018

ஈரத்தி லூத்தாதே இனியவே ஆறிப்
பாரமா கவ்வெடுக்கப் பக்குவமாய்க் - கோரமாய்
உடைத்து அரைத்து உண்மையாய்த் தானுருக்கப்
படைத்தமணி யாகிப் பலிக்கும் - திடத்தை 1019

அறிந்துமே செய்து அறிவாகச் சத்தெடுநீ
பறிந்துபோ காது பெருமையாய் - நரிந்து

மூசைதான் சொன்னேன் முதன்மையாய்க் கேளும்
தாழாத மூசை தனைவைத்து - வாழாக 1020

## பஞ்சபூதக் குகை

இருக்கவல்லோ சொன்னேன் இன்பரச வாதிகளே
பெருக்கபஞ்ச பூதக்குகை சொல்வேன் - இருக்கக்
கடல்நுரையு மஞ்சுகனக்கவே கற்சுண்ணம்
திடமாக நீர்விட்டுத் திறமாகப் - படவரைத்து 1021

அரைத்துவில்லை காயவைத்து அன்பாகக் கரியில்வைத்து
பரைத்துடனே யூதப் பதமாக - நிரைத்துக்
கடுஞ்சுண்ண மாகும் கடுமையாய்ச் சாரந்தான்
படுமுன் னெடைக்குப் பதமாக - இடுவாக 1022

அரைத்துச்சுண்ண நீர்விட்டு அன்புடனே யூதித்
தெரிபடவே எடுத்துச் சீராகப் - பரிவுடனே
எடுத்துமே பாதி யியல்பான கல்லுப்பு
அடுத்துடனே சேர்த்து அரைத்தூது - படுத்து 1023

ஊதக் கடுஞ்சுண்ணம் உண்மையாய்ச் சீனம்
பாதவே யூதிடவே பதிவாகச் - சேதப்
படாமலே சேர்த்துப் பாங்காய்க்கற் சுண்ணநீறு
அடைவாகச் சேர்த்து அரைத்தூது - திடமாகும் 1024

பஞ்சபூதச் சுண்ணம் பதிவாய்க் குகைபண்ணித்
தஞ்சமாய்த் தார மதில்வைத்து - நெஞ்சே
புடம்போட நீறும் பேறாய்க் குருவாகும்
நடம்போட எல்லாம் நயக்குமே - படமாகப் 1025

பாஷாணஞ் சுருக்கிட்டுப் பத்தியமாய்த் தானெடுத்து
தாழ்வான இச்சுண்ணம் தாட்டிகமாய்க் - கோளாகப்

புடமிட் டெடுக்கப் பெரிய குருவாகும்
திடமுடனே யெல்லாம் சிறப்பதாகும் - நடமாடி 1026

வாதிகளாய்க் கூடி வகையறியா மற்றானும்
சேதிகளே கேட்டுச் செய்வோரும் - நாதியாய்த்
திட்டாமற் கூடித் திரிந்து நகைமூரி
நட்டுமே செய்து நடம்போடும் - முட்டவே 1027

பஞ்சபூ தக்குகையைப் பண்ணவே மாட்டாமல்
கெஞ்சி மணியமெனச் செய்வோரும் - மிஞ்சிய
குன்மம் வலியெல்லாஞ் கெட்டுமே போகும்
வன்மமெல்லாம் போகும்வகையாக - இன்பமாய் 1028

உடலுயிரு போலாம் உண்மையாய்ச் சொன்னேன்
திடமாக மூசைகளைச் செய்து - படமாகக்
கட்டுஞ் சரக்கையெல்லாம் காதல்ரச வாதிகளே
பட்டுமே போகாப் பதமாகும் - முட்டாகப் 1029

பூதக் குகையில் பொருந்தவே வைத்துச்
சேதப் படாமல் செயமாக - வாதமாம்
ளிக்கச் சரக்கு இதமாகத் தான்கட்டும்
பரிக்கக் கரியில் வதிவாக இருக்கும் 1030

கரியில் நின்று ஆடும் காதலாய் வேதை
பரியாக இக்குகையைப் பண்ணவே - வரியாக
கேட்டு முனிதே சேதமில் லாப்பொருளும்
சீக்கிரமாய் வந்து சேருமே - பார்க்க 1031

## சரக்குகள் வைத்தெரிக்கக்கடுஞ்சுண்ணம்

பூதக் குகைசொன்னேன் பொருந்தவே பாரு
வேதைக் கடுஞ்சுண்ணம் விளம்பக்கேள் - வாதைப்

படாமல் கடுஞ்சுண்ணம் வண்மையாய்க் கேளு
தாடாதகல் லுப்பை வைத்துத் தானெரிக்கத் - திடமாய்த் 1032

தாளகத்தைத் தானெரிநீ சாத்தவே கட்டும்
மளமளெனவே வடியடங்கும் வண்மையாம் - தளதளப்பாய்
உருகிமணியாட வுண்மையா ய்ச் சொல்வேன்
திருப்பாய்க்கற் சுண்ண மிரண்டுபடி - பரிவாக 1033

அளந்துமே போட்டு ஆண்மையாய்ப் பூநீறு
தளந்துபடி பத்துத்தான் போடு - வளமாய்க்
கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சவே யுப்பாம்
பரைத்துமே பாணிபத மாகும் - நிரைத்து 1034

விட்டுமே காய்ச்சு விருப்பமாய் உப்பாகும்
செட்டுப் படச்சரக்குச் செயமாகப் - பட்டு
விடுக்கவே தீயில் இன்பமாய்த் தானே
குடுகுடென ஓடாது காரியமாம் - படுகுமே 1035

மடிக்கும் சரக்கு வண்மையாய்க் கேளு
படியாய் இருக்கும் பதமாய் - நொடியாக
ஓடாது வேதைமுகம் ஒத்துமே நிற்கும்
பாடாகப் போகா பயனாகும் - ஏடாகும் 1036

இப்படியே செய்து இதமாய் முடித்துநீ
முப்படியே வேதை முடிவுமாம் - தப்படிய
அஞ்சுநீர் சொல்வேன் அடைவாக வெண்கருவும்
கொஞ்சமுலைப்பாலும் கொள்கையாய் - மிஞ்சுமே 1037

புகைநீரு மாகும் பேர்பெரிய சுண்ணாம்பு
வகையான நீராகும் வண்மைகேள் - தகையாக
எலுமிச்சம் பழமாகும் இன்பமாய் அஞ்சுநீர்
பலுகவே விட்டரைக்கப் பாக்கியமாம் - வலுவாக 1038

சுருக்கிட் டெரிக்கச் சுகமாகக் கட்டும்
இருக்கி யிருக்குமிதில் வேதை - பெருக்கவே
சொன்னசொல் தப்பாமல் சுருதியை யாராய்ந்து
பின்னே யுலாவைப் பிரியமாய் - நன்னயமாய் 1039

பார்த்துமே யெச்சரக்கும் பாகமாய்ச் சுருக்கிட்டுச்
சேர்த்துமே சுண்ணமிட்டுச் சீர்பெறவே - பார்த்துமே
எரிக்கக் குருவாகும் இன்பமாய்ச் சரக்கும்
பரிசிக்க வேதைமுகம் பாருமே - தெரிசிக்கப் 1040

பிழிந்தாலோ சாறுவரும் பேதைமட வாதியரே
அறிந்தாலோ சரக்கை அடைவாகத் - தெரிந்துமே
சரக்கை யிறுக்கும் சலதிபட வாதம்
பெருக்கவே ஏவலது கேட்கும் - வருகும் 1041

## செந்தூரமாக

எனவே தெரிந்து மேன்மையுடன் மாற்று
கனல்போல் சரக்குக் கருணையாய் - இனமாக
சேர்த்துமே செந்தூரம் சேரவே யாகப்
பார்த்துமே இச்சரக்குப் பகருவேன் - நேர்த்தியாய் 1042

உபரசபா ஷரணம் ஒக்கவே செந்தூரம்
பவமாக வுப்புப் பதிவாக - நவமாகக்
காரசா ரத்தோடு கனக்கவே செந்தூரம்
பாரமாய் ஆகப் பதிவாக - நேராக 1043

ஆகாமற் கேணீ அழகாம் சிவகெந்தி
பாகமாய் அப்பிரேகம் பதமாக - நோகாமல்
வெடியுப்புச் சீனம் விருப்பமாய்ச் சேர்ந்தால்
படியாய் அது சிவக்கும் பாகமாம் - துடியாக 1044

செக்கச் சிவக்கும் செயவேதை யகும்
பக்குவமாய் லோகம் பழுக்குமே - இப்புவியில்
வாதியறிய வகை சொன்னேன் புத்தி
சேதியறிந்தால் செயமாகும் - நீதியாய்ச் 1045

சேர்த்து முடிக்கச் செயமாய் இருந்துநீ
பார்த்துக் குப்பியதனைப் பதிவாக்கு - நேர்த்தியாய்
வன்னமின்னங் கேளு வகையான கல்லுப்பு
தன்னுடனே நாகமுடன் தங்கமாம் - பின்னே 1046

இரும்பு கெளரி இனிய நிமிளையுடன்
அரும்பான சூதம் அதில்வர்ணம் - திரும்பாது
கெவுரியுட னெல்லாங் கெடியான வர்ணஇனம்
தயிரியமாய்ச் செய்தால் தனுவாகும் - பவுரிகமாம் 1047

செம்பு பழுக்கும் செப்பமாய் ரசவாதம்
தெம்பாக வந்து செயப்படுங்காண் - நம்பாகேள்
சேர்த்தால் செயமாம் செயமான தங்கமாம்
பார்த்துமே செய்து பலனறிநீ - நேர்த்தியாம் 1048

## நீற்றினத்துக்கு ஆதிச் சரக்குகள்

நீன்றினத்துக் காதி நேரவே சொல்லுகிறேன்
பார்த்துப் புழுகு பதிவீரம் - சேர்த்தால்
பச்சைக் கற்பூரம் பதிவாங் குருவண்டு
இச்சையுடன் சூடன் இன்பமாம் - தச்செயலாய் 1049

நீத்துவநத தானிடத்தில் நேராகச் சேர்த்துப்
பார்த்துப் பொருமிப் பதமாகும் - நேர்த்தியாய்
சுண்ணங் கடுஞ்சுண்ணம் சூக்குமமாய் ஆகும்
பண்ணகமாய்ச் செயநீரில் பரிவாகும் - முன்னமே 1050

## பாகமுறையும் நூல்வந்து விவரமும் வாழ்த்தும்

ஒன்றைவிட் டொன்று உண்மையாய்ச் செய்தால்
நன்றி பலனில்லை நாடாது - பன்றி
உழுததுபோ லாகும் உற்ற ரசவாதம்
எழுது சிவ மற்றதொரு இன்பமாம் - பழுதாகும் 1051

ஊத்துவந்த தானிடத்தில் ஊறி எடுத்திடுநீ
பார்த்து எடுக்கப் பதமாகும் - நேர்த்தியாம்
அந்தந்த இனத்தில் அடைவாக வைத்திடுநீ
முந்தவே தங்கமாம் முக்கியமாம் - சிந்தை 1052

தடுமாற லாகாத் தாட்டிகமாய்த் தான்கேட்டு
படுவாத மெல்லாம் பலனில்லை - திடமாக
சொன்னதுபோல் வைத்தால் சொற்பெரிய வேதையாம்
அன்னதுபோல் நின்று அலையாதே - முன்னமே 1053

வடகிரந்தந் தன்னை வளமாகப் பார்த்துத்
திடமாகவே சிவனுஞ் சித்தமாய் - நடமாடித்
தமிழால் பிரித்துட் சத்தியமாய் சொன்னார்
கவினார்ந்த பார்வதிக்குக் காட்டினார் - திடமாக 1054

நந்திபக்கங் கேட்டு நலமான தன்வந்திரி
சிந்தையுடன் சொன்னேன் தீர்க்கமது - முந்தவே
அகத்தியருங் கேட்டு ஆதியாய் பூகிமுனி
தகத்துடனே சொன்னார்கள் தண்மையாய் - இகத்தில் 1055

**வாழ்ந்து இருப்பீர் வகையாக வாதவுலா**
**சேர்ந்து பாரீல் சிவம் அருள்வீர் - நீந்து**
**சிவனுமை வாழி செப்பரிய நந்தியுமே**
**தவனுமே தன்ம ந்திரி தாங்கவனும் - கவனும்** 1056

அசுவனியும் வாழி ஆதி புலத்தியரும்
விசுவனியும் வாழி விரும்பியே - பசுபாச
அகத்தியரும் வாழி அருள்பெருகும் போவழி
மகத்துடனே வாழி கருணை - மிகப்பெருகும் 1057

யூகி முனி வாழி யுற்றதொரு நூனாதி
பாதியாத் தேரையர் பதிவாழி - தோழர்
உலகத்தோர் வாழியுண்மை ரசவாதி
கலகப்படாமல் கருணையாய்ப் - பலகற்றோர் 1058

வாழி மகாசெல்வம் வாழி யுலாவாழி
பாழித் துலகத்தில் பார்வையாய் - வாழி
எல்லோரும் வாழியேழை ரசவாதி
சொல்லால் பெரியோர் துதிவாழி - எல்லாம் 1059

ஆயிரமும் வாழி ஆதிபதம் பெற்றோர்கள்
பாயிரமும் எல்லாப் பதம்வாழி - ஓயா
ரசம்வாழி வாழி நவின்றகல் லுப்பு
வசமாக வாழி வலுமையாய் - நலமாக 1060

துரிசுதான் வாழி துடியான திராவகமும்
பரிசுதான் வாழி பதமாகப் - பெரிய
தங்கமென்றும் வாழி தாம்பூரம் தான்வாழி
உங்கள்குலம் நாக மெனவாழி - எங்கும் 1061

வடிவாக வாழி வலுமைபெற எல்லோரும்
முடிவாக வாழி முடிந்து. 1062

யூகிமுனிவர் வாத வைத்தியவுலா 1000 முற்றிற்று.

பேராசிரியர்.ந. சேதுரகுநாதன் உரையுடன் முற்றிற்று.

(சிவயோகியவர்கள் எழுதிமுடித்த நாள் 9.2.42)

